

புதுப்பிக்கப்பட்ட சாலொமோன் ஆலயம்.

# The Epistle to the Hebrews

## With Notes, Critical and Explanatory




BY

THE REV. J. LAZARUS, B.A., D.D.

*Retired Missionary of the Danish Mission ; Fellow of the University of Madras ; and Author of 'A Commentary on the Ephesians,' 'A Harmony of the Gospels,' 'A Tamil Grammar,' 'A Dictionary of Tamil Proverbs,' 'From an Indian Garden,' Etc.*

CHRISTIAN LITERATURE SOCIETY FOR INDIA

MADRAS ALLAHABAD CALCUTTA RANGOON COLOMBO

1917

# எபிரேயருக்கு எழுதிய நிருபம்

மூலமும் உரையும்


**ஜே. லாஸரஸ் ஐயர்,** பி. ஏ.; டீ. டி.

*எபேசியர் நிருப வியாக்கியானம், சுவிசேஷ சமரஸம்,*
*பழமொழி அகராதி, இலக்கணம், குறள் மொழிபெயர்ப்பு, ௸*
*இயற்றியவர்*

இதற்கு உரை செய்தவர்



*சென்னைக் கிறிஸ்தவ கல்வி அபிவிர்த்தி சங்கத்தாரால்*
*பிரசுரிக்கப்பட்டது*

**1917**

# PREFACE

ENCOURAGED by the favourable reception of my Commentary on the Ephesians, I have prepared the present work for the use of the Tamil Church. I need not say that this Church is gradually becoming self-conscious as a corporate body. The Epistle to the Hebrews, if carefully studied and its lessons are impressed on those who are or are to be leaders of the Church, will prove most beneficial at the present juncture when the doctrines and practices of the religion of Christ are claiming the undivided attention of all Indian Christians.

In the course of my explanations, for which I am chiefly indebted to English Commentators like Westcott, Farrar, Barnes, Meyer, etc., I have also suggested emendations in the Tamil translation. For one innovation I crave fair criticism, and that is the way I spell *Kiristu*, with ர and not ற as hitherto. The present spelling has no authority for it, except that it follows the present tense particle கிற; and spelling our Lord's second name with a hard ற renders it unpleasantly harsh to the Tamil ear.

May the Head of the Church bless this my effort and make it useful to all Tamil Christians who desire to read and understand this wonderful Epistle which is in the New Testament appropriately placed between those of St. Paul and the other apostles.

J. LAZARUS.

MADRAS,
*March 30, 1917.*

# முகவுரை

சில வருஷங்களுக்கு முன்பு எபேசியர் நிருபவியாக்கியான மெழுதிய நான் அது தமிழ்ச்சபைகளுக்குச் சிறிது உபயோகமாயிருக் கிறதை நன்றியுடனறிந்து, எபிரேயர் நிருபத்துக்கும் உரை செய்யத் தொடங்கி அதைக் கடவுளருளால் இப்பொழுது முடித்துப் பிரசுரஞ் செய்கின்றேன். என்னாற் கூடியவரையும் பல அங்கிலேய வியாக்கி யானங்களின் உதவியைக்கொண்டு தமிழ் நாட்டாருக்கு விசேஷமாய்ப் பயன்படும்பொருட்டு இவ்வுரையை இயற்றலானேன். எம்பெருமா னின் திவ்ய மகத்துவத்தையும், அவரது இரட்சண்யத்தின் முக்கியத் தையும், வீண்சடங்காசாரங்களின் அனர்த்தத்தையும் இந்நிருபத்தி லிருக்கிற வண்ணமாக விவரித்து, தமிழ்ச்சபையார் எவற்றை அநு சரித்து எவற்றைத் திரஸ்கரிக்க வேண்டுமென்பதை அங்கங்கே வற் புறுத்தியிருக்கிறேன்.

மொழிபெயர்ப்பையும் அவசியமான இடங்களிலெல்லாம் இயன்ற வரையும் திருத்தி மூலத்துக்கும் தமிழ் நடைக்கும் ஒவ்வச் செய்திருக் கிறேன். ஒரு பெரிய மாறுதலை இங்கு அறிவிக்கவேண்டும். வழக்க மாய் நமது இரட்சகரைக் "கிறிஸ்து" என்று வல்லின றகரமிட் டெழுதுவதை மாற்றி "கிரிஸ்து"வென்று இடையின ரகரமிட்டெழுதி யிருக்கிறேன். வல்லினம் சுத்த அனவசியமென்பதை இதுவரையும் சத்திய வேதத்தை மொழிபெயர்த்தவர்கள் கண்டறியாதது புது மையே. நிகழ்கால இடைநிலையாகிய "கிறு" என்பதைப்போல கிரேக்கிலில்லாததை, "கிறிஸ்து" என்று அந்நியர்களும் அமங்கல மாய் உச்சரிக்கும்படி எழுதினர்கள். நியாயமாய், எம்பெருமானின் பேர் "க்ரிஸ்து" என்றெழுதப்படவும், மெல்லென உச்சரிக்கப்படவும் வேண்டியது. கற்றோர் யாவரும் இதைச் சீர்தூக்கிப் பார்த்து, வல்லி னத்தைத் தள்ளி இடையினத்தை அங்கீகரித்துக் கொள்வார்களெனக் கோருகிறேன்.

இந்நிருபத்துக்குச் சிரேஷ்ட பொருளாயிருக்கிற எம்பெருமான் இயேசுகிரிஸ்து இந்த என் அற்பக் காணிக்கையைத் தமிழ்ச்சபையின் பிரயோஜனத்துக்கென்று அங்கீகரித்து ஆசீர்வதிப்பாராக.

சென்னை
30, மார்ச்சி, 1917.

ஜே. லாஸரஸ்.

# எபிரேயர் நிருபப் பொருளடக்கம்.

உவைட் சாஸ்திரியார் இயற்றியது.

"குமாரனை நோக்கி: இறைவனே, உம்முடைய சிங்காசனம் என்றென்றைக்குமுள்ளது, உம்முடைய ராஜ்யத்தின் செங்கோல் நீதியுள்ள செங்கோலாயிருக்கிறது." எபி. 1. 8.

## பிரதான ஆசாரியர்ப் பாகம். அதி. 1–10. 18.

**கிரீஸ்து இயேசுவாகிய மனிதன்—இரக்கமுள்ள, உத்தம, நித்திய, பூரண, சிறந்த, சக்தியுற்ற, பரிதாபமுற்ற, ஜீவித்திருக்கும் பிரதான ஆசாரியர்.**

| தன்மையிலும் குணத்திலும் | வரிசை முறையில் | ஊழியத்தில் |
|---|---|---|
| 1 கடவுளின் ஒரே பேறான குமாரன். 2. இரக்கமும், விசுவாசமும், பரிதாபமுமுள்ள மனிதகுமாரன். | மெல்கிசேதேக்கின் முறை. | ஆரோனிலும் மிக்கச் சிறந்தது. 8. 6. |
| தூதர் அதிகாரங்கள். / மோசே அதி. / யோசுவா அதி. | மெல்கிசேதேக் கதிகாரங்கள். | கூடார அதிகாரங்கள். |

| அதி. | பொருள் |
|---|---|
| I | முன் தீர்க்கர் மூலமாய்ப் பேசின கடவுள் இப்பொழுது (1) நன்மையிலும், (2) தொழிலிலும் தூதரிலுஞ் சிறந்த குமாரன் மூலமாய்ப் பேசுகிறார். |
| II | [ஆதலால், நாம் அவர் வார்த்தையை அதிகமாக மதிக்க வேண்டும்.] இரக்கமும் விசுவாசமுமுள்ள பிரதான ஆசாரியராகும்படி அவர் சிறிதுகாலம் தூதருக்குத் தாழ்ந்தவரானார். |
| III | அவர் மோசேயிலுஞ் சிறந்தவர். மோசே ஊழியன்; அவரோ குமாரன். (அவர் சொல் கேட்கப் பாருங்கள்.) |
| IV | [அவநம்பிக்கைப்படாதேயுங்கள்.] அவர் யோசுவாவிலும் விசேஷித்தவர். அவர் கானானைவிடச் சிறந்த ஓய்வளிப்பவர். இந்தப் பிரதான ஆசாரியரை அணுகுங்கள். |
| V | நியமிப்பினாலும் அநுபவத்தினாலும் நமக்கு நித்திய பிரதான ஆசாரியராகப் பூர்த்தியான பக்குவமடைந்தவர். |
| VI | 5. 12–6. 20: நடபடிப் போதனை. உங்களுக்கு அதிக தேர்ச்சி அவசியம். பாலபருவத்தை விட்டுப் புருஷ பருவத்தை நாடுங்கள். ஆபிரகாமைப்போல உறுதி வாக்கை நம்புங்கள். |
| VII | தேவகுமாரனை இயேசு அரசனும் ஆசாரியனுமாக நியமிக்கப்பட்டவர். தம்மை ஒரேதரம் பலிசெலுத்தி, அழியா ஜீவியமடைவது, தம்மிடம் வருவாரை முற்றுமுடியக் காக்கவல்லவர். |

அதி. 8, 9, 10 முன் கூறியதை இன்னொருவிதமாய்க் கூறுகின்றன. அதி. 8. 1 காண்க.

| அதி. | பொருள் |
|---|---|
| VIII | இன்னொருவிதமாய்: இரக்க உருக்கமுள்ள நமது பூரண பிரதான ஆசாரியர், முன்னடையாளக் கூடாரம் ஒழிந்தபின், இப்பொழுது மெய்யான பரமகூடாரத்திலே நமக்கு ஊழியஞ் செய்கிறார். இது திவ்விய ஏற்பாடு. |
| IX | கூடாரமும் அதன் ஆலய சேவையும் தற்காலத்தவை இயேசுவைக் குறிப்பித்த அவைகள் அவரிலே நிறைவேறின. அவர் தம்மை ஒரேதரம் பலிசெலுத்தி இப்பொழுது பிரவேசித்திருக்கிற ஸ்வர்க்கத்தில் நமக்காகப் பரிந்து பேசுகிறார். |
| X | ஆசாரியரின் அநுதின பலிகள், காணிக்கைகள் அனைத்தும் செய்ய முடியாததை அவர் தமதொரே பலியினால் செய்து முடித்து, தம்மிடம் சேர்வாரைப் பரிபூரணப்படுத்துகிறார். |

## போதனைப் பாகம் 10. 19—13 அதி.

| அதி. | பொருள் |
|---|---|
| (10. 19—) | ஆனதுபற்றி நாம் விசுவாசத்துடன் அவரை அணுகி, அவர் வருமளவும் பாடு படுவோமாக. பின்வாங்கி, அறிவுக்கு விரோதமாக பாவஞ் செய்யாதேயுங்கள். |
| XI | விசுவாச விஷயமாய் நீங்கள் கவனிக்கவேண்டியவை:—1. அதன் தன்மை;–2. அதன் பொருள்;—நித்திய, சர்வவல்லபச் சிருஷ்டிகள்:–3. அதன் சக்தி. இது 15 உதாரணங்களால் விளக்கியிருக்கிறது. இவ்வதிகாரம், விசுவாசம், கிரியைகள் இரண்டும் நிறைந்தது. |
| XII | இதனால், இயேசுவை லக்காக வைத்துக்கொண்டு, விசுவாசத்தோடே ஓடுங்கள் கண்டனை சகியுங்கள், கை யயர்த்துங்கள், சமாதானமாய் நடவுங்கள். இந்த ஏற்பாட்டின் பெருநன்மைகளை நினைத்து, சொல்வதைக் கவனியுங்கள். |
| XIII | நேசியுங்கள், சுத்தமாயிருங்கள், பொருளாசை அகற்றுங்கள், இவைகளை நம்புங்கள்: கள்ளப் போதகருக் கிடங் கொடாதேயுங்கள், இயேசுவின் நிந்தையைச் சகியுங்கள், ஸ்தோத்திரித்து நன்மை செய்வோமாக. சமாதானக் கடவுள் உங்களைக் கிரிஸ்துவில் பூர்த்தி செய்வாராக. நான் எழுதியதை நல்மனதுடன் அங்கீகரிக்கக் கோருகிறேன், உங்களுக்குக் கிருபை வாய்ப்பதாக. |

"இயேசுகிறிஸ்து நேற்றும் இன்றும் என்றும் மாறாதவராயிருக்கிறார்." எபி. 13. 8.

| | |
|---|---|
| பொதுப் பொருள். | 1-ம் பாகம்: நீதிநூல், தாட்டாந்தம், வேதசாஸ்திரம் அடங்கியது. அதி. 1—10. 18 வரைக்கும். 2-ம் பாகம்: போதனை அதி. 10. 19—முடிவுமட்டும். இந்நிருபத்தில் போதனையும் சாதனையும் கலந்துவருகின்றன. |
| அல்லது | I. விசேஷித்த வெளிப்பாடு. II. விசேஷித்த பிரதான ஆசாரியர். III. விசேஷித்த ஆராதனையும் பலியும். IV. விசேஷித்த ஜீவிய நோக்கம். |
| விஷயம். | பழைய புதிய உடன்படிக்கைகளை ஒத்துக்காட்டியது. பழையதைப் பழுது செய்யவில்லை. புதியதை ஸ்திரப்படுத்தலே. விசேட போதனைகள் அடங்கியது. |
| கிரீஸ்து. | தூதரிலும் விசேஷித்தவர். மோசே, யோசுவாவிலும் விசேஷித்தவர். வரிசையில் ஆரோனிலும் விசேஷித்தவர். ஊழியத்திலும் அவ்வாறே: இதனால் நாமும் விசேஷித்தவர்களாயிருக்கவேண்டும். |
| மூலவாக்கியம். | அதி. 9. 14; 1. 4; 11. 40-ம் காண்க. "நித்திய ஆவியினாலே தம்மைத்தாமே பழுதற்ற பலியாக தேவனுக்கு ஒப்புக்கொடுத்த கிரிஸ்துவினுடைய இரத்தம் ஜீவனுள்ள தேவனுக்கு ஊழியஞ்செய்வதற்கு உங்கள் மனச்சாட்சியைச் செத்த கிரியைகளறச் சுத்திகரிப்பது எவ்வளவு நிச்சயம்!" எபி. 9. 14. |
| மூலசொற்கள். | 1. விசேஷித்த என்கிற பதம் அதிகாரத்துக்கு ஒன்றாக 13 தரம் வருகிறது. 2. இன்னுமதிக. 3. இன்னும் பெரிய. 4. புதிய. 5. இன்னும் எத்தனை அதிகமாக. |
| யாருக்கெழுதியது. | ஒருவேளை எருசலேமிலிருந்த கிரிஸ்த யூதர்களுக்கு: (1) கிரிஸ்துவின் இரண்டாம் வருகையின் தாமதத்தாலும்; (2) உபத்திரவத்தாலும்; (3) தங்கள் பூர்வ அலங்கார ஆராதனைச் சடங்காலும் மருளவிழச் சோதிக்கப்பட்டவர்கள். |
| நிருபாசிரியர் கடவுளே 1. 1. | சிலர் பவுல், சிலர் அப்பொல்லோ என்கிறார்கள். ஒருவேளை போவானே எழுதியிருக்கலாம். ஓரிகென் சாஸ்திரி, இந்நிருபம் எழுதியதின்னாரென்று கடவுளுக்குமாத்திரம் தெரியும் என்கிறார். அதன் உத்தம புருஷன், மெல்கிசேதேக்கைப்போல அதற்கு வமிசவரிசை கிடையாது. |
| நடை. | தெளிந்த, தூய்மையானது. செய்யுள் அலங்காரத்துக்கொத்தது; சொல்வழு, இலக்கணவழு. ஒழுங்கீனம் கிடையா; அலங்காரம் ஆறுபோல் பாய்கிறது சொல்லணிகள் பலவுண்டு. |
| எழுதிய காலம். | இதற்கு அதி. 5. 11; 10. 32; 8. 13 காண்க. எருசலேமின் அழிவுக்குச் சமீபத்தில் (கி. பி. 70) எழுதப்பட்டதாகத் தோற்றுகிறது; அதாவது கி. பி. 64–63-க்குள். |
| முறை. | 1. கிரிஸ்துவின் ஊழியம் பூர்த்தியும் உத்தமமுமானதெனத் தெளிவறக் காட்டியது. 2. வாக்குச்செய்த கடவுள் உண்மையுள்ளவரென ஸ்திரப்படுத்தல். 3. பூர்வ சாதுக்களின் உண்மைப்பாடும் பொறுமையும்; இயேசுவின் முன்மாதிரி. 4. மருள விழுதலைப்பற்றிய எச்சரிப்புகள். 5. உண்மைப் பாட்டின் நற்பயன் கூறியது. கடவுள் சகாயம் கோரல். |
| குறிப்புகள். | அதிகாரங்களுக்கு இடையிட்ட ஒரு சித்திரமெழுதி அதிலே (1) விசேஷித்த; (2) இரத்தம்; (3) ஆசாரியன்; (4) செய்வோமாக; (5) பழைய ஏற்பாட்டு வாக்கியங்களை-அவ்வவ்வதிகார இடையில் எழுதிக்கொள்ளவும். இந்நிருபத்துடன் லேவியராகமத்தைத் துணைநூலாக நன்றாய் வாசிக்கவும். |

"மேலும், தமது மூலமாய்க் கடவுளிடத்தில் சேருகிறவர்களுக்காக வேண்டுதல் செய்யும்படிக்கு அவர் எப்பொழுதும் உயிரோடிருக்கிறவராகையால் அவர்களை முற்றமுடிய இரட்சிக்க வல்லவராயுமிருக்கிறார்." எபி. 7. 25.

### அதிகாரப் பெயர்கள்.

I. நித்திய தேவகுமாரன் அதி.
II. மெய்யான மனிதகுமாரன் அதி.
III. மோசே „
IV. யோசுவா „
V. அருமபொருள் „
VI. நங்கூர „
VII. நித்திய „
VIII. உடன்படிக்கை „
IX. கூடார „
X. பிரதிஷ்டை „
XI. விசுவாச „
XII. பர்வதங்கள் „
XIII. பாளையத்து „

# நூன்முகம்.

## பொது.

சத்தியவேதம் என்னப்படுகிற கிரிஸ்து சமயநூல் ஒருவரால் எழுதப்பட்ட ஒரே புஸ்தகமல்ல. இறைவனே அதற்குப் பரமநூலாசிரியராயினும், அது ஏகதேசம் நாற்பதுபேர் ஆயிரத்தைந்நூறு வருஷ காலத்தில் எழுதின அறுபத்தாறு ஆகமங்கள் அடங்கியது. அந்த நாற்பதுபேர் அரசர்முதல் செம்படவர் ஈருன பற்பல அந்தஸ்துள்ளவர்கள். இவ்வாகமங்கள் அனைத்தும் பழைய ஏற்பாடென்றும் புதிய ஏற்பாடென்றும் இருகூறுகப் பிரிக்கப்பட்டவை. முந்தியவை எம்பெருமான் அவதாரத்திற்கு முன்பும், பிந்தியவை அதற்குப் பின்பும் இயற்றலாயின. பழைய ஏற்பாட்டிலே முப்பத்தொன்பது கிரந்தங்களும், புதிய ஏற்பாட்டிலே இருபத்தேழு கிரந்தங்களும் அடங்கியுள்ளன. ஹிந்துக்கள் தங்கள் நாலு வேதங்களையும், ஆறு சாஸ்திரங்களையும், பதினெண் புராணங்களையும் பேர்பேராக மனப்பாடஞ் செய்துகொள்கிறதுபோல, கிரிஸ்தவர்களும் இவ்வறுபத்தாறு ஆகமங்களின் பேர்களையும் வரிசைப்படி மனப்பாடஞ் செய்துகொள்வது மிக்க அவசியம். அப்பொழுதுதான் வேதாகமத்திலே குறித்த ஒரு வாக்கியத்தை விரைவிலே தெரிந்தெடுக்க முடியும்.

பழைய ஏற்பாடு ஆதியிலே யூதர்களாலேயே ஒழுங்குசெய்து தொகுக்கப்பட்டது. தள்ளுபடி ஆகமங்களும் சில உண்டு. அவைகள் பூர்வத்தில் பழைய ஏற்பாட்டில் சேர்த்திருந்ததாலும், அதிலிருக்கத்தக்க தகுதியற்றவை யானமையால், மார்க்க சீர்திருத்தற் காலந்தொடங்கி அதிலிருந்து நீக்கப்பட்டன. ரோமான் கிரிஸ்தவர்கள் கையாடிவருகிற வேதாகமத்தில் மேற்படி தள்ளுபடி அல்லது கள்ள ஆகமங்கள் அடங்கியுள்ளன. அவை மக்கபெயர் சரித்திரம், யூடித்து, எஸ்தராஸ் முதலியவை. அவற்றைப் புரோட்டெஸ்டாண்ட் கிரிஸ்தவர்கள் வாசித்துப்பார்த்தால், அவற்றின் பலாபலன்கள் எளிதில் தெரியவரும்.

எம்பெருமான் பரமெழுந்தருளி ஏறக்குறைய ஒருதலைமுறைக் காலத்துக்குப் பிற்பாடு அவருடைய ஜீவிய மகிமையைப்பற்றிப் பல நூல்

கள் இயற்றப்பட்டதுமன்றி, பரி. பவுல், பேதுரு, யாக்கோபு, யோவான், லூக்கா முதலானவர்கள் பல சபைகளுக்கு எழுதின நிருபங்களும், வேறு அனந்தம் நூல்களும் இயற்றப்பட்டு, சபைகளிலே ஆராதனை காலங்களிலே வாசிக்கப்பட்டுவந்தன. இந்த வாசிப்பு சுமார் முந்நூறு வருஷமாக நடந்துவந்தது. ஆயினும், உண்மையும் தகுதியுமற்ற அனேக புஸ்தகங்களை அக்காலத்துக் கிரிஸ்தவர்கள் கையாடி, சிறு நன்மையோடு பெருந்தீமையும் அடைந்துவந்ததைக் கண்ட கண்காணிமார்கள் அனைவரும் நாலாம் நூற்றூண்டின் ஆரம்பத்தில் சபைகூடி, கடவுளைக் கருத்தாய் மன்றாடி, தீர்க்காலோசனைசெய்து, அக்காலத்தில் வழங்கிவந்த சகல நூல்களையும் பரிசோதித்து, இப்போது புதிய ஏற்பாட்டி லடங்கியுள்ள இருபத்தேழு ஆகமங்களைமாத்திரம் திவ்யவாக்காக அங்கீகரித்துக்கொண்டார்கள். புதிய ஏற்பாட்டுக்கும், பழைய ஏற்பாட்டுக்குப்போலவே, தள்ளுபடி ஆகமங்கள் சில உண்டு. அவற்றையும் திருச்சபையார் வாசித்தறியவேண்டும். அத்தேவதாபக்தர் செய்த தீர்மானம் கடவுள் தீர்மானமே யென்பதற்கு நாம் தற்காலம் ஓதிவருகிற புதிய ஏற்பாடே போதுமான சாட்சி. புதிய ஏற்பாட்டில் இத்தனை நூல்கள் அடங்கியிருக்கினும், எவ்விஷயத்திலும் அத்தனையும் ஒரே கிரந்தமாகத் திருஷ்டாந்தப்படுகிறது. அன்றி, இவ்விரு ஏற்பாடுகளும் அறுபத்தாறு அறைகளடங்கிய ஒரே அரண்மனையாகக் காணப்படுகிறது. அஸ்திபாரம் ஒன்றே; திவ்விய சிற்பாசாரியரும் ஒருவரே; கொல்ன்மார்மட்டும் அறுபத்தறுவர் என்னலாம்.

புதிய ஏற்பாட்டிலே நான்கு சுவிசேஷங்க ளென்கிற எம்பெருமான் சரிதைகளும், அப்போஸ்தலர் சரிதையும், பரி. பவுல் தாம் ஸ்தாபித்த சபைகளுக்கு எழுதின பதின்மூன்று நிருபங்களும், பேதுரு முதலான அப்போஸ்தலர் எழுதின ஏழு நிருபங்களும்; எபிரேயர் நிருபமும், பரி. யோவான் இயற்றிய அறிவிப்பாகமமும்சேர்ந்து இருபத்தேழு கிரந்தங்களுண்டு; மேற்படி கண்காணிமார்கள் கடவுளருளிய விவேகத்தோடே இவ் வெபிரேய நிருபத்தைப் பரி. பவுலின் நிருபங்களுக்கும் ஏனைய அப்போஸ்தலரின் நிருபங்களுக்கும் இடையிலே பிரத்தியேகமாய் வைத்திருக்கிறூர்கள். வரிசைக் கிரமப்படி எபிரேயர் நிருபம் புதிய ஏற்பாட்டிலே பத்தொன்பதாம் கிரந்தம்.

# எபிரேயர் நிருபம்.

## 1. இந்நிருபம் யாருக்கெழுதியது?

பூர்வ பிரதிகளிலெல்லாம் "எபிரேயருக்கு" என்கிற விலாசம் மட்டும் எழுதியிருக்கிறது. பர்னபா இந்நிருபத்தை எழுதினவனெ ன்று எண்ணின தர்த்துல்லியன் தாமும் அது "எபிரேயருக்கு" எழுதி யனுப்பப்பட்ட தென்கிறார். எக்காலத்திலும் இந்நிருபத்துக்கு வே றொரு விலாசம் எழுதப்படவில்லை. எபிரேயர் என்கிற பதம் எபி ரேய பாஷையைப் பேசினவர்களுக்கும், எபிரேய வமிசத்தைச் சேர்ந் தவர்களுக்கும் இடப்பட்டு வந்தது. யூதர் பூர்வத்தில் எபிரேய ரென்றும், பின்பு இஸ்ரவேலரென்றும், எம்பெருமான் காலத்தில் யூதர் என்றும் அழைக்கப்பட்டார்கள். எபிரேயர் என்கிற பதம் தேச த்தையல்ல, ஒரு ஜாதியாரையே குறிக்கின்றது. யூதர் என்கிற பதம் சாதாரணமாயினும், விசேஷ தருணங்களில் எபிரேயர் என்கிற பதமும் உபயோகிக்கப்பட்டது. பவுல் அப்போஸ்தலர் தம்மை "எபிரேயரில் எபிரேயன்" என்றழைக்கிறார். ஆதலால், இந்நிருபம் எங்கேயோ குடியிருந்த ஆபிரகாமின் சந்ததியாராகிய எபிரேயர் அல்லது யூதரு க்கு எழுதப்பட்டதென்பது அதன் மேல்விலாச விஷயத்தால் விசத மாகின்றது.

நிருபத்தைக் கருத்தாய் வாசித்துப் பார்த்தால் அது எழுதப்பட்ட வர்களைக்குறித்துப் பல சந்தர்ப்பங்களும் குண விசேஷங்களும் தெரிய வருகின்றன. முதலாவது; அவர்களுக்குள்ளே கிறிஸ்தவர்களாக்கப் பட்ட புறதேசத்தார், அதாவது, ரோமர், கிரேக்கர், எகிப்தியர் முதலா னவர்கள், இருந்ததாகக் காணப்படவில்லை. புறதேசக் கிறிஸ்தவர்களு க்குரிய வாக்குவாதங்களும், விக்கிரகாராதனை, வீண்பக்தி முதலான கேடுபாடுகளும் சொல்லப்படவில்லை. இவ்விதக் கண்டனைகள் பரி. பவுல் எழுதிய நிருபங்களிலே அனந்தமுண்டு. ஆகையால், நிருப மெழுதப்பெற்றவர்கள் கலப்பில்லாத எபிரேயக் கிறிஸ்தவர்கள் என் பது திண்ணம். அவர்கள் நடுவிலே அந்நிய கிறிஸ்தவர்கள் கிடை யாது. அதி. 13. 9 காண்க. இரண்டாவது: அவர்கள் சிறு கூட்

டமானவர்கள் (5. 12). ஆகிலும், தங்கள் தயாளகுணத்துக்குப் பேர் போனவர்கள் (6. 10). அவர்களுக்கென்றே சில குருமார்களிருந்தார்கள் (13. 24). மூன்ருவது: தங்கள் கோரிக்கைகள் நிறைவேருமையால் அவர்களுக்குப் பல சோதனைகள் நேரிட்டன (5. 11; 6 1; 10. 25). அத்துன்ப அநுபவத்தால் அவர்கள் தேர்ச்சியடைவதற்குப் பதிலாக, சிறிது தவறிப்போனுர்கள். நான்காவது: காலக்கிரமத்திலே யூத ஜெப ஆலயத்துக்கும் கிரிஸ்தவ ஆலயத்துக்கும் பேதம் அதிகரித்துவந்தது. யூதக் கிரிஸ்தவர்கள் தங்கள் பரம்பரை ஆலயத்தை விட்டு விட்டுத் திருச்சபையை முற்றிலும் சேரவேண்டியதாயிற்று. அனேகர் அவ்வாறு செய்யாமல் பலவீனத்தினுலே திருச்சபையை விட்டு யூத ஆலயத்தைச் சேர்ந்துகொள்ளச் சோதனை வந்தது (2. 1, 3; 3. 6, 12; 4. 1, 3, 11; 6. 6; 10. 25, 29, 39). அதனுலே அவர்களுக்குப் பெருமுயற்சியும் பொறுமையும் அத்தியாவசியமாயிருந்தது (4. 14; 6. 11; 10. 23, 36; 12. 1, 3 மு, 12 மு. காண்க). ஐந்தாவது: ஆதியிலே அவர்களுக்கு அனேக துன்பங்கள் நேரிட்டன (10. 32, மு); ஆயினும் அவைகள் மரணத்துக் கேதுவானவைகளல்ல (12. 3, மு); சிலர் சிறையில் வைக்கப்பட்டார்கள் (13. 3); ஒருவேளை அவர்கள் ஆதிகால அதிகாரிகள் தங்கள் விசுவாசத்திற்காக மரணசாட்சிகளாயிருந்திருக்கலாம். (13. 7)

இந்த லட்சணங்களினுலே நிருபம் எழுதப்பெற்றவர்கள் எங்கும் சிதறியிருந்த எபிரேய கிரிஸ்தவர்கள் அல்லவென்றும், ஒரே இடத்தில் குடியிருந்த ஒரு சபை என்றும் ஐயமறத் தெரியவருகிறது. நிருபாசிரியர் அவர்களைச் சந்தித்தவர் (13. 19); அவர்களை மறுபடியும் சந்திக்க எண்ணினவர் (13. 23). அவர்கள் அவருக்குச் "சகோதரர்" (3. 1); "அன்பர்கள்" (6. 9). ஆயினும், அவர்கள் இருந்த நகரம் யாது? சிலர் அலெக்சாந்திரியா என்றெண்ணுகிருர்கள். நிருபாசிரியர் என்று நம்பப்படுகிற அப்பொல்லோ என்னும் யூதர் அந்த நகரத்தான்; அதிலே குணப்பட்டவர். அந்தச்சபை அப்போஸ்தலராலாகிலும், எம்பெருமானின் ஏனைய சீஷர்களாலாகிலும் ஸ்தாபிக்கப்பட்டது. தம்பெயர் கொண்ட சுவிசேஷத்தை எழுதின மாற்கு அச்சபையை ஸ்தாபித்தவர் (2. 3). பிற்காலத்தில் சுவிசேஷப் பிரயாணியாகப் போய்விட்ட

அப்பொல்லோ என்பவர் அவர்களுக்கு இந்த அன்பான கடிதத்தை எழுதி யனுப்பியிருக்கலாமென்று நினைக்கிறேன். இது அல்லவெ னின், எருசலேம் நகரத்துக்கு சமீபத்திலிருந்த ஒரு சபையாருக்காவது, அதிலிருந்த நண்பர்க்காவது எழுதப்பட்டதென்று சிலர் எண்ணுகிறார் கள். இதற்குப் பலத்த பல ஆட்சேபனைகள் உண்டு. வேறு சிலர் எபேசு பட்டணத்திலிருந்த யூதக்கிறிஸ்தவர்களுக்குப் பிரத்தியேகமா யெழுதியதென்று அபிப்பிராயப்படுகிறார்கள். அவ்விடத்தில் அப் பொல்லோவும் தீமோத்தேயுவும் சிறிதுகாலம் உழைத்தார்கள். இது வியாக்கியானியாகிய பாரர் சாஸ்திரியாரின் துணிபு. அதி. 13. 7, 9–இலே "இத்தாலியா தேசத்தார்" உங்களை வாழ்த்துகிறார்கள் என்று சொல்லியிருக்கிற காரணத்தால் ரோமசபைக்கு இந்நிருபம் எழுதிய னுப்பப்பட்டதென்று சிலர் ஆதாரமின்றிக் கூறுகிறார்கள். நிருபாசி ரியர் ரோமர் நிருபத்தை வாசித்தவரென்று (10. 30; 13. 1–6, 9–20) தெரியவந்தாலும், அப்பொல்லோ அந்நகரத்துக்கு எப்போதாகிலும் போனதாகத் தோன்றவில்லை. அந்நகரத்துக் கண்காணியாகிய கிலெ மெந்தென்பவரும் அதைக்குறித்து ஒரு வார்த்தையுஞ் சொல்லவில்லை. ஆகையால், அச்சபையார் இந்த நகரத்திற் குடியிருந்தவர்களென்று பரிஷ்காரமாய்ச் சொல்லமுடியாது.

முடியாதெனினும், ஒன்று நிச்சயம். அவர்கள் ஒரே நகரத்திலும், ஒரே அதிகாரத்திலும் இருந்த யூதக் கிறிஸ்தவர்கள். முதலாந்தலைமுறைப் பக்தர் என்றுஞ் சொல்லலாம். அவர்களிருந்தகாலம் ஏகதேசம் கி. பி. 35 முதல் கி. பி. 68 வரையுமென்று பின்னால் தெரியவரும். இத னால், இந்நிருபம் எழுதப்பெற்றது ஆதித்திருச்சபைகளி லொன்று. இது ஒன்றே மிக்க முக்கியமான விஷயம். அது இருந்த நகரம் எபே சுவாயினும் சரி, அலெக்சந்திரியாவாயினுஞ் சரி, எருசலேமாயினுஞ் சரி, தீபத்தைப்போலச் சுற்றியிருந்த அந்தகாரத்தில் தன் பிரகாசத் தைப் பரப்பி யெரிந்துகொண்டிருந்தது. அதன் படம் இந்நிருபத் திற் காட்டியிருக்கிறது (அதி. 5. 11, மு; 6. 9, மு; 10. 32, மு; 12. 3, மு). அதன் ஸ்தானம் மறைந்திருக்கினும், அதன் ஆவிக்குரிய நிலை மை பட்டப்பகல்போல விளங்குகின்றது. இந்த ஒரு நிருபத்தில் மாத்திரம் இவ்விதச் சபைச்சித்திரம் வரைந்திருக்கிறது. தற்காலத்துச்

சபைகளுக்கும் இதற்கும் அத்தனைப் பெரிதான பேதம் தோற்ற வில்லை. ஆதிவைராக்கியம் அனல்குன்றி தணிந்துபோயிற்று. அதன் கோரிக்கை குறையுற்றது. நங்கூரமிழந்த கலத்தை ஒத்து அலைசற் படத் தொடங்கிற்று. பக்தர்கள் லாபநஷ்டம் கணிக்க ஆரம்பித்தார் கள். உபத்திரவஞ் சகிக்கப் பொறுமையற்றிருந்தார்கள். போதகன் மாருக்குப் பூர்த்தியாய் அடங்கி ஒழுகவில்லை. அநேகர் விசுவாசத்தை விட்டு மருள விழுந்தார்கள். யூத ஆராதனையின் அலங்காரச்சடங்குகளை விட்டுவிட்டும், மீண்டும் அவற்றை ஆவலாய் அநுசரிக்க நாடினார்கள். மெய்ப்பக்தி குறைந்து, பொய்ப்பக்தி பலத்தது. தற்கால சபைகளுக் குண்டாயிருப்பது போலவே அந்த எபிரெய சபைக்கும் துன்பந் துயரங்களும், சத்துரு சோதனைகளும் உண்டாயிருந்தன. விருந் தோம்பலும், திரவியசகாயஞ் செய்தலும் அவர்களுக்குச் சகஜம். அவர் கள் யூதர்களாகையால் மோசேயின் சட்டதிட்டங்களை இன்னுங் கைக் கொண்டுவர முயன்றார்கள். அவர்கள் சுவிசேஷத்தின் ஸ்வாதீனத் தைப் பூர்த்தியாய் அனுபவிக்கத் துணியவில்லை. யூதமார்க்கத்துக்கும் கிறிஸ்துமார்க்கத்துக்கும் போர்தொடங்கி நடந்துகொண்டிருந்தது. இர ண்டும் ஒரு சபையிலே இருந்து ஆளமுடியாது. ஒன்று குறைய, ஒன்று பெருகி, கடைசியிலே பரம பிரதான ஆசாரியர் ஒருவரே சபைக் குத் தலைமையாதல்வேண்டும். இந்திய திருச்சபைக்கும் இவ்விதப் போருண்டு. அஞ்ஞான ஆசாரங்களும், ஆசாரிய மேம்பாடுகளும், அலங்காரச்சட்டங்களும் திருச்சபையிலே நுழைந்து பலப்பட ஏது வாயிருக்கிறது. இதற்கெதிராக, தெய்வவணக்கமும், ஆராதனைப் பக்தியும், வேதவாசிப்பும், குருமதிப்பும் நாளாவட்டத்திற் குறைந்து ஒழிய அனேக சோதனைகள் உண்டு.

மேற்சொன்ன விஷயங்களினாலே இந்நிருபத்தின் அத்தியாவசி யம் அக்காலத்தில் மாத்திரமன்றி, இக்காலத்திலும் திருஷ்டாந்தமாகி றது. புதிய சபைகளை ஸ்தாபிக்கிறவர்களுக்கும் நடத்துகிறவர்களுக்கும், அவற்றிலுள்ள தனித்தனிப் பக்தர்களுக்கும் இந்நிருபம் பொன்னிருப மாயிருக்கவேண்டும். திருச்சபையிலே பூத்துக் காய்த்துக் கனிகிற பல மாறுதல்களுக்கும் கேடுகளுக்கும் இது நேர்த்தியான கண்ணாடி என்ன லாம். உலகத்தில் இப்பொழுது சுமார் ஒரு கோடி யெழுபது லட்சம்

எபிரேயர் குடியிருந்தாலும், அவர்களில் சிலர்தான் எம்பெருமானுக் கடியாராயிருத்தற்கு மோசேயின் சட்டாபிமானமே முக்கியகாரணம்.

## 2. நிருபம் எழுதிய காலம்.

நிருபத்திற் சொல்லிய விஷயங்களைக் கவனித்தால் அகச்சாட்சி சம்பந்தமான சில உண்மைகள் வெளிப்படுகின்றன. ஒரு தலைமுறைக் கிறிஸ்தவர்கள் மரித்திருந்தார்கள் (13. 7; 2. 3). பக்தியிலும் மார்க்க விர்த்தியிலும் (10. 32; 5. 11, மு). சில மாறுதல்கள் உண்டாகத்தக்க காலஞ்சென்றிருந்தது. இதற்கெதிராக லேவிய ஆராதனைச் சடங்குகள் முன்னும் நடந்துவந்ததாக இந்நிருபத்திற் கண்டிருக்கிறது (8. 4, மு; 9. 6, 9; 10. 1, மு; 13. 10, மு). ஆதலால் இந்நிருபம் எழுதப்பட்ட பொழுது, எருசலேம் நகரமும், அதன் ஆலயமும் இன்னும் அழிக்கப் படவில்லை என்பது நிச்சயம். கி. பி. 67—இலே யூதரின் பெரும் யுத்தம் ஆரம்பித்தபடியாலும், அதைக்குறித்து இதிலே ஒரு வார்த்தை யும் சொல்லியிராமையினாலும், இது 67—க்கு முன்பும் 64—க்குப் பின்பும் எழுதப்பட்டிருக்கவேண்டும். எருசலேமின் அழிவுக்குப் பிந்தி எழுதப்பட்டிருக்குமேயானால், நிருபாசிரியர் தமது தர்க்கத்துக்கு அந்தச் சம்பவத்தை முக்கிய நியாயமாக எடுத்துரைத்திருப்பாரே. கடவுள் தாமே மோசேயின் ஏற்பாட்டை ஒழித்துவிட்டதாயிருக்குமே. அவ்வாறு ஒன்றும் நிருபத்திற் சொல்லக்காணாமையால், அது கி. பி. 67–70—க்கு முன்னேயே எழுதப்பட்டது. அந்த அழிவை நிருபா சிரியரும், அக்காலத்துப் பக்தர்கள் யாவரும் எதிர்பார்த்திருந்தார்கள். அதுவே கிறிஸ்துவின் இரண்டாம் வருகை. அந்த தினத்தைக் குறி த்து நிருபாசிரியர் பேசுகிறார் (10. 25; 8. 13; அன்றி, 12. 14; 13. 13 காண்க). பரி. பவுல் சிரச்சேதமானது நீரோ ராயன் காலத்தில் ஏறக்குறைய கி. பி. 65. உடனே தீமோத்தேயு விடுவிக்கப்பட்டான் (13. 23). இதுகளையெல்லாம் கவனித்துப்பார்த்தால், எபிரேயர் நிரு பம் 67—இன் கடைசியிலாவது, 68—இன் ஆரம்பத்திலாவது எழுதப் பட்டதென்று தீர்மானிக்க இடமுண்டு.

## 3. நிருபம் எழுதப்பட்ட இடம்.

சில கையெழுத்துப் பிரதிகளிலே, நிருபத்தின் கடைசியில் "தீமோத்தேயுவினோடே இத்தாலியாவிலிருந்து எபிரேயருக் கெழுதப் பட்டது" என்று கூட்டியிருக்கிறது. இந்த வார்த்தைகளுக்கு யாதொரு ஆதாரமே கிடையாது. ஒரு பிரதியிலே "ரோமிலிருந்து" என்று வரைந்திருக்கிறது. "இத்தாலியா தேசத்தார் உங்களை வாழ்த்து கிறார்கள்" என்கிற வார்த்தைகளினாலே எழுதப்பட்ட இடத்தைக் குறித்து யாதொரு நியாயமும் கூறப்படாது. எந்த இடத்திலி ருந்து நிருபமெழுதினாலும் அந்த விடத்தில் சில இத்தாலியர் அல்லது ரோமக்கிறிஸ்தவர்கள் இருந்தார்களெனப் பெறப்படுமே தவிர, அந்த இடம் ரோமமென்றாவது, இத்தாலியா தேசமென்றாவது கூறமுடியாது. அவ்வாறு கூறினால், சென்னப்பட்டணத்திலிருந்து ஒருவர் இங்கி லாந்தி லிருப்பவருக்குக் கடிதமெழுதுகையில், "இங்குள்ள இங்கி லாந்தார் உங்களை வாழ்த்துகிறார்கள்" என்றால், அவர் நிருபமெழுது கிற ஊர் லண்டனென்று சொல்வதுபோலாகும். இன்ன இடத்தி லிருந்து எழுதப்பட்டதென்று திட்டமாய்ச் சொல்லமுடியாது.

## 4. நிருபத்தின் பாஷை நடை, ௸.

மற்ற அப்போஸ்தல ஆகமங்களிலுள்ள கிரேக்கு வார்த்தைகளைப் பார்க்கிலும் இந்நிருபத்தில் அனேகமான நூதன வார்த்தைகளுண்டு. கிரேக்குப் புலவர்கள் வழங்கிய வார்த்தைகள் இதிலே அனேகமுண்டு. பழைய ஏற்பாட்டின் கிரேக்கு மொழிபெயர்ப்பு எழுபது யூதசாஸ்திரி களால் இயற்றப்பட்டது. அதனால் அதற்கு "எழுபது" என்று பெயர். இந்த எழுபதுக்கும் கிரேக்க நூல்களுக்கும் பொதுவான வார்த்தைகள் இந்த நிருபத்தில் வழங்கி யிருக்கிறதுமன்றி, புதிய ஏற் பாட்டின் ஏனைய ஆகமங்களில் அவை கிடையா. ஆகையால் நிருபா சிரியர் சிறந்த கிரேக்க நிபுணனாயிருக்கவேண்டும்.

சொற்களைவிடப் பாஷைநடை அதிலுஞ் சிறந்தது. வாக்கியங்கள் திருத்தமாயும், தெளிவாயும், அலங்காரமாயும் நடைபெறுகின்றன. பரி. பவுலப்போஸ்தலனது சாதுரிய நடை கரடு, மேடு, பாறை, பள்ளம், குன்று, குளம் இவற்றைக் கடந்து குதித்துப்பாய்கிற சிற்றோடைக்குச் சமானமாயிருக்க, நிருபாசிரியரின் மிதமான சாதுரிய நடை சமபூமியின்மீதுள்ள பசும்புல் வயல்கள்மீது ஒழுங்காயும் அழகாயும் பர்ய்ந்தோடும் பேராற்றுக்குச் சமானமானது. வாக்கியங்களில் வார்த்தைகளை, பூமாலை ஜோடிக்கிறதுபோல சீராயும் சிறப்பாயும் கோத்து முடிக்கிறார். ஆத்திரங் கிடையாது. பரி. பவுலைப்போல ஒன்றை விவரிக்கும்பொழுது, திடீரென அதை விட்டு, இன்னொரு விஷயத்தைத் தொடுத்துவிடுகிற துணிவு கிடையாது. வார்த்தைகளில் தெளிவு விளங்குகிறதுபோல, வாக்கியங்களிலும் தெளிவு புலப்படுகிறது. இதற்குதாரணமாக, அதி. 2. 10—ரோம. 11. 36; அதி. 3. 6—ரோம. 5. 2; அதி. 11. 12—ரோம. 4. 19 ஒத்துப் பார்க்கலாம்.

நிருபாசிரியர் ரோமர் நிருபத்தையும் கொரிந்தியர் நிருபங்களையும் வாசித்தவரென்று இந்நிருபத்தினு லறிந்துகொள்ளலாம். அக்காலத்தில் அப்போஸ்தலர் எழுதிய நிருபங்கள் எழுத்துப்பிரதி ரூபமாய் (அச்சுக் கிடையாது) சபைகளிலெல்லாம் வாசிக்கப்பட்டுவந்தன. லூக்கா சுவிசேஷத்திற்கும் இதற்கும் கொஞ்சம் நடை ஒற்றுமை இருக்கிறதாக அலெக்குசாந்திரியா கிலெமெந்து காண்பித்திருக்கிறார்.

நிருபத்திலே நேர்த்தியான அணிகள், அலங்காரங்கள் பலவுண்டு. வார்த்தையாகிய பட்டயம் (4. 12); நிலத்தியல்பு (6. 7 ழ்); கோரிக்கை என்கிற நங்கூரம் (6. 19); தூரக்கனாக் காட்சி (11. 3); பந்தய மேடை (12. 1); ஜீவிய போராட்டம் (12. 8 ழ்). இவற்றை வியாக்கியானக் குறிப்புகளிற் காண்க.

## 5. நிருபத்தின் விசேஷ லட்சணங்கள்.

இந்நிருபம் யூதருக்கு மாத்திரம் எழுதப்பட்ட புதிய ஏற்பாட்டு ஆகமங்கள் மூன்றிலொன்று. மற்ற இரண்டு—பரி. மத்தேயுவின் சுவிசேஷமும், பரி. யாக்கோபின் நிருபமுமாம். சிலர் பரி. பேதுருவின் முதல் நிருபத்தையும் சேர்த்துக்கொள்ளுகிறார்கள். இவ்வாகமங்களின் லட்சணங்களாவன: மத். சுவிசேஷத்திலே தாவீது வம்சத்தரசனின் முக்கிய குணங்கள் விவரித்திருக்கின்றன. யாக்கோபின் நிருபத்திலே பூர்ண பிரமாணத்தின் சக்தி விளக்கியிருக்கிறது (யாக். 1. 25; 2. 8). பேதுருவின் நிருபத்திலே தீர்க்கதரிசனத்தின் நிறைவேற்றம் காட்டியிருக்கிறது (1 பேது. 1. 10—12). இந்த நிருபத்திலே நித்திய ஆசாரியத்துவத்தின் நிறை பலன் திருஷ்டாந்தப்படுத்தியிருக்கிறது (எபி. 7. 23, ஷ). யூதர்கள் மத்தியில் உழைத்த இம்மூன்று நிருபாசிரியர்களுக்கும், புறச்சமயிகள் நடுவில் உழைத்த பரி. பவுலுக்கும் (கலா. 2. 9, ஷ). முக்கியமான பேதங்கள் சிலவுண்டு. பவுல் மோசேயின் சட்டதிட்டங்களை மாத்திரம் நோக்குகிறார்; நிருபாசிரியர் மோசே ஏற்படுத்தின ஆராதனையை மாத்திரம் நோக்குகிறார். பவுல் புறச்சமயிகளுக்கும் நிருபாசிரியர் யூதக் கிறிஸ்தவர்களுக்கும் உபதேசம் பண்ணுகிறார்கள். இருவருடைய நோக்கமும் ஒன்றே; ஆயினும் இருவருடைய முறைகள் வித்தியாசமானவை. பவுல், சட்டதிட்டங்களின்படி நாம் நடக்கமுடியாது; அவை நம்மைக் கண்டித்துக் கொல்லும்; இயேசுவின்பேரில் வைக்கும் விசுவாசமொன்றே நம்மை ரட்சிக்கு மென்கிறார். நிருபாசிரியர் லேவிய ஆராதனை, பலிகள் முதலானவை நமக்குதவுகிறதில்லை, வரவிருந்த ஒரே பலிக்கு அவை அறிகுறிகள் மாத்திரம்; நித்திய ஆசாரியரே நம்மை மகாப் பரிசுத்த ஸ்தலமாகிய கடவுள் சன்னிதியிற் சேர்ப்பவர் என்கிறார். வழிகள் வித்தியாசப்பட்டாலும் செல்கிற ஸ்தலம் இயேசுவின் கிருபாசனமாகிய ஒன்றே. ஒருவர் புறச்சமயிகளைச் சர்வரட்சகராகிய எம்பெருமானிடம் ஸ்திரப்படுத்த முயல்கின்றார்; மற்றவர் யூதர்களைச் சாதாரணமான ஆசாரியரிடத்திலிருந்து நித்திய ஆசாரியராகிய எம்பெருமானி

டம் நடத்த முயல்கின்றார். சட்டதிட்டங்கள் அடிமைத்தனத்திற் கொண்டுபோய்விடுகின்றன; விசுவாசமோ அவற்றினாலாகாத பவித்திரத்தை ஸ்தாபித்து, புதுச் சட்டதிட்டங்களை அன்பினாலே பிறப்பிக்கின்றது. இது பரி. பவுலின் நியாயப்போங்கு. நிருபாசிரியர் பலிகள் முதலானவை சரீர சுத்தத்தை மாத்திரம் உண்டுபண்ணுமேதவிர, உள்ளக்கறையை நீக்கமுடியாது. ஆதற்கு வேறே பலிவேண்டும். இயேசுபெருமான் அப்பலி செலுத்தி, அதனால் நம்மைத் தம்முடன் பரம ஸ்தலத்துக்குள் அழைத்துக்கொண்டு போகிறார்.

எபிரேய கிறிஸ்தவர்களுக்கு இரண்டு கஷ்டங்கள் இருந்தன. ஒன்று எம்பெருமான் தாங்கள் எதிர்பார்த்தபிரகாரம் விரைவிலே திரும்பிவராமை (அப். 2; 3; 5). மேசியாவின் மகிமையையல்ல, இயேசுவின் பாடுகளையும் மரணத்தையுமே அவர்கள் கண்டார்கள். இயேசுவின்பேரில் விசுவாசம் வைத்தாலும், சந்தேகந் தெளியவில்லை. மற்றொரு கஷ்டம், யூதஜனம் மொத்தத்தில் அவரை மேசியாவாக அங்கீகரிக்கவில்லை. அதனாலே அஜ்ஜனம் எபிரேய கிறிஸ்தவர்களைத் தூஷித்துத் துவேஷிக்க நேரிட்டது. தேவாலயத்திற்கு தைரியமாய்ச் சென்று ஆராதிக்க அஞ்சினார்கள். சிறிது சிறிதாக, இரண்டெஜமான்களுக்கு ஊழியஞ் செய்கிறவர்களானார்கள். இந்நிருபம் எழுதிய காரணமும் கருத்தும் இப்பொழுது வெளிப்படும். இயேசு வேண்டுமானால் மோசே இரண்டாமிடத்தில் நிற்கவேண்டும். இயேசு பக்தி நிலைக்கிறதானால், மோசேயின் சடங்காசாரம் ஒழிதல்வேண்டும். தீர்க்கர் மூலமாய்ப் பேசினவர் இப்பொழுது குமாரன் மூலமாய்ப் பேசினார். நித்திய ஆசாரியர் வேண்டுமானால், அநித்திய ஆசாரியர் அகலவேண்டும். ஆலயத்தின் மகாப் பரிசுத்த ஸ்தலத்திற்குள் பிரதானஆசாரியன் மாத்திரம் வருஷத்துக்கொருமுறை பிரவேசிக்கிறது மெய்தான்; ஆனால் கிறிஸ்துப் பக்தர் சகலரும் அவரோடுகூட கடவுளின் பரிசுத்த சந்நிதியில் தினந்தோறும் இடைவிடாமல் பிரவேசிக்கலாமே. இந்த அருஞ்சலாக்கியத்தைப் பாரமான சடங்காசாரங்கள், பலிகள் யாகங்களினாலல்ல, சுத்த விசுவாசத்தினாலேயே அடைந்துகொள்ளலாம். இதையே நிருபாசிரியர் ஐயந்திரிபற விளக்கிக் காண்பிக்கிறார். பழைய உடன்படிக்கை போய், புதிய உடன்படிக்கை ஸ்தாபிக்கப்பட்டது.

இந்நிருபத்திஞலே அனேக சத்தியங்கள் வெளிப்படுகின்றன. இதில்லாமல் புதிய ஏற்பாடென்கிற வெளிப்பாடு பூர்ணமாகாது. இதன் முதல் வாக்கியம் ரங்க வாக்கியம். எபிரேய தீர்க்கர் மூலமாய்ப் பேசின இறைவன் இந்திய சாதுக்கள் மூலமாகவும் ஒருவாறு பேசிஞர். கிரிஸ்து யூதமார்க்கத்தை அழிக்கவல்ல, நிறைவேற்றவே அவதரித்ததுபோல, ஹிந்துமதத்தில் மறைந்தும் மங்கியுமிருக்கிற சத்தியங்களே அவமதித்துத் தள்ளிவிடவல்ல, அவற்றை நிறைவேற்றிப் பூர்ணப்படுத்தவே வந்திருக்கிருர். ஹிந்துமார்க்கத்தின் பாடல்கள், வேண்டுகோள்கள் யாவும், அதன் அவதாரங்கள், உபதேசங்கள் யாவும்; அதன் பலிகள், யாகங்கள், ஓமங்கள் யாவும், அதன் உற்சவங்கள், சடங்காசாரங்கள் யாவும், அதன் ஸ்தலயாத்திரைகள், ஸ்நாஞனுஷ்டானங்கள் சரிதைகிரியைகள் யாவும் எழுந்தருளவிருந்த எம்பெருமான் இயேசுவுக்கு அறிகுறிகளும், அடையாளங்களுமாயிருந்தன; அவ்வாறே இன்னுமிருக்கின்றன. இந்தச் சாதுவான சத்திய முறையினுலே இயேசு தாசர்கள் அனைவரும் இந்தியனை அன்புடன் அணுகி அங்கீகரித்தல்வேண்டும். இந்தியர்கள், தாங்கள் தற்காலம் மதவிஷயமாயிருக்கிறவாறே, எம்பெருமானை அடைந்துகொண்டால், அவர்பேரில் வைக்கிற விசுவாசம் அதிகரித்துவர நாளாவர்த்தியிலே எபிரேய கிரிஸ்தவர்கள் யூதச்சடங்குகள் முதலானதுகளை விட்டுவிட்டதுபோலவே, சகல சரிதைகளையும் விட்டு, வீண்பக்தி விக்கிரகாராதனைகளை ஒழித்து, கடவுளை ஆவியிலும் உண்மையிலும் வணங்கத் தொடங்குவார்கள்.

இந்நிருபம் யோவான் சுவிசேஷத்திற்கு அநுபந்தம் போன்றது. இரண்டின் கருத்தும் கருவியுமொன்றே. இயேசு சர்வலோக சற்குரு. அவர் காட்டிய மார்க்கம் சர்வ ஜனத்துக்கும் உரியது. பலஸ்தீனுவைக் கடந்து பூச்சக்கரம் முழுவதையும் அடக்கிக்கொள்ளும் ஆவலுள்ளது. சடங்காசாரங்களை நம்பி நாடாமல், பிரதான ஆசாரியருக்கு அடங்குஞ் சிந்தையையே நாடச்செய்கிறது.



## 6. நிருபத்தின் ஞானோபதேசம்.

கடவுள், மனிதன், மறுமை—இவற்றைக்குறித்து நிருபம் உபதேசிக்கிறதென்ன? பொதுவிலே இதுகளெல்லாம் உள்ளபடி உபதேசிக்கப்பட்டாலும், பரி. பவுலின் நிருபங்களிலே அடங்கிய நான்கு விஷயங்களிலே, யூதமார்க்க கிறிஸ்துமார்க்க சம்பந்தமாகிய முதலாவதே இந்நிருபத்தின் முக்கிய உபதேசம்; எம்பெருமான் இயற்றிய இரட்சண்யமாகிய இரண்டாவது அதி. 5. 1—முதல் அதி. 10. 18 வரையும் தெளிவுற விளக்கியிருக்கிறது; விசுவாசத்தினாலே நீதிமானாகிற மூன்றும் உபதேசம் அதிகாரம் பதினொன்றிலே தீர்க்கமாய்க் கூறியிருக்கிறது. புறச்சமயிகளின் அழைப்பாகிய நாலாம் உபதேசம் இதிலே கிடையாது. இதற்குக் காரணம், இந்நிருபம் யூதர்களுக்குமாத்திரம் எழுதி யனுப்பப்பட்டது. ஆகிலும், கிறிஸ்து ஒவ்வொரு மனிதனுக்காகவும் மரித்தாரென்று (அதி. 2. 9) கூறியிருக்கிறபடியால், சுவிசேஷம் சர்வ மனிதருக்கும் உரியதென்கிற உபதேசமும் இதில் அமைந்திருக்கிறதென் றறிக்கைசெய்யவேண்டும். (அப். 15. 1—29 காண்க.)

மற்றெல்லா விஷயங்களிலும் இந்நிருபத்திலே சுவிசேஷ போதனை பூர்த்தியாயிருக்கிறதுமன்றி, அநுபந்தவிஷயமான அனேக சிறந்த உபதேசங்களும், யூதருக்கேயுரிய பல அரும் போதனைகளும், சர்வ திருச்சபையாருக்குப் பொதுவும் அவசியமுமான அனேக சத்தியங்களும் இதிலடங்கியிருக்கிறது. இந்நிருப மில்லாமற்போனால், வேதாகமம் பூரண பக்குவம் குறைந்திருக்கும். உதாரணமாக, கிரியையில்லாத விசுவாசம் செத்த விசுவாசமென்று யாக்கோ பப்போஸ்தலன் கூறியிருக்க, இந்நிருபத்தின் 11—ம் அதிகாரம் அதற்குச் சிறந்த உபபல திருஷ்டாந்தமாயிருக்கிறது. பரி. பவுலுக்கும் நிருபாசிரியருக்குமுள்ள ஒற்றுமையைக்குறித்துப் பின்வரும் வாக்கியங்களைக் காண்க. எபே. 4. 10; எபி. 9. 24 (எம்பெருமானின் பரமமகத்துவம்); ரோம. 8. 34; எபி. 7. 25 (அவரது பலனுற்ற மன்றாடல்); கலா. 4. 3; எபி. 7. 19 (சடங்குப்பிரமாணம் பாலக்கல்வியென்

றது); ரோம. 10. 4; எபி. 10. 4–7 (கிறிஸ்து சட்டத்தின் முடி வென்பது). இதுபோல வேறனந்த உதாரணங்களுண்டு. விசே ஷமாக, இயேசுவின் தெய்வத்தன்மையைப்பற்றி இந்நிருபம் பரி. யோவான் சுவிசேஷத்திற்கு நேர்த்தியான அநுபந்தம் என் னப்படும்.

நிருபாசிரியரின் நடையையும், முக்கிய பதங்களையும் தொடர் மொழிகளையும் கவனித்தால், அவர் அக்காலத்திலிருந்த யூதவித்வானாகிய பீலோ என்பவரின் நூல்களை அதிகமாய் வாசித்தறிந்தவராகக் காண் கிறது. இந்தப் பீலோ வென்பவர் வைராக்கியமுள்ள யூதனாயினும், சிறந்த கல்விகேள்வியும், வேதப்பயிற்சியும், தெளிந்த புத்தியும், தீர்க்காலோசனையு முள்ளவர். அலெக்குசாந்திரியா பட்டணத்தில் வசித்துத் தமது சீஷர்களுக்கு உபதேசஞ் செய்தவர். அவர் வழங்கிய மொழிகளும், உருவக உவமைகளும் இந்நிருபத்தில் பல காணப்படும். இதற்குப் பாரர் வியாக்கியானி 21 உதாரணங்களை எடுத்துக் கூறி யிருக்கிறார். ஒரே உதாரணம் நமக்குப் போதுமானது: எபி. 3. 6. "நாம் அவர் வீடு". பீலோ, "ஓ ஆத்மாவே, கடவுள் வீடாக முயல் வாயாக," என்கிறார். நிருபத்தின் நடை அலெக்சாந்திரியா வேத சாஸ்திரத்தைச் சார்ந்தது. கிறிஸ்து இயற்றிய மீட்பைப்பற்றி நிரு பாசிரியர் மிக்கத் தெளிவாய் உபதேசித்தாலும், அது பாவப்பிராயச் சித்தமாகிற இரகசிய முறையை விளக்கவில்லை. அன்றியும், விசுவா சத்தினாலே நீதிமானாகிறதைப்பற்றிப் பரி. பவுலைப்போலவே கற்பித் தாலும், நீதி என்னும் பதத்தைக் கடவுளருளிய வரமாக விளக்கா மல், கிறிஸ்தவன் நடக்கவேண்டிய தர்ம நடத்தையாகக் கூறுகி றார். சில இடங்களிலே நிருபாசிரியர் சுவிசேஷங்களுக்கும் ஏனைய நிருபங்களுக்கும் சிறிது மாறாக, மெத்தக் கடினமான கண்டனங்கள் உரைக்கிறார். உதாரணமாக, அதி. 2. 1–3; 4. 1; 6. 4–8; 10. 26–31; 12. 15–17 காண்க.

உ

# 7. திருபத்தின் சுருதிப்பாத்திரம்.

ஹிந்துக்கள் தங்கள் சாஸ்திரங்களைச் சுருதியென்றும், ஸ்மிருதியென்றும் இருகூறாகப் பகுப்பார்கள். சுருதி என்பது கடவுள் சொல்லியதை நேராகக் கேட்ட வாக்கியமென்றும், ஸ்மிருதி என்பது பரம்பரையாய்வந்த வாக்கியமென்றும் அர்த்தம் பண்ணுகிறார்கள். சத்தியவேதாகமத்தில் ஓர் பகுதியாயிருக்குந் தன்மையை நாம் சுருதி பாத்திரமென்று கூறலாம். இதற்கு இங்கிலீஷில் **கானொனிசிட்டி** என்கிறார்கள். அவ்வாறாயின், எபிரேயர் நிருபத்திற்குச் சுருதிப் பாத்திர முண்டாவெனில், அவசியமுண்டென்கிறோம். அதனாலே தான், இது நாளதுவரையும் சத்தியவேதத்திலோர் சிறந்த பாகமாக வழங்கிவருகிறது.

ஆதிமுதல் இந்நிருபமானது கீழ்ச்சபைகள் மேற்சபைகளாகிய இருவகுப்பாராலும் சுருதிப்பாத்திர முள்ளதாக அங்கீகரிக்கப்பட்டு வந்திருக்கிறது. பூர்வந்தொடங்கிச் சபைகளால் வாசிக்கப்பட்டு வந்தது; ஜஸ்டின் மார்ட்டர் அதை எடுத்துரைக்கிறார்; ரோமாபுரி கண்காணியாயிருந்த கிலெமெந்து அதை அதிகமாய்க் கையாடிவந்தார். அக்காலத்து வித்வான்களாகிய சபைப் பிதாக்கள் அதைச் சுருதியாகவே மதித்துவந்தார்கள். அது பரி. பவுலப்போஸ்தலன் எழுதியதன்றென்று கூறியவர்கள் முதலாய் அதை வேதத்திலோர் முக்கிய பகுதியாய் எண்ணிவந்திருக்கிறார்கள். அதிலுள்ள சில கடினமான காரியங்களினாலே சிலர் அதை ஆக்ஷேபித்துவந்தாலும், திருச்சபையிலே இந்நிருபம் ஸ்திரமான மதிப்புடையதாயிருக்கிறது. ஒரு ஜர்மன் வித்வான், மெல்கிசேதேக்கைப்போல, எபிரேயர் நிருபம் தனிமையான ராஜ மகத்துவத்துடனும், பரிசுத்த மேன்மையுடனும் நடந்துசொல்கிறதென்கிறார். இந்நிருபத்துக்காக நாம் கடவுளுக்கு அத்தியந்த நன்றிசெலுத்தக் கடன்பெற்றிருக்கிறோம்.

## 8. நிருபாசிரியர் யார்?

இது மகா முக்கியமான கேள்வி. தமிழ் மொழிபெயர்ப்பிலே "எபிரேயருக்கு எழுதிய நிருபம்" என்றுமாத்திரம் தலைப்பு வைத்திருக்கிறது. பழைய இங்கிலிஷ் திருப்புதலிலே "அப்போஸ்தலனாகிய பவுல் ஐ" என்று கூறியிருந்தது. இது திருத்தல் மொழிபெயர்ப்பில் விட்டுவிடப்பட்டது. இந்த ஒரு நிருபம்மட்டும் வேதாகமத்தில் ஊர் பெயரின்றி அமைத்திருக்கிறது. பரி. பவுல், பேதுரு, யாக்கோபு, முதலானவர்கள் எழுதிய நிருபங்களுக்கெல்லாம், தமிழ் நாட்டு வழக்கம்போல ஆரம்பத்திலேயே, தங்கள் பெயரிட்டிருக்கிறார்கள். இதுவோ அநாமக நிருபமாயிருக்கிறது. மகா ஆசாரிய அரசனாகிய மெல்கிசேதேக்கைப்போல இதற்குத் தந்தையுமில்லை, சந்ததியுமில்லை. இது பெயர் பெருமை வேண்டா மகாத்மாவாகித் தன் சொந்த விசேஷத்தையே ஆதாரமாகக்கொண்டு, தன்னந்தனியே வேதாகமத்தில் இலங்குகின்றது. நிருபாசிரியருக்கு ஒருவேளை தாம் அப்போஸ்தலனல்லாத காரணத்தினாலோ, தாம் எழுதிய ஒருசபை தவிர மற்ற சபைகளுக்குத் தமது நாமதேயம் தெரியாதிருத்தலே உசிதமென்ற எண்ணத்தினாலோ, அல்லது தமது மிக்க மனத்தாழ்மையினாலோ, தமது பேனா வெளியிடாமற் போனதாகத் தோன்றுகிறது. தம் பெயரிட்டிருந்தால் ஒருவேளை இந்த அருமையான நூல் காலக்கிரமத்தில் அழிந்துபோயிருக்கும். புதிய ஏற்பாட்டு ஆகமங்கள் யாவும் (பரி. பேதுருவுக்கும் பவுலுக்கும் மிக்க நண்பராயிருந்த மாற்கு, லூக்கா இருவர்தவிர) அப்போஸ்தலர்மாராலேயே இயற்றலாயின.

ஆகிலும், நிருபத்தை வாசித்துப் பார்க்குமளவில், நிருபாசிரியர் பரி. பவுலுக்கு நண்பரும், தோழருமாயிருந்ததுமன்றி அவருடைய கோட்பாடுகள், வழக்கமான உபதேசங்கள், மொழிகள், தொடர் மொழிகளைப் பெரும்பாலும் நன்குயறிந்தவராகத் தோற்றுகிறது. உதாரனமாக, அதி. 2. 10; 6. 10; 10, 30; 12. 14; 13. 1–6, 15, 20. இந்த வாக்கியங்களை ரோம. 11. 36; 1 தெச. 1. 3; ரோம.

12. 19; 18 1–12; 2 கொரி. 4. 2; ரோம. 15–23 இவ்வாக்கியங்களோடு ஒத்துப்பாருங்கள். இந்த ஒற்றுமைகளிருந்தாலும், வேற்றுமை விகற்பங்கள் அனந்தமென்று முன்னமே காட்டியிருக்கிறோம். பரம்பரையாய்ப் பலர் பரி. பவுல் எழுதின நிருபமாக இதை நினையாமல் அங்கீகரித்துவந்தாலும், ஆதிச்சபை அவ்வாறு அபிப்பிராயப்பட்டதைக் காணோம். முதல் நூற்றூண்டிலே ரோமைக் கண்காணியாயிருந்த கிலெமெந்தென்பவர் தாம் கொரிந்தியருக்கு எழுதின கடிதத்திலே இந்த நிருபத்தை அதிகமாகப் பின்பற்றி யெழுதியிருக்கிறார். பரி. பவுலைப்பற்றியோ ஒரு வார்த்தையும் சொல்லவில்லை. முதல் மூன்று நூற்றூண்டிலிருந்த எந்த நூலாசிரியனும் இந்நிருபம் பரி. பவுலெழுதினதாகக் கூறினதில்லை. அதற்கு மாறாக, ஹிப்பொலீத்தும், இரெனியுசும் பவுல் அதை எழுதவில்லையெனச் சாதித்தார்கள். கி. பி. 240–இலே தர்த்துல்லியன் அதைப் பர்னபா எழுதினவரென நினைத்தார். நாலாம் நூற்றூண்டின் கடைசியிலிருந்த ஒருவர்மாத்திரம் பரி. பவுல் அதை எழுதியிருக்கவேண்டுமென்று கூறினார். கிழக்குச்சபைகளிலே மாத்திரம், தக்க ஆதாரமின்றி, மிக்கத் துணிவுடன் பரி. பவுலே இதற்கு நிருபாசிரியரா யிருக்கவேண்டுமென்று வெகுகாலமாக தீர்க்கவிசாரணை செய்யாமல் எண்ணிவந்தார்கள். ஒருவேளை பரி. பவுல் இதை எபிரேய பாஷையிலெழுத, லூக்கா அதைக் கிரேக்கிலே மொழிபெயர்த்தாரென்று நினைத்தார்கள். லூக்காச் சுவிசேஷத்துக்கும் எபிரேய நிருபத்துக்கும் பாஷைநடை ஏகதேசம் ஒத்திருக்கிறது. ஓரிகென் என்ற சிறந்த வித்வான் இந்நிருபம் பரி. பவுலப்போஸ்தலனின் உபதேச சாராம்ஸமாயிருக்குமென்று உத்தேசித்தாலும் அவருடைய சொந்தக்கையால் எழுதப்பட்டதாகாதென்று கூறியிருக்கிறார். "இது யார் எழுதியதோ, கடவுளுக்குத்தான் தெரியும்" என்று தீர்த்துவிட்டார்.

ஆகிலும் நிருபத்தின் லட்சணங்களையும் அதிலுள்ள பல வாக்கியங்களையும் கவனிக்கும்பொழுது தெரியவருகிற காரியங்களாவன:—

1. நிருபாசிரியர் சுத்த யூதன்; யூதனாக எழுதுகிறதுமன்றி, அவர் மனோபாவனையிலே புறச்சமயிகள் இல்லை.

2. அவர் கிரேக்கர்; அதாவது அப்பாஷைப் பழக்கமுற்றவர். அவர் வேத வாக்கியங்களை எடுத்துரைக்கும்பொழுது, எபிரேய மூலத்திலிருந்தன்று, அதின் கிரேக்கு மொழிபெயர்ப்பிலிருந்து எடுத்துரைக்கிறார். கொஞ்சம் வித்தியாசமிருந்தாலும், அவருக்கிது கவையில்லை (எபி. 1. 6; 10. 5. காண்க.).

3. பீலோ சாஸ்திரியின் நூல்களை நன்றாய் வாசித்தவர்; அலெக்சாந்திரியா திருச்சபை உபதேசத்தைப் பூர்த்தியா யுட்கொண்டவர்.

4. வேதத்தில் வல்லவரும் வாக்குச் சாதுரியமுள்ளவரு மானவர்.

5. தீமோத்தேயுவின் நண்பன்.

6. தாம் எழுதிய சபையாருக்குத் தெரிந்தவர். அதிகாரத்தோடு அவர்களைக் கண்டிக்கிறார்.

7. அவர் தாமே அப்போஸ்தலனல்ல, அப்போஸ்தலரின் சீஷர்களில் ஒருவர் (அதி. 2. 3).

8. பரி. பவுலின் சித்தாந்தங்களை அறிந்தவர். அவர் ரோமருக்கெழுதின நிருபத்தை வாசித்தவர்.

9. அவர் நடை பரி. பவுலின் நடைக்கு ஒருவாறு ஒத்திருக்கினும், முற்றிலும் சுயபோங்குடையது.

10. எருசலேமின் அழிவுக்கு முன்பு இந்நிருபம் எழுதினார்.

11. நிருபத்திலே தேவாலயத்தைக் குறிப்பிடாமல், கூடாரத்தையே விவரித்து வருகிற காரணத்தால், நிருபாசிரியர் எருசலேமிலே எப்போதாயினும் இருந்ததாகத் தோன்றவில்லை.

மேற்படி விஷயங்களைக்கொண்டு நிருபாசிரியர்களென்று எண்ணப்பட்டவர்களைப் பரிசோதித்துப் பார்க்கலாம். **அக்கூவிலா**, தன் மனைவியிலும்* சிறிது தாழ்ந்தவராயிருந்தார் (அப். 18. 18; 2 தீமோ. 4. 19); அவர் இந்நிருபத்தை எழுதியிருக்க முடியாது. **தீத்து** யூதனல்ல. **சீலா**, பவுலின் தோழனும் உடனூழியனுமாயினும், எருசலேமைச் சேர்ந்த எபிரேயன். **பர்னபா** லேவியன்; அவர் எழுதினதாகச் சொல்லப்படுகிற இன்னொரு நிருபமானது இந்நிருபத்துக்கு எத்தனையோ கேவலமானதாகையால், அவரும் நிருபாசிரிய

* அம்மனைவியே எழுதியிருக்கலாமென்பதும் ஓர் நூதன துணிபு.

ராகார். ரோமாபுரிக் கிலேமெந்து தாம் எழுதின சிறந்த ஓர் நிரு பத்திலே இந்நிருபத்தை வேதவாக்கியமாக மதித்து, இதிலிருந்து அடிக்கடி எடுத்துரைக்கிறதினாலே, அவர் இதை எழுதியிருக்க முடியாது. பரி. மாற்குவின் சுவிசேஷம் இதற்குச் சுத்த வித்தியாச நடைபெற்றது. பரி. லூக்கா சுவிசேஷத்துக்கும் இந்நிருபத்துக்கும் பற்பல பொருத்தமான தொடர்மொழிகள் இருக்கினும், இந்தப் பொருத்தம் பரி. பவுலின் தோழமையினாலே உண்டாயிருக்கலாம்; அன்றியும், லூக்கா யூதனன்றெனத் தோன்றுகிறது (கொலோ. 4. 10–14). தீமோத்தேயு இதை எழுதினவரல்லவென்பது அதி. 13. 23. இனாலே ஸ்திரப்படுகின்றது. கடைசியில் ஒருவர் மாத்திரமுண்டு; அவர் பரி. பவுலின் சினேகரும் அவரால் குணப்பட்டவருமானவர். சீர்திருத்த சிகாமணியாகிய லூத்தர் அப்பொல்லோவாகிய இவர் பேரை எவ்வாறோ யூகித்துக் கூறியிருக்கிறார். அவரே இந்நிருபத்தை எழுதினவராகத் திருஷ்டாந்தப்படுகிறது.

எவ்வாறெனின்: (1) அவர் யூதன். (2) அவர் கிரேக்கன். (3) அவர் அலெக்சாந்திரியா நகரத்தான். (4) அவர் வாக்குச் சாதுரியவானும் வேத அறிவிலே வல்லவருமானவர். (5) தீமோத்தேயுவின் நண்பன் (6) அனேக சபைகளிலே அவருக்கு அதிக செல்வாக்குண்டாயிருந்தது. (7) ஒரு அப்போஸ்தலனால் உபதேசிக்கப்பட்டவர். (8) பவுலின் திவ்விய கலையை உட்கொண்டவர். (9) தமக்கேயுரிய சுவாதீன நடைவல்லவர். (10) அவர் எருசலேமிலிருந்ததாகத் தோற்றாவிடினும், அவருடைய நியாயப்போங்கு (இந்நிருபத்திற் கண்டிருக்கிறபிரகாரம்) யூதருக்கு எவ்வளவும் ஏற்றதாயிருந்தது. அவரது தைரிய நடையும் (அப். 18. 26), அவரது மனத்தாழ்மையும் (1 கொரி. 16. 12.) அவரையே சுட்டிக் காண்பிக்கின்றன. இந்த நியாயங்களினாலே இந்நிருபத்தை எழுதினவர் அப்பொல்லோ என்றே திண்ணந் தெளிவாய்த் தெரியவருகின்றது. அவர் நிருபாசிரியரன்றெனின், வேறு யாவரென்பது நமக்கு ஒருக்காலும் தெரியவராது.

அப்பொல்லோவைப்பற்றிய வேதவாக்கியங்களாவன:—

அப். 18. 24–28; 1 கொரி. 3. 4–6; 16. 12; தீத்து. 3. 13.

## 9. நிருபத்தின் பொருளடக்கம் அல்லது பிலான்.

முகவுரை:—நிருபவிஷயம்: கிறிஸ்துசமயத்தின் பரிபூரணம் (I. 1–4).

I. நவவெளிப்பாட்டின் மத்தியஸ்தராகிய குமாரன் தூதர்களுக்கு மேம்பட்டவர் (I. 5–II. 18).

II. பழைய புதிய உடன்படிக்கைகளை ஏற்படுத்தின மோசே, யோசுவா, இயேசு (III. IV).

III. கிறிஸ்துவின் ஆசாரியத்துவம் சர்வசக்தியுள்ளதும் அரசு மகிமை பொருந்தியதும் (V–VII).

IV. அவரது ஆசாரியத்துவம் பூரணமடைதல் (VIII–X–18).

V. உபதேசித்த சத்தியங்களை உட்கொள்ளல் (X. 19–XII).

முடிவுரை: XIII.



## இந்த முக்கிய பாகங்களை விரித்துக் காட்டியது.

**நிருபவிஷயம் கிறிஸ்துசமயத்தின் பரிபூரணம். I. 1–4.**

i. பழைய புதிய வெளிப்பாடுகள் முறையிலும், காலத்திலும் மத்தியஸ்தரிலும் வித்தியாசப்பட்டது (1, 2).

ii. திவ்ய தத்துவத்துக்கும் திரு அவதாரத்துக்கும் சம்பந்தமான குமாரனின் தன்மையும் தொழிலும் (3).

iii. நியாயத்தை விவரிக்க ஆரம்பித்தல் (4).

**I. நவவெளிப்பாட்டின் மத்தியஸ்தராகிய குமாரன் தூதர்களுக்கு மேம்பட்டவர்; I. 5–II. 18.**

i. சுருதிச்சாட்சி: I. 5–12.

ii. குமாரன் வழியாய்வந்த வெளிப்பாட்டை அவமதித்தலின் அபாயம் (II. 1–4).

iii. துன்பத்தினால் மனிதனுடைய ஜீவியநோக்கம் மனுஷ குமாரன் மூலமாய் நிறைவேறல் (II. 5–18).

**II. பழைய புதிய உடன்படிக்கைகள் ஏற்படுத்திய மோசே, யோசுவா, இயேசு; III. IV.**

i. மோசேயும் இயேசுவும்: ஊழியனும் குமாரனும் (III. 1-6).

(1) இயேசுவின் மகத்துவம் பொதுவிற் காட்டியது (1,2).

(2) மோசே வீடும்; இயேசு வீடுகட்டுகிறவரும் (3, 4).

(3) மோசே ஊழியன்: இயேசு குமாரன் (5, 6).

ii. பழைய, புதிய ஏற்பாடுகளின் வாக்கும் ஜனமும் (III. 7–IV. 13).

(1) விசுவாசம் ஆசீர்வாதத்திற்கு இன்றியமையாதது (III. 7–19).

(2) மீந்திருக்கிற வாக்கு (IV. 1–13).

(3) பிரதான ஆசாரியத்துவ உபதேசம் தொடங்கல் (IV. 14–16).

**III. கிறிஸ்துவின் ஆசாரியத்துவம் சர்வ சகத்யுள்ளதும் அரச மகிமை பொருந்தியதும் (மெல்கிசேதேக்கு): V.—VII.**

i. பிரதான ஆசாரியனின் முக்கிய லட்சணங்கள் (பச்சாதாபமும் திவ்வியாபிஷேகமும்) கிறிஸ்துவில் நிறைவேறியது (V. 1–10).

ii. பொறுமையான விதத்திலே கிறிஸ்தவ இரகசியங்களை அறியுஞ் சாதனம் (V. 11–VI).

iii. ஒப்புயற்ற ஆசாரியராக கிறிஸ்துவின் லட்சணங்கள் மெல்கிசேதேக்கால் (ராஜாசாரியன்) குறிக்கப்பட்டது (VII).

**IV. கிறிஸ்துவின் ஆசாரியத்துவம் பூரணமடைதல் (VIII–X. 18).**

i. கிறிஸ்துவின் ஆசாரியத் தொழிலின் ஸ்தானமும் சாதனங்களும் பொதுவிற் காட்டியது (viii).

(1) நவ ஆலயம் (viii. 1–6).

(2) நவ உடன்படிக்கை (7–13).

ii. பழைய ஆராதனையும், புதிய ஆராதனையும்: சட்டத்தின் பிராயச்சித்தமும் கிறிஸ்துவின் பிராயச்சித்தமும் (XX).

(1) பழைய உடன்படிக்கையின் ஆலயமும் ஆசாரியரும் (IX. 1–10).

(2) புதிய உடன்படிக்கையின் பிரதான ஆசாரிய பிராயச்சித்தம் (11–28).

iii. பழைய பலிகளும், புதிய பலியும்: கிறிஸ்துவின் ஏகபலியின் நித்திய பலன் (X. 1–18). உறுதி வாக்குக் கூறியது.

**V. உபதேசித்த சத்தியங்களை உட்கொள்ளல்.** X. 19-X. 11. 29.

i. எபிரேயரின் மிராசுகள், அபாயங்கள், உற்சாகங்கள் (X. 19–39).

ii. விசுவாசத்தின் பூர்வ ஜயங்கள் (xi).

iii. பூர்வ துன்பத்தின் பாடங்களைத் தற்காலத்துக் குபயோகித்தல் (XII .

**முடிவுரை:** (XIII).

திட்பநுட்பமான சில புத்திமதிகள். முடிவு.

குறிப்பு:—முதல் மூன்று பாகங்களின் இடையிலே விசேஷ எச்சரிப்புகள் அடங்கியிருக்கின்றன. கடைசிப்பாகம் மிகவும் பயபக்தியான கண்டனம்.



# எபிரேயருக்கு
# எழுதின நிருபம்.

## 1. அதிகாரம்.

பூர்வகாலங்களில் பங்கு பங்காகவும் வகை வகை யாகவும், தீர்க்கதரிசிகள் மூலமாய்ப் பிதாக்களுக்குத் திரு
2 வுளம்பற்றின தேவன்,—இந்தக் கடைசி நாட்களில் குமாரன்மூலமாய் நமக்குத் திருவுளம்பற்றினார்; இவ ரைச் சர்வத்துக்கும் சுதந்தரவாளியாக நியமித்தார், இவ
3 ரைக்கொண்டு உலகங்களையும் உண்டாக்கினார்.—இவர் அவ ருடைய மகிமையின் பிரகாசமும், அவருடைய தன்மை யின் சொரூபமுமாயிருந்து, சர்வத்தையும் அவருடைய வல்லமையுள்ள வசனத்தினாலே தாங்குகிறவராய் தம் மாலே தாமே நம்முடைய பாவங்களை நீக்கும் சுத்தி கரிப்பை உண்டுபண்ணி, உன்னதத்திலுள்ள மகத்துவ மானவருடைய வலது பாரிசத்திலே உட்கார்ந்தார்.—
4 இவர் தேவ தூதரைப்பார்க்கிலும் எவ்வளவு விசேஷித்த நாமத்தைச் சுதந்தரித்துக்கொண்டாரோ, அவ்வளவு அதி கமாய் அவர்களிலும் மேன்மை யுள்ளவரானார்.

### அதிகார விஷயம்.

கடவுள் கடைசியில் கிறிஸ்துவிலருளிய வெளிப்பாட்டின் பூர்த்தி யும் மேம்பாடும், **1–4.** கிறிஸ்து தூதரிலும் சிறந்தவரென்பதற்குத் திருஷ்டாந்தங்கள், **5–14.**

### அரும்பத விளக்கம்.

1. **பூர்வகாலங்களில்** அல்லது பூர்வத்தில். திரு அவதாரத்துக்கு முந்தின காலம்; ஆதாம்முதல் மல்கியாவரைக்கும். பழைய ஏற்பாட் டுக்காலம்; பொதுவாக 4,000-வருஷங்கொண்டது; ஆதியாகமம் முதல்

மல்கியா ஈறான திரு இலக்கியமாக 1,500 கொண்டது. **பங்கு**—வகை **யாகவும்**. யூதருக்குக் கிடைத்த வெளிப்பாடு ஒரேகாலத்திலாவது ஒரு விதமாயாவது அருளப்படவில்லை. முப்பத்தொன்பது ஆகமங்களையும் 32 பேர் பற்பல காலங்களிற் பெற்று இயற்றினார்கள். இவற்றுக்கும் வேறு முன்னுரைகளு மிருந்தன; ஆதாம்முதல் மோசேவரைக்கும் பரம்பரையாய் வந்தேறின வாக்கு முதலியன. **தீர்க்கதரிசிகள் மூலமாய்**. அல்லது தீர்க்கதரிசிகளிலே, கடவுளே அவர்களுக்குள்ளிருந்து உரையாடினார்; உடல் அவர்களுடையது, ஒலி அவருடையது என்றவாறு. மோசே, ஏசாயா முதலியவர்கள் மாத்திரமல்ல, அவர்களுக்கு முன்னிருந்த ஆபிரகாம், ஈசாக்கு முதலிய திருத்தொண்டர்கள். **பிதாக்களுக்கு**. யூதசபையின் முன்னோருக்கு. **தேவன்**, கடவுள்; சகலமையும், சகலத்தையும் கடந்த உள்ளம். தவன் என்பது இந்தியரின் சில்லரைத் தெய்வங்களைக்குறிக்கும் பதமாகையால், இவ்விருத்தியுரையில், அதை நீக்கி தமிழர்கள் சாதாரணமாய் வழங்கிவருகிற சுத்த தமிழபதமாகிய கடவுளையே உபயோகித்தல் காண்க. **திருவுளம் பற்றின**. பேசின என்றிருக்கவேண்டும்.

2. **இந்தக் கடைசி நாட்களில்**. இந்த நாட்களின் கடைசியில், அல்லது இந்த யுகாந்தகாலத்தில். அதாவது, கிறிஸ்துவின் யுகமாகிய புதிய ஏற்பாட்டுக்காலத்தில். **குமாரன் மூலமாய்**. குமாரனிலே. முன்னே பக்தர்களில் பேசினதுபோல இப்பொழுது புத்திரனிலே பேசியிருக்கிறார். **இவரை—உண்டாக்கினார்**. இவ்வாக்கியம் குமாரனுக்கு அடைமொழியானதால், இது "தம்மால் சகலத்துக்கும் சுதந்தரவாளியாக நியமிக்கப்பட்டு, உலகங்களை உண்டுபண்ணினவருமான குமாரனிலே" என்று மாற்றினால் பொருள் சிறக்கும். சாமானிய புருஷரிலேயன்று, இத்தகையான புத்திரனிலே பிதாவானவர் வாக்களித்தார். ஆபிரகாமுக்குச் செய்த வாக்கு எம்பெருமானிற் பலித்தது (கலா. 4. 7). கிறிஸ்துவின் புத்திர ரகசியம் இங்குக் குறிக்கப்படுகின்றது. யோ. 3. 35; மத். 28. 18 காண்க. கிறிஸ்து உலகங்களை உண்டுபண்ணினது நூதன போதனையல்ல. யோ. 1. 3; கொலோ. 1. 16; 1 கொரி. 8. 6 காண்க. இதிலே திரித்துவத்தின் இரண்டு புருஷர் வெளிப்பாடாகிறது; பிதாவும் புத்திரனும்.

3. **மகிமையின்பிரகாசர்.** குமாரனுக்கும் பிதாவுக்குமுள்ள சம் பந்தம் இருகூருக விளங்குகிறது; இது முதற்கூறு. அவர் தெய்வத் துவத்தின் பிரகாசம்; பிரஹ்மஜோதி. சூரியனிலிருந்து பிரகாசம் புறப்படுகிறதுபோல கடவுளினின்றும் குமாரன் புறப்பட்டுப் பிரகா சிக்கிறூர். இங்கு பிதாவை "மகிமை" என்றழைத்திருக்கிறது. 2 பேது. 1. 17; அப். 7. 55; லூக். 2. 9; யோ. 1. 14 பார்க்க. **தன்மையின் சொரூபம்.** இது குமாரனின் இரண்டாங்கூறு. காணுத்தத்துவத்தின் காணும் முத்திரை அல்லது சாயல். அவ்வாறே கொலோ. 1. 15–இல் "அதரிசனமான 'கடவுளின்' தற்சுரூபம்" என்னப்படுகிறூர். **வல்லமை யுள்ள வசனத்தினுலே** அல்லது சொற் சக்தியினுலே. தமது வார்த் தையினின்றும் புறப்படுகிற சக்தியினுலே என்றபடி. இது உண்டாக் கும் தொழிலன்று, காத்து ஆதரிக்குந் தொழில். கொலோ. 1. 17 பார்க்க. **தம்மாலே—உண்டுபண்ணி.** அனேக பிரதிகளில் தம்மாலே தாமே; நம்முடைய என்கிற பதங்கள் கிடையா. பாவச்சுத்திகரிப்பு செய்தபின்பு, என்று மொழிபெயர்க்கலாம். யாத். 29. 36–இல் கண்டிருக்கிற பிராயச்சித்த அல்லது சுத்திகரிப்புத் தினத்தை இதிற் குறித்திருக்கின்றது. **உன்னதத்திலுள்ள—பாரிசத்திலே.** கடவுளி னிடத்தில் என்பது கருத்து. கடவுள் எங்கும் வியாபித்தலால் அவரு க்குச் சரிசமானமாக என்றும் உரைக்கலாம். சங். 110. 1; எபே. 1. 20; லூக். 2. 14; காண்க. இவ்வசனங்களிலே மேசியாவானவர் திவ்ய புருஷனும், சர்வ சக்தியுள்ளவரும், நமது பாவத்துக்காக மரிக்கிறவரென் றும் பெறப்படுகிறது. **உட்கார்ந்தார்.** குமாரனின் திரு அவதாரத் தொழிலின் பூரணமும் முடிவும். எம்பெருமான் எடுத்த கருமம் முடிவு பெற்றது என்பது கருத்து. ஆட்டுக்குட்டியானவர் சிங்காசனத்தி லிருக்கிறூர்.

4. இந்த வாக்கியத்தில் யூதர்களுக்குள்ளே வழங்கிவந்த தூதர் வணக்கம் கண்டிக்கப்படுகிறது. அவர்களைவிடச் சிறந்த நாமத்தைச் சுதந்தரித்துக்கொண்டதினுலே, அவர்களைவிடச் சிறந்தவரென்று ரூபி த்தார். பிலி. 2. 9; வெளி. 19. 12; யோ. 3. 18.

## போதனை.

இந்த நான்கு வாக்கியங்களும், இந்நிருபத்தில் மட்டுமல்ல, வேத புஸ்தக முழுவதிலும், மகா முக்கியமானவை. முதல்வாக்கியம் கிரிஸ்து மார்க்கத்தின் சாராம்ஸமான குறள் வாக்கியமென்னலாம். பழைய ஏற்பாட்டின் திவ்யோற்பத்தி இதில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. நிருபக்கர்த்தா யூதர்களை அவமதிக்காமல் தன் கடிதத்தை ஆரம்பிக்கிறார். நாமும் ஹிந்துக்கள் முதலானோரோடு பேசுகையில், அவர்கள் சுருதிகளும் ஒருவாறு தெய்வ ஓசை பெற்றவையாக அவர்களால் அங்கீகரிக்கப்படுகிறதை அதிகமாய்க் கண்டிக்காதிருக்கலாம். கடவுள் தமது மக்கள் யாவரிடத்திலும் பேசுகிறவர்; அதிகமாய்க் கேட்பவரிடத்தில் அதிகமாய்ப் பேசுவார். பவுல் அப்போஸ்தலனின் நிருபங்களிலே காணப்படாத ஆறு தொடர்மொழிகளும், ஒன்பது இலக்கண விசேஷங்களும் இந்நான்கு வாக்கியங்களிலும் உண்டு. இயேசுகிரிஸ்து இந்நிருபத்தின் முதற்பொருள். அவர் தேவகுமாரன் என்கிறதை ஸ்தாபிப்பதே நிருபக்கர்த்தாவின் நோக்கம். முதல் இரண்டு வாக்கியங்களின் எழுவாய் பயனிலைகளைக் கவனியுங்கள்: **கடவுள் பேசினார்.** கடவுள் சிருஷ்டிப்பிலும், முன்னோரிலும், பக்தரிலும், வேதசுருதியிலும், பேசினார். வேதத்தில்தான் அவர் தொனி தீர்க்கமாய்க் கேட்கப்படுகிறது.

1. [5,6].

5 எப்படியெனில், நீர் என்னுடைய குமாரன், இன்று நான் உம்மை ஜநிப்பித்தேன் என்றும்; நான் அவருக்குப் பிதாவாயிருபேன், அவர் எனக்குக் குமாரனாயிருப்பார் என்றும், அவர் தூதர்களில் யாருக்காவது எப்போ
6 தாகிலும் சொன்னதுண்டா?—மேலும், தமது முதற்பேறானவரை உலகத்தில் பிரவேசிக்கச் செய்தபோது: தேவதூதர் யாவரும் அவரைத் தொழுதுகொள்ளக்கடவர்கள் என்றார்.

## அரும்பத விளக்கம்.

5. இனி இவ்வதிகார முழுவதிலும் கிரிஸ்து தூதர்களுக்கு மேலானவரென்று வேதவாக்கியங்களைக்கொண்டு ரூபிக்கப்படுகிறது. இந்த

நியாயம் யூதர்களுக்கு அத்தியாவசியமாயிருந்தது. யூதச்சபையிலே மேசியாவைக்குறித்துத் திருத்தமான எண்ணங்கள் கிடையா. தேவ தூதருக்கும் மேசியாவுக்குமுள்ள பெரும் பேதம் இங்கு காண்பிக்கப் படுகிறது. அவர்கள் ஏவலாளர்; இவரோ **குமாரன்.** சங். 2. 7. இதன் வெளிக்கருத்து தாவீதையும் உட்கருத்து எம்பெருமானையும் குறிக்கின் றது. அப். 13. 33–இலே பேதுரு அப்போஸ்தலன் இதே வச னத்தை எடுத்துரைக்கிறார். **இன்று.** இது கடவுள் விஷயத்தில் நித்தி யத்தைக் குறிக்கிறதாயினும், திருச்சபையானது எம்பெருமானின் உயிர்த்தெழுதலை இவ்வாறு கொண்டாடிற்று. அனாதிகாலந்தொட்டு கிறிஸ்து குமாரனாயிருந்தாலும், அவர் உயிர்த்தெழுந்தபொழுதுதான் அதைத் திருஷ்டாந்தப்படுத்தினார். ரோ. 1. 4 காண்க. **ஜனிப்பித் தேன்.** தந்தையானேன். திரியேகத்துவ இரகசியம் இதிலே போதிக் கப்படுகின்றது. தீக்கொழுந்துக்கு ஒளி எவ்வாறியல்போ, அவ்வாறே கடவுளாகிய தந்தைக்குக் குமாரன் இயல்பு; அன்றி அவ்வொளிக்கு உஷ்ணம் எவ்வாறோ, அவ்வாறே குமாரனுக்குப் பரிசுத்த ஆவியும் இயல்பே.

6. 2 சாமு. 7. 14 காண்க. புறக்குறிப்பு சாலொமோன் அரசன்; அகக்குறிப்பு நமதாண்டவர். இங்கு "உலகப்பிரவேசம்" திரு அவதா ரத்தைக் குறித்தது. **அவரை.** மேசியாவை. கிறிஸ்துவின் பிறப்பு முதல், உயிர்த்தெழுதல்வரையும் தேவதூதர்கள் அவருக்குத் தொண்டு செய்து வந்தார்கள். இனிமேலும் அவ்வாறே: மத். 25. 31; மாற். 8. 38; 1 பேது. 3. 22; வெளி. 5. 11–13 காண்க.

## இன்னொரு மொழிபெயர்ப்பு

5, 6 ஏனெனின், கடவுள் தூதர்களில் யாரைப்பார்த்தாவது, நீ என் குமாரன்; இன்று நான் உனக்குத் தந்தையானேன் என்றும், அல்லது மறுபடியும், நான் அவருக்குத் தந்தையும் அவர் எனக்குக் குமாரனுமாயிருப்போம் என்றும் எப்போதாயினும் சொன்னதுண் டோ? பின்னும், கடவுள் தலைப்பேற்றை உலகத்திற் கொண்டுவந்த பொழுது, கடவுளின் தூதர்கள் யாவரும் அவருக்குத் தலை குனியக் கடவர்கள் என்றார்.

1. 7-12

7 தேவதூதரைக் குறித்தோ: தம்முடைய தூதர்களைக் காற்றுகளாகவும், தம்முடைய ஊழியக்காரரை அக்கினி ஜுவாலைகளாகவும், செய்கிறார் என்று சொல்லியிருக்
8 கிறது.—குமாரனை நோக்கி: தேவனே, உம்முடைய சிங்காசனம் என்றென்றைக்குமுள்ளது, உம்முடைய ராஜ்யத்தின் செங்கோல் நீதியுள்ள செங்கோலாயிருக்
9 கிறது.—நீர் நீதியை விரும்பி, அக்கிரமத்தை வெறுத்திருக்கிறீர்; ஆதலால், தேவனே, உம்முடைய தேவன் உமது தோழரைப்பார்க்கிலும் உம்மை ஆனந்த தைலத்
10 தினால் அபிஷேகம் பண்ணினார் என்றும்;—கர்த்தாவே, நீர் ஆதியிலே பூமியை அஸ்திபாரப்படுத்தினீர்; வானங்கள் உம்முடைய கரத்தின் கிரியைகளா யிருக்கிறது;—
11 அவைகள் அழிந்துபோம்; நீரோ நிலைத்திருப்பீர்; அவைகளெல்லாம் வஸ்திரம்போலப் பழைமையாய்ப்போம்;—
12 ஒரு சால்வையைப்போல அவைகளைச் சுருட்டுவீர், அப்பொழுது மாறிப்போம்; நீரோ மாறாதவராயிருக்கிறீர், உம்முடைய ஆண்டுகள் முடிந்துபோவதில்லை என்றும் சொல்லியிருக்கிறது.

## அநும்பத விளக்கம்.

7. தூதர்களின் தோற்றங்கள் இங்குக் குறிக்கப்படுகின்றன. ஆவிகளாகிய அவர்கள் வாயுவாகவும், அக்கினியாகவும், ஆண் பெண் வடிவங்களாகவும் இஷ்டப்படி மாறுவார்கள். குமாரனோ என்றென்றும் மானிடவடிவம் பூண்டவர். சங். 104. 4. **ஊழியக்காரர்கள்.** தூதர்கள். இதனுடன், ஹிந்து தேவர்களாகிய வாயு, அக்கினி, வருணபகவான்களை ஒத்துப்பார்க்க. **காற்றுகள்.** ஆவிகளென்றாலும் பொருந்தும். **ஜுவாலைகள்.** ஒருமையா யிருத்தல்வேண்டும்.

8. **குமாரனைநோக்கி.** குறித்தோ. மேசியாவைக் குமாரனென்றழைக்கிறதைப் பழைய ஏற்பாட்டிலிருந்துமட்டும் உறுதிசெய்கிறதினாலே, நிருபாசிரியர் அப்போஸ்தலர் அல்லவென்றும், அனுபவத்திலிருந்து எழுதவில்லையென்றும் பெறப்படுகின்றது. இரட்சகரின் அநாதிப் புத்திரவத்துக்கு இரண்டு பலத்த சாட்சிகளுண்டு: ஒன்று ஞான

ஸ்நான சம்பவம்; மற்றது மறுரூப சம்பவம். அக்காலத்தில் சுவிசேஷங்கள் இன்னும் எழுதப்படவில்லை போலிருக்கிறது. **சிங்காசனம்.** பீடம். சங். 45. 6, 7. இங்கு மேசியாவைக் **கடவுள்** என்று கூறியிருக்கிறது காண்க. சிலர் இதை, "கடவுள் உமது நித்ய பீடம்" என்று மொழிபெயர்க்கலா மென்பார்கள். **உம்முடைய ராஜ்யத்தின்** – சில பிரதிகளில் அவநுடைய ராஜ்யம். **நீதியுள்ள.** நேர்மையான. இந்தச் சங்கீதம் கிரேக்கு மொழிபெயர்ப்பிலே அன்பர்க் கிதமென் றழைக்கப்படுகிறது; இப்படி இது மேசியாவைக்குறித்துப் பாடியதாக யூதச் சபையார் எக்காலமும் எண்ணிவந்தார்கள்.

9. **வெறுத்திருக்கிறீர்.** வெறுத்தீர் என்பதும் பாடம். **தேவனே.** இவ்விளி வேற்றுமையை எழுவாயாக்கி, உமது கடவுளாகிய கடவுள் என்று வாசித்தல்வேண்டும். யோ. 20. 17 காண்க: "என் தேவனிடத்திற்கும் உங்கள் தேவனிடத்திற்கும், மு." **ஆனந்த தைலத்தினுல்.** வெற்றியானந்தம். அபிஷேகத்தைக்குறித்து லூக். 1. 35; மத். 3. 16; அப். 10. 38; எசா. 61. 1 காண்க. இங்குக்கூறிய அபிஷேகம் மோட்சத்தில் மகிமை யடைதலைப் பற்றியது. **பார்க்கிலும். தோழருக்கு மேலாக.** தோழர் (1) தூதர்களையும் (12. 22), (2) விசுவாசிகளையும் (3. 14; 2. 11; 1 யோ. 1. 3) குறிக்கும்.

10. இனி சங். 102. 25–27. எடுத்துரைக்கிறூர். இது திருஷ்டாந்தமாகவல்ல, உதாரணமாகக் கூறப்படுகிறது. **ஆதியிலே.** பூர்வத்தில், **அஸ்திபாரப்படுத்தினீர்.** கடைக்கால் போட்டீர்.

11. **ஆயிருக்கிறது.** இது அவசியமன்று. **அவைகள் அழிந்துபோம்.** எசா. 34. 4; 2 பேது. 3. 12; வெளி. 21. 1. **நிலைத்திருப்பீர்.** நிலைத்திருக்கிறீர். **வஸ்திரம்போல.** ஆடையைப்போல. எசா. 1. 9 காண்க.

12. **சால்வை.** போர்வை. **சுருட்டுவீர்.** சுருட்டிவிடுவீர். **மாறாதவராயிருக்கிறீர்.** இத்துணைவினை அவசியமன்று; மாறுதவர் எனத் திருத்தவும். எபிரேயு மூலத்தில், "நீரே அவர்." **உமதாண்டுகள் முடிந்துபோகா** (13. 8; **வெளி. 1. 8.**)

1. 13-14.

13 மேலும், நான் உம்முடைய சத்துருக்களை உமக்குப் பாதபடியாக்கிப் போடும்வரைக்கும் நீர் என்னுடைய வலதுபாரிசத்தில் உட்காரும் என்று தூதர்களில் யாருக்காவது எப்போதாகிலும் அவர் சொன்னதுண்டா?—
14 இரட்சிப்பைச் சுதந்தரிக்கப் போகிறவர்களி னிமித்தமாக ஊழியஞ் செய்யும்படிக்கு அவர்களெல்லாரும் அனுப்பப்படும் பணிவிடை ஆவிகளா யிருக்கிறார்களல்லவா?

13. சங். 110. 1. இதே வாக்கியத்தை எம்பெருமான் தம்மைக் குறித்ததாகக் கூறியும் (மத். 22. 41-44), அவர் எதிரிகள் அதை மறுக்க முயலவில்லை. பேதுருவும் (அப். 2. 34); பவுலும் (1 கொரி. 15. 25) அவ்வாறே இதை எடுத்துரைக்கிறார்கள். **ஆக்கிப்போடும் வரைக்கும்.** உன் பாதங்கட்கு மணையாக்குமளவும். தோல்வித்த அரசர் கழுத்தில் காலைவைத்தல் கீழ்த்தேசத்து வழக்கம் மாத்திரமல்ல; ஒரு பாப்புவும் ஒருமுறை அவ்வாறு செய்தார்.

14. இவ்வாக்கியத்தில் நிருபாசிரியர் தூதர்கள் புத்திரரன்று, கடவுள் ஏற்படுத்தும் துணைவரே என்கிறார். **சுதந்தரிக்கப்போகிறவர்களி னிமித்தமாக.** சுதந்தரிப்பவருக்காக என்றால் போதும். **பணிவிடை** ஏவல்புரியும் ஆவிகள். சங். 34. 7; 91. 11; ஆதி. 19. 15; தானி. 6. 22; அப். 12. 7 காண்க.

## கருத்துரை.

இவ்வருமையான அதிகாரத்தை வாசிப்போர் இதன் கருத்தை லகுவாய் அறிந்துகொள்ளலாம். அக்காலத்து குணப்பட்ட யூதக்கிறிஸ்தவர்கள் மனதில் கொஞ்சம் சந்தேகமிருந்தாற்போற் காண்கிறது. இரட்சகரின் உன்னத புத்திரத்துவத்தைச் சீராய்க் கிரகித்தவர்களல்ல. அவரியற்றிய பரம ரட்சிப்பையும், அதன் பலன்களையும் இன்னும் ஆழ்ந்துணர்ந்து அனுபவிக்கவில்லை. இதனால்தான் நிருபாசிரியர் தூதர்களுக்கும் எம்பெருமானுக்குமுள்ள தாரதம்யத்தை இதிலே நன்கு விளக்கி, பல வேத சுருதிகளைக்கொண்டு திருஷ்டாந்தப்படுத்துகிறார்.

# 2. அதிகாரம்.

2. 1-4.

ஆகையால், நாம் கேட்டவைகளை விட்டு விலகாதபடிக்கு, அவைகளை மிகுந்த ஜாக்கிரதையாய்க்
2 கவனிக்கவேண்டும். — ஏனெனில், தேவதூதர் மூலமாய்ச் சொல்லப்பட்ட வசனத்திற்கு விரோதமான எந்தச் செய்கைக்கும் கீழ்ப்படியாமைக்கும் நீதியான தண்டனை வரத்தக்கதாக அவர்களுடைய வசனம் உறு
3 திப்படுத்தப்பட்டிருக்க,—முதலாவது கர்த்தர் மூலமாய் அறிவிக்கப்பட்டு, பின்பு அவரிடத்தில் கேட்டவர்களா
4 லே நமக்கு உறுதியாக்கப்பட்டதும், — அடையாளங்களினாலும் அற்புதங்களினாலும் பலவிதமான பலத்த செய்கைகளினாலும், தம்முடைய சித்தத்தின்படி பகிர்ந்துகொடுத்த பரிசுத்தஆவியின் வரங்களினாலும், தேவன் தாமே சாட்சிகொடுத்ததுமாயிருக்கிற இவ்வளவு பெரிதான இரட்சிப்பைக்குறித்து நாம் கவலையற்றிருப்போமானால் தண்டனைக்கு எப்படித் தப்பித்துக்கொள்ளுவோம்.

## அதிகார விஷயம்.

கண்டிப்பான எச்சரிப்பும் புத்திமதியும் (1–4). கிறிஸ்து மானிடருக்காகத் தம்மைத் தாழ்த்தினது அவருடைய மகத்துவத்துக்குக் குறையன்று (5–13). அது அவரது ஆசாரிய ஊழியத்தின் பூர்த்திக் கவசியமென்பது (14–18.

## அரும்பத விளக்கம்.

1. ஆகையால், மேற்கண்ட காரணத்தால். தேவதூதரல்ல, தேவகுமாரனே நமது உடன்படிக்கைக் கர்த்தாவும், நித்திய அரசுபுரிந்த மத்தியஸ்தருமானதால். இவ்வாக்கியத்தின் மொழிபெயர்ப்பு சிறக்கவில்லை. கேட்ட விஷயங்களை விட்டு நாம் ஒருவேளை விலகிவிடாதபடிக்கு அவற்றை அதிக சிரத்தையுடன் மதிக்கவேண்டும். இங்கே



விலகல் என்பது படவு நங்கூரத்தைவிட்டு மிதந்துபோய்விடுகிற உருவகம். 20. 4. 9. காண்க. எபிரேய கிறிஸ்தவர்கள் தங்களுக்கு நேரிட்ட பல துன்பங்களினாலே தங்கள் விசுவாசத்தை நெகிழவிடப் பல சோதனைகளிருந்தன. விலகிப்போகிற தறுவாயிலிருப்பவருக்கு இயேசு அருமையான துறைமுகம். பாலியனுக்கும், வர்த்தகனுக்கும், பேர்க்கிறிஸ்தவனுக்கும் விலகிவிடும் சோதனையுண்டு. (3. 6; 6. 11; 10. 25, 36, 37; 12. 1–3) காண்க.

2 ஏனெனில். இனி வருகிற நியாயம் சிறிதிலிருந்து பெரிது பெறப்படுகிற நியாயம். **தேவதூதர் மூலமாய்.** கடவுள் ஆதியில் வெளிப்படுத்தின விஷயங்கள் தூதர்கள் மூலமாய் உரைக்கப்பட்டன வென்பது யூதரின் ஐதீகம். உப. **33. 2**; சங். **68. 17** காண்க. அவ்வாறே, அப். **7. 53**; கலா. **3. 19**–இலும். சீனாய்ப் பர்வதத்தில் கற்பலகைகளிலே எழுதினவர்கள் தூதர் என் றெண்ணப்படுகிறது. இவ்வாக்கியத்தின் மொழிபெயர்ப்பாவது: ஏனென்றால், தேவதூதர் மூலமாய் உரையுண்ட வார்த்தை உறுதிபெற்று, அதன் ஒவ்வொரு மீறுதலும் தவறுதலும் நீதியான பலாபலன் பெற்றதானால், என்ற வாறு. இதற்குப் பல உதாரணங்கள் உண்டு. லேவி. **10. 1, 2**; எண். **15. 32, 36**; உப. **4. 3.** காண்க. நீதிச்சட்ட விதிகளைத் தவறுவோர் தண்டனைக்குத் தப்பமுடியாது. **உறுதியாய்** தெய்வவாக் கென்று ரூபிக்கப்பட்டது.

3 **கர்த்தர் மூலமாய்,** சுவிசேஷம் அல்லது நற்செய்தி இரட்சகர் மூலமாய்த்தான் முதல் முதல் அறிவிக்கப்பட்டது. மாற். 1. 14

காண்க. பவுல் இவ்வாறு கிரிஸ்துவைக் "கர்த்தர்" என்று வெறுமை யாய்க் கூறுகிறதில்லை. **அவரிடத்தில்.** இது மூலத்தில் இல்லை. **கேட்டவர்களாலே,** நாம் நேராய்க் கர்த்தரிடத்திலிருந்து பெற்றுக்கொள்ள வில்லை. அப்போஸ்தலராதிகள் அவரிடத்திற் கேட்டு நமக்கு அறிவித் தார்கள். இதனால் நிருபாசிரியர் பவுலுமல்ல, வேறு அப்போஸ்தலரு மல்ல என்பது விசதமாகிறது. பவுல் இவ்வாறெழுதார்; அவர் நேரே ஆண்டவரிடத்திலிருந்து சுவிசேஷத்தைப் பெற்றதாகப் பலமுறை கூறியிருக்கிறார் (கலா. 1. 1, 12; அப். 22. 10; 26. 16; 1 கொரி. 11. 23; 15. 3) காண்க.

4 **அற்புதங்களினாலும்.** ஆச்சரியங்களினாலும். **பல — செய்கைகளினாலும்,** பற்பல சக்திகளினாலும். **சித்தத்தின்,** சொந்த சித்தத் தின்படி. தமக்குப் பின்னே ஒருவர் உண்டென்பதற்கு. **அடையாளங் களும்,** இயல்புக்கு மாறான அல்லது மேலான ஆச்சரியங்களும், இன்னு மனந்த **சக்திகளும்** சேர்ந்து அவர்கள் வார்த்தையைத் திருஷ்டாந்தப்படுத்தின. மாற். 16. 20; அப். 2. 43; 19. 11; இதோடு, ரோம. 15. 17, 18; 1 கொரி. 2. 4 காண்க. **தேவன் தாமே சாட்சி கொடுத்ததும்.** கடவுள் தாமே அவர்களுடன் சாட்சி பகர்ந்ததும் என்று மொழிபெயர்க்கவேண்டும். தெய்வ சாட்சியும் மனுஷ சாட்சியும் ஒன்றுசேர்ந்தன. **கவலையற்றிருப்போமேயானால்,** அலட்சியம் செய்தபின்பு அல்லது அலட்சியஞ்செய்திருக்கிற நாம். **நாம்.** ஊழியரன்று, புத்திரராகிய நாம். **தண்டனை.** பொருளுக்காக வருவிக்கப்பட்டது; மூலத்திலில்லை. **பகிர்ந்து.** 1 கொரி. 7. 17; 12. 11; ரோம. 12. 3. கருத்துரை. தூதர் மூலமாய் அருளப்பட்ட வாக்கின் மீறுதலுக்கு அத்தனை தண்டனையாயின், குமாரனாகிய கர்த்தர் மூலமாய் அருளப்பட்ட சுவிசேஷத்தின் அலக்ஷியத்துக்கு எத்தனை தண்டனை கிடைக்கும்?

இவ்வார்த்தைகள் எபிரேய கிரிஸ்தவர்களுக்கு எச்சரிப்பாயிருக்கி றதுபோல தற்கால சபையாராகிய நமக்கும் முக்கியமான எச்சரிப் பென்று எண்ணிக்கொள்ளவேண்டும். இத்தனைப் பெரிதான ரட்சிப்பு! பாவத்தின் பழியையும் பலத்தையும் அறவொழித்துப் பரிசுத்த இருத யத்தையும் ஜீவியத்தையும் உண்டுபண்ணுகிற இத்தனைப் பெரிதான

ரட்சிப்பு! நித்திய குமாரன் தாமே உலகத்தி லவதரித்து உயிர்த்தி யாகம்பண்ணி மீண்டும் உயிர்த்தெழுந்த உயர்பதவி சேர்ந்திருக்கும் இத்தனைப் பெரிதான ரட்சிப்பு என்றவாறு. எவனுக் கதிகம் அருளப் பட்டதோ, அவனிடத்தில் அதிகம் கேட்கப்படும். இந்த ரட்சிப்பை அவமதிப்பார் எப்படித் தப்புவார்?

**2.** 5-8.

5 இனிவரும் உலகத்தைக்குறித்துப் பேசுகிறோமே,
6 அதை அவர் தூதர்களுக்குக் கீழ்ப்படுத்தவில்லை. — ஒரு இடத்திலே ஒருவன் சாட்சியாக: மனுஷனை நீர் நினைக் கிறதற்கும், மனுஷனுடைய குமாரனை நீர் விசாரிக்கிற
7 தற்கும் அவன் எம்மாத்திரம்?—அவனை தேவதூதரிலும் சற்றுச் சிறியவனாக்கினீர்; மகிமையினாலும் கனத்தினா லும் அவனுக்கு முடிசூட்டி, உம்முடைய கரத்தின் கிரி யைகளின்மேல் அவனை அதிகாரியாக வைத்து, சகலத் தையும் அவனுடைய பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தினீர்
8 என்று சொன்னான்.—சகலத்தையும் அவனுக்குக் கீழ்ப் படுத்தினார் என்கிற விஷயத்தில், அவர் அவனுக்குக் கீழ்ப்படுத்தாத பொருள் ஒன்றுமில்லை; அப்படியிருந் தும், இன்னும் அவனுக்குச் சகலமும் கீழ்ப்பட்டிருக்கக் காணோம்.

## அரும்பத விளக்கம்.

5. **இனிவரும் உலகத்தை.** இனிவரும் யுகத்தானை. கிறிஸ்துவின் காலத்தைக் குறிக்கின்றது. அதற்கு முன்னிருந்த யுகம் தூதர்கள் ஆட்சி. சங். 82. 1 காண்க. அக்காலத்தில் 70 ஜாதிகள் 70 தூதர் கள் காப்பிலிருந்ததாகவும், எபிரேயர்மட்டும் ஒரு தூதனின் விசேஷக் காப்பிலிருந்ததாகவும் யூதர்கள் நம்பியிருந்தார்கள். ஆகிலும், இந்த யுகத்தில் அவர்களுக்கு ஆட்சி கிடையாது. ஆபிரகாமும், யோசுவா வும், தானியேலும் தூதர்களைக் கையெடுத்துக் கும்பிட்டாலும், இந் தப் புதிய உடன்படிக்கைக்காலத்தில் யோவான் அப்படி வணங்க இடம்பெறவில்லை (வெளி. 19. 10; 22. 9. ஆயினும், எம்பெரு மான் உயிர்த்தெழுதலோடு ஆரம்பித்த இந்த யுகம் முடிந்து இன் னொரு யுகம் பிறக்கும்; அப்பொழுது அவரது அரசு பூர்த்தியாகி

விடும். ஏனெனில், நாம் குறிப்பிக்கிற எதிர்கால யுகத்தை அவர் தேவதூதர்களுக்குக் கீழ்ப்படுத்தவில்லையே—என—று.

6. **ஒரு இடத்திலே.** சங். 8. பரி. பவுல் இப்படிப் பொதுவாக உரைக்கிறதில்லை. இந்தச் சங்கீதம் முதலாவது சாதாரண மனிதனையும் இரண்டாவது மனித குமாரனாகிய எம்பெருமானையும் குறிக்கின்றது. 1 கொரி. 15. 27: எபே. 1. 22. மனுஷகுமாரன் மேசியாவைக் குறிப்பதற்கு தானி. 7. 13 காண்க. கடவுள் மனிதனை நினைக்கிறதும், சந்திக்கிறதும் அவன் சிறப்பைக் காண்பிக்கிறது. **விசாரிக்கிறதற்கும்.** சந்திக்க, போய்ப் பார்க்க. கடவுள் ஆதாமேவாளைத் தோட்டத்தில் போய்ப் பார்த்தார். **எம்மாத்திரம்? என்ன** என்றாலுமே போதும். அவன் ஒரு பொருட்டல்ல; கேவலம் அற்பன். ஆயினும் அவன் திவ்ய சாயலில் சிருஷ்டிக்கப்பட்டவன். நித்ய ஆத்மாவானவன். உலகத்தை அடக்கி ஆள்பவன். சராசரமனைத்தும் அவனுக்கு ராஜ்யமாக அளிக்கப்பட்டது. (ஆதி. 1 அதி.)

7, 8. **சற்று.** அளவிலே கொஞ்சம் அல்ல, கொஞ்சக்காலத்துக்கு என்று அனேக வியாக்கியானிகள் எண்ணுகிறார்கள். 9-ம் வசனம் காண்க. 1 பேது. 5. 10. **சிறியவன்.** தாழ்ந்தவன். மீட்கப்பட்டவர்கள் மறுமையிலே தேவதூதர்களிலும் அதிகமான மேன்மையடைவார்கள். ஆயினும், இம்மையிலே மனிதன் அற்ப சொற்ப ஸ்திதியிலிருந்து வருந்துகிறான். **உம்முடைய—விபத்து.** அனேக பிரதிகளிலே இந்த வார்த்தைகள் இல்லை. இந்தச் சங்கீத வாக்கியத்திலே மனிதனானவன் பிரபஞ்சத்துக் கதிபதியென்பது தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆதிகாலம் தொடுத்து மனுஷன் பூமியையும் அதன் சராசரமனைத்தையும் அரசன்போல அனுபவித்துவருகிறான். சகல உயிர்ப் பிராணிகளும் பஞ்சபூதங்களும் அவனுக்கு அடிமைகளாய்விட்டன. தற்காலம் ஆகாயத்தையும் வசப்படுத்தி வருகிறான். இத்தனை மேன்மை பொருந்தியவனாயினும், தூதர்களுக்கு அவன் கீழ்ப்பட்டவனே. அவன் சரீரம் ஸ்தூலசரீரம்; அவர்களது சூட்சும சரீரம்; அவர்கள் யதேச்சையாய் எங்கும் செல்லலாம், அவனுக்கோ உதவியின்றி இடம் விட்டு, இடம் பெயர முடியாது; அவர்கள் சக்திக்கு அளவில்லைபோற் காண்கிறது; அவனோ அற்பக்காரணத்தால் உயிரிழப்பவன்; அவர்க

ளுக்குச் சாவில்லை; அவனோ அநித்திய உடற் படைத்தவன்; அவர்கள் எந்நாளும் தெய்வசமுகத்திலிருப்பவர்; அவனோ கடவுளை ஒருக்காலும் கண்டதேயில்லை." இத்தியாதி காரணங்களினாலே மனிதன் தூதனுக்கும் தாழ்ந்தவன்தானே.

8. இந்த வாக்கியத்தின் இரண்டாம் பாகத்திலே மனிதனுக்குக் கிடைத்திருக்கிற சிலாக்கியத்தைச் சிறப்பாக விவரித்திருக்கிறது. **சகலத்தையும்—கீழ்ப்படுத்தினீர்.** மத். 28. 18. யாதொரு குறைவும் கிடையாது. இது எம்பெருமானில்மட்டும் பூர்ணமாய் நிறைவேறிற்று. வாஸ்தவத்தில், மனுஷனுக்கு இன்னும் சகலமும் கீழ்ப்பட்டிருக்கக் காணோம். இவ்விஷயத்தில்தான் அவன் முக்கியமாய் தூதர் தத்துவத்துக்குத் தாழ்ந்தவன். ஆயினும், மறுமையிலே தன் மீட்பரோடு அவனும் உயர்த்தப்படுவான். தன்னைக் கீழ்ப்படுத்துகிறதை விடச் சிறப்பு வேறு கிடையாது.

2. 9-10.

9 என்றாலும், தேவனுடைய கிருபையினால் ஒவ்வொருவருக்காகவும், மரணத்தை ருசிபார்க்கும்படிக்கு தேவதூதரிலும் சற்றுச் சிறியவராக்கப்பட்டிருந்த இயேசு மரணத்தை உத்தரித்ததினிமித்தம் மகிமையினாலும் கனத்தினாலும் முடிசூட்டப்பட்டதைக் காண்கிறோம்.—
10 ஏனென்றால் தமக்காகவும் தம்மாலேயும் சகலத்தையும் உண்டாக்கினவர், அநேகம் பிள்ளைகளை மகிமையில் கொண்டுவந்து சேர்க்கையில் அவர்களுடைய இரட்சிப்பின் அதிபதியை உபத்திரவங்களினாலே பூரணப்படுத்துகிறது அவருக்கேற்றதாயிருந்தது.

9. நிருபாசிரியர் மேற்கண்ட தீர்க்கதரிசனத்தைக் கிறிஸ்துவில் பூர்த்தியாய் நிறைவேறக்கண்டு அதை இங்குத் தெளிவாயும் தீர்க்கமாயும் விளக்கிவைக்கிறார்.

அரும்பத விளக்கம்.

**என்றாலும்.** முன் சொன்னதுக்கும் பின் சொல்வதுக்கும் உள்ள பேதம். சாதாரண மனுஷனுக்கும் திவ்ய குமாரனுக்கும் உள்ள வித்தியாசம். **தேவனுடைய கிருபையினால்,** கடவுள் அருளால்.

இரண்டொரு பாடங்களில் "தேவனை அன்றி" அல்லது தவிர என்றிருக்கிறது. இதை ஆதாரமாகக்கொண்டு சிலர் பூர்வத்தில் பலவிதமான பொருளுரைத்திருக்கிறார்கள். உதாரணமாக, (1) கிறிஸ்துவின் திவ்யத்துவம் சாகவில்லை; (2) பிதாவினால் கைவிடப்பட்டு எம்பெருமான் மரித்தார்; (3) கடவுள் ஒருவர்தவிர, மற்ற யாவருக்காகவும் அவர் மரித்தார்; (4) கடவுள் ஒருவர்தவிர மற்றெல்லாரையும் மீட்டுத் தமக்கு அடியாராக்கிக் கொள்ளும்படி. இவையெல்லாம் யுக்தி வார்த்தையாய் உரைக்கப்பட்டவை. "கடவுளருளால்" என்பதே திருத்தமான பாடம். பெயர்த்தெழுதுகிறவர்கள், அச்சு இல்லாத அக்காலங்களில், பிழைகள் செய்துவிடுகிறதுண்டு. ஏறக்குறைய ஒரே ஒலி வடிவாயிருந்த வார்த்தைகளைப் பிசகாய் மாற்றிவிடுவார்கள். இந்த இடத்திலே "காரிட்டி" என்கிற கிரேக்குப் பதத்துக்குப் பதிலாக "கோரிஸ்" என்கிறதை எழுதியிருக்கலாம். ஆகிலும், கடவுளருளால் என்பது சிறந்த சத்தியம். "கடவுள் உலகத்தை இவ்வளவாய் நேசித்தார்" என்பது வேதவாக்கியம். இரட்சிப்பிலே குமாரனுக்கு எவ்வளவு கனிவோ அவ்வளவே பிதாவுக்கும். இரட்சிப்பிலே திரித்துவத்தின் திரிபுருஷரும் ஒன்றுகூடினார்கள். **ருசிபார்க்கும்படி**, ருசிக்கும்படி. ரட்சகர் மரித்தது சர்வ மனிதரும் மரித்ததுபோல. இது உருவகம் பூர்வத்தில் விஷங்கலந்த ஜலத்தைக் குடிக்கக் கொடுப்பார்கள். மத். 16. 18; யோ. 8. 52. **சற்று**. முன்போல, கொஞ்சக்காலம், இந்தப் பொருள் கிறிஸ்துவின் இகஜீவியத்தில் சிறந்து விளங்கும். அதற்கு முன்பும் பின்பும், குமாரனும் பிதாவைப்போல தேவ தூதருக்கு உயர்ந்தவராயிற்றே. **உத்தரித்தது**. சகித்தது. **மகிமையினாலும் கனத்தினாலும்**, கனகௌரவத்தால் எ-று. நாமோவெனில்.. ......முடிசூட்டப்பட்ட இயேசுவைப் பார்க்கிறோம் என்று மொழி பெயர்த்தால் பொருள் நன்கு விளங்கும்.

10. **ஏனென்றால்**—இயேசு மரணத்தைச் சகிக்க நேரிட்ட காரணம் இங்குக் கூறப்படுகிறது. **உண்டாக்கினவர்**. சகலமும் உண்டாகச்செய்தவர். இவ்வார்த்தைகள் பிதாவைக் குறித்தவை. ரோம. 11. 36. குமாரனைக் குறித்தும் இவ்வாறு உரைக்கப்படுகிறது. **பிள்ளைகளை**. புத்திரரை, **மகிமையில்**, ஓ. மகிமைக்குக் கொண்டுவந்து,

என்றாலுமே போதும். **சேர்க்கையில்** அவசியமில்லை. **அதிபதியை.** தலைவனை; கர்த்தனை. அப். 8. 5; 31. 3. 15 காண்க. **உபத்திரவங் களினாலே**—மூலமாய். **ஏற்றதாயிருந்தது.**—தகுதியாயிருந்தது. நமக் குப் பதில் பலிசெலுத்தப்பட்டாரென்று இங்கு போதிக்கப்படக்கா ணோம். சிலுவையின்மீதுதான் விசுவாசிகளின் பிற்கால மகத்துவம் சம்பாதிக்கப்பட்டது. இங்கே பூர்ணம் பலியையன்று, துன்பத்தின் முடிவாகிய மகிமையைக் குறித்தது. யூதக்கிறிஸ்தவர்கள் மேசியா துன்பஞ் சகிக்கவேண்டுமென் றெண்ணினதில்லையாம். அவருடைய ஜீவியம் முழுவதும் மகிழ்ச்சியும் மகிமையும் பொருந்தியதா யிருக்கு மென்று பிசகாய் நினைத்துக்கொண்டார்கள், இந்தப் பிசகை நிருபா சிரியர் கண்டிக்கிறார். இரட்சகரைப்போலவே நாமும் துன்பஞ்சகிக் கவேண்டியவர்கள் என்பதை மறக்கலாகாது. துன்பம் இன்பத்துக் குப் பாதை.

2. 11-18.

11 எப்படியெனில், பரிசுத்தஞ் செய்கிறவரும் பரிசுத் தஞ் செய்யப்படுகிறவர்களுமாகிய யாவரும் ஒருவராலே உண்டாயிருக்கிறார்கள்; இதினிமித்தம் அவர்களைச் சகோதரரென்று சொல்ல அவர் வெட்கப்படாமல்:—
12 உம்முடைய நாமத்தை என் சகோதரருக்கு அறிவித்து, சபைநடுவில் உம்மைத் துதித்துப் பாடுவேன் என்றும்;—
13 நான் அவரிடத்தில் நம்பிக்கையாயிருப்பேன் என்றும்; இதோ, நானும், தேவன் எனக்குக் கொடுத்த பிள்ளை
14 களும் என்றும் சொல்லியிருக்கிறார்.—ஆதலால், பிள் ளைகள் மாம்சத்தையும் இரத்தத்தையும் உடையவர்களா யிருக்க, அவரும் அவர்களைப்போல மாம்சத்தையும் இரத்தத்தையும் உடையவரானார்; மரணத்துக்கு அதி காரியாகிய பிசாசானவனைத் தமது மரணத்தினாலே
15 அழிக்கும்படிக்கும்,—ஜீவகாலமெல்லாம் மரணபயத்தி னாலே அடிமைத்தனத்திற் குள்ளானவர்கள் யாவரையும்
16 விடுதலைபண்ணும்படிக்கும் அப்படியானார்.—ஆதலால், அவர் தேவதூதருக்கு உதவியாகக் கைகொடாமல், ஆபிர காமின் சந்ததிக்கு உதவியாகக் கைகொடுத்தார்.—
17 அன்றியும், அவர் ஜனத்தின் பாவங்களை நிவிர்த்தி

செய்வதற்கேதுவாக, தேவகாரியங்களைக்குறித்து இரக்கமும் உண்மையுமுள்ள பிரதான ஆசாரியரா யிருக்கும் படிக்கு எவ்விதத்திலும் தம்முடைய சகோதரருக்கு ஒப்
18 பாகவேண்டியதாயிருந்தது. — ஆதலால், அவர் தாமே சோதிக்கப்பட்டுப் பாடுபட்டதினாலே, அவர் சோதிக்கப் படுகிறவர்களுக்கு உதவிசெய்ய வல்லவராயிருக்கிறார்.

11. **எப்படியெனில்.** பின்வரும் மூன்று வாக்கியங்களில் மேற்கண்ட "தகுதி"க்குதாரணம் விவரிக்கப்படுகிறது. **பரிசுத்தஞ்,** மூ.-பிரதிஷ்டை. பரிசுத்த விர்த்தியல்ல, யாதொரு பரிசுத்த விஷயத்துக்காகப் பிரதிஷ்டை செய்யப்படுதல். அதி. 9. 13, 14; 10. 10, 14; 13. 12-ஓடு யோ. 17. 17–19; 1 யோ. 1–7 ஒத்துக் காண்க. இருகட்சியாரும் ஒற்றுமையுடையவராயிருத்தல் அவசியம். **ஒருவராலே**-ஆபிரகாமாலேயல்ல, கடவுளாலேயே. **சகோதரரென்று.** இந்நிருப மெழுதப்பட்டபொழுது, சுவிசேஷங்கள் இல்லையென்பதற்கு இதுவே சாட்சி. இல்லாவிட்டால், சகோதர பாத்தியத்துக் காதரவாகப் பழைய ஏற்பாட்டிலிருந்தல்ல, புதிய ஏற்பாட்டிலிருந்தே நிருபாசிரியர் எடுத்துரைத்திருப்பார். மத். 12. 49, 50, அல்லது யோ. 20. 17; மத். 28. 10 முதலிய வாக்கியங்கள் அவர் ஞாபகத்துக்கு வரும். **சொல்ல** – அழைக்க. **வெட்கப்படாமல்.** இரட்சகர் தமது விசுவாசிகளை பஹிரங்கத்தில் சகோதரரென்று அறிக்கையிட வெட்கப்படார்.

12. இவ்வாக்கியம் சங். 22. 22. இதை மேசியாவைப்பற்றிய முன்னுரையாக பூர்வ சபை அங்கீகரித்திருந்தது. மத். 27. 46 காண்க. இது பெரிய வெள்ளிக்கிழமையில் வாசிக்கப்படுகிற சங்கீதம். **துதித்துப் பாடுவேன்** ஸ்துதியைப் பாடுவேன் என்பது மூலம். அன்றியும் மத். 27. 35; யோ. 19. 24 ஒத்துப்பார்க்க.

13. இதிலே நிருபாசிரியர் ஏசா. 8. 17-யும், சங். 18. 2; 2 சாமு. 22. 3-யும் கலந்துரைக்கிறார். **நம்பிக்கையாயிருப்பேன்**—கிறிஸ்துவின் மனுஷீகம் இப்பதத்தால் விளங்குகின்றது. ஏசாயா தமது புத்திரரைக் குறித்துரைத்ததை இவர் மேசியா தாமே உரைத்த முன்னுரையாகக் கூறுகிறார். ஏசாயா இரட்சகருக்கு முன்னடையா

ளமா யிருந்தவர். எம்பெருமான் தாமே தமது பெரிய ஜெபத்திலே "நீர் எனக்குத் தந்தவர்கள்" என்கிறார். யோ. 17. 12.

14. **மாம்சத்தையும்,** ஞ. அல்லது, ஊன், உதிரத்திற் பங்கு பெற்றவர்களாயிருக்கிறதால் **அவரும்,** ஞ. அவரும் அவர்களைப் போலவே அவற்றில் பங்கு பெற்றவரானார். அதாவது, மானிட உடலெடுத்தார்; பூரண மனுஷனானார். எபே. 6. 12. பின்வரும் வார்த்தைகள் அடுத்த வாக்கியத்தில் அடங்கவேண்டும். **மரணத்துக் கதிகாரியாகிய பிசாசா**னவனை, ஞ. திரு அவதாரத்தின் இரண்டு நோக்கங்களாவன: (1) தமது மரணத்தால் மரணத்துக் கதிகாரியைச் சூனியமாக்கும்படி; மனுஷ ஜாதியின்பேரில் விதித்த சாப மரணம். எம்பெருமான் அதை வென்று, மரணத்தினின்று மீண்டும் உயிர்த்தெழுந்தார். 2 தீமோ. 1. 10; 1 கொரி. 15. 51–57; வெளி. 1. 18 காண்க. சாத்தானுக்கு மரணத்தை வருவிக்க இடம் மாத்திரம் கொடுக்கப்பட்டிருக்கிறது

15. (2) இவ்வாக்கியம் முழுவதும். மேற்கண்ட அவரும், ஞ— என்ற வார்த்தைகளை இவ்வாக்கியத்தின் கடைசியில் மாற்றிவைக்க வேண்டும் மரணத்துக்கு மரணத்தை உண்டுபண்ணினார் நமதாண்டவர். **மரண** பயம். விசேஷமாய்ப் பூர்வத்திலே மனிதருக்கு இந்தப் பயம் பெரும்பாலும் பிடித்திருந்தது மரணபய மற்றவன் அடிமையாகான் என்றொரு புலவர் கூறியிருக்கிறார். கிறிஸ்தவர்கள் மாத்திரம் மரணத்தை மோட்சமாக மதிக்கிறார்கள்; அவர்களுக்கு மரணபயம் கிடையாது. அந்த அடிமைத்தனத்திலிருந்து அவர்கள் விடுதலை பெற்றாயிற்று சாத்தானுக்கு அவர்கள்மீது அதிகாரமில்லை. யூதர்கள் மரணதூதன் ஒருவன் உண்டென்றும், கிரேக்கர் மரண தேவதை புலூட்டோ ஒருவன் உண்டென்றும், இந்துக்கள் அவ்வாறே யமன் மரண தேவதையென்றும் சொல்லிவருகிறார்கள். இவ்வடிமைத்தனமாகிய மரண பயத்தை இரட்சகர் வேரறப் போக்கிவிட்டார்.

16. **ஆதலால்,** ஞ. ஏனென்றால், அவர் வாஸ்தவத்தில் தூதனையல்ல, ஆபிரகாமின் சந்ததியையே கைப்பற்றிக்கொண்டார்– எ–று. அதாவது, அசரீரியான தூதனைப் பிறவாமல், சுத்த எபிரேயனைப் பிறந்தார். **உதவியாகக் கைகொடுத்தல்** என்ற மொழிப்

புரை உதவாது. ஏசா. 49. 10; எரே. 31. 32; எபி. 8. 9; மத். 14. 31 காண்க. மேற்கண்ட நான்கு வாக்கியங்களுக்கும் இது தக்க முடிவுரை.

17. பிரதான ஆசாரியராகிய கிறிஸ்துவின் தன்மையும் தொழிலும் இங்குச் சுருக்கமாய் விளக்கியிருக்கிறது. வாக்கியத்தைப் பின்வருமாறு திருத்தலாம்: ஆனதுபற்றி, அவர் கடவுளுக்குரிய காரியங்களிலே இரக்கமும் உண்மையுமுள்ள பிரதான ஆசாரியராயிருந்து ஜனத்தின் பாவங்களுக்குப் பிராயச்சித்தம் செய்யும்பொருட்டு, சகலத்திலும் தமது சகோதரருக் கொப்பாக்கப்படுவது அவருக்குத் தகுதியாயிருந்தது.

பிரதான ஆசாரியர் என்கிற பதம் இந்நிருபத்தில் 17 தடவை உபயோகித்திருக்கிறது. வேறு நிருபங்களிலே இது கிடையாது. இந்நிருபத்தின் விஷயம் மேசியாவின் பிரதான ஆசாரியத்துவமே. நமது ஆசாரியருக்கு இரண்டு லட்சணங்கள் கூறியுள்ளன. (1) அவர் இரக்கமுள்ளவர், அல்லது பச்சாதாப முள்ளவர்.—அனேக பிரதான ஆசாரியமார் இருந்தாலும், இரக்கம் அவர்கள் குணமல்ல; கொடுமையும், கர்வமும், பேராசையும் அவர்கள் முக்கிய லட்சணங்களாயிருந்தன. இக்குணங்கள் தற்காலத்திலும் எம்பெருமானின் அடியாராகிய குருமாரிடத்தில் கிஞ்சித்துத் தலையெடுக்கிறதுபோலிருக்கிறது. பூர்வ ஆசாரியர் சடங்காசாரத்தில்மட்டும் அவ்வுத்தியோகம் பூண்டவர்களாய்க் காணப்பட்டார்களேதவிர, குணசீலத்தில் அவ்வாறு விளங்கவில்லையென்பது சரித்திர சத்தியம். ஆகிலும், உலகமெங்கும் மனிதர் ஆசாரியனை அல்லது குருவை நாடுவதியல்பு. ஆதலால், நிருபாசிரியர் எபிரேயக் கிறிஸ்தவர்களுக்கு இரட்சகனையே பூர்ண ஆசாரியராகத் திருஷ்டாந்தப்படுத்துகிறார்.

**பிராயச்சித்தம்.** மூடிவிடல்; பாவத்தின் பலனை நிர்மூலமாக்கல்; தேவ கோபாக்கினைக்குத் திருப்திசெய்தல் அல்ல. இது சத்திய வேதத்தில் எங்கும் உரைக்கப்படுகிறதில்லை. 1 யோ. 2. 2; 4. 10; ரோ. 3. 25 காண்க.

18. **சோதிக்கப்பட்டு.** இரட்சகருக்கு நேரிட்ட இரண்டு விசேஷமான சோதனைகள் சுவிசேஷத்திற் சொல்லியிருக்கிறது. (1) வனாந்

தரத்திலே (2) கெத்செமனே தோட்டத்திலே. இரண்டிலும் அவர் கொடிய ஆத்மவேதனை சகித்தார். இரண்டுமாத்திரம் சொல்லியிருந் தாலும், அவரது ஜீவியமுழுவதும் இந்த மாயவுலகத்திலே சோதனைக் குரியதாயிருந்ததென்பதற்குச் சந்தேகமில்லை. இவ்வுலகத்தில்காண்கிற பாவமும், பொல்லாப்பும், சிற்றின்பமும், தற்பிரீதியும் அவரை நாலாப் பக்கத்திலும், உள்ளும் புறமும் தாக்கினலும், அவர் அவற்றைச் சகித் தது மாத்திரமேயன்றி, அவற்றின் ஓர் அணுவுக்காகிலும் இணங்கிப் பாவத்துக் குட்படவில்லை. **பாடுபட்டதினலே.** சகித்ததினலே. **சோ திக்கப்படுகிறவர்களுக்கு.** சோதிக்கப்படுபவர்களுக்கு; எதிர்காலம் நமது ஜீவியத்தின் பொது லட்சணத்தை நன்குவிளக்கும். நமது முழு ஜீவி யமுமே ஓர் சோதனை—பிறப்புமுதல் இறப்புவரையும். **உதவிசெய்ய.** ஆபத்து நீக்க; விடுவிக்க வல்லவர் என்றாலுமே போதும். சோதனைக் கடலில் அமிழ்ந்தெழுந்தவர் அமிழ்கிறவர்களைத் தூக்கியெடுக்க வல்ல வர். இப்படிப்பட்ட சற்குருவே மானிடருக்கு வேண்டியது. இடும் பைக்கிடும்பை செய்வோரென்று பக்தரைக் குறிப்பாற் கூறியிருக் கிறது.



## 3. அதிகாரம்.

**3.** 1-6.

இப்படியிருக்க, பரம அழைப்புக்குப் பங்குள்ள வர்களாகிய பரிசுத்த சகோதரரே, நாம் அறிக்கைபண் ணுகிற அப்போஸ்தலரும் பிரதான ஆசாரியருமாயிருக் கிற கிறிஸ்து இயேசுவைக் கவனித்துப் பாருங்கள்;—
2 மோசே தேவனுடைய வீட்டில் எங்கும் உண்மையுள்ள வனயிருந்ததுபோல, இவரும் தம்மை ஏற்படுத்தினவ ருக்கு உண்மையுள்ளவராயிருக்கிறார்.
3 வீட்டை உண்டுபண்ணினவன் வீட்டைப்பார்க்கிலும் அதிக கனத்திற் குரியவனயிருக்கிறன்; அதுபோல மோசேயைப்பார்க்கிலும் இவர் அதிக மகிமைக்குப்
4 பாத்திரராயிருக்கிறார்.—ஏனெனில், எந்தவீடும் ஒருவ ணல் உண்டாக்கப்படும்; எல்லாவற்றையும் உண்டுபண்
5 ணினவர் தேவன்.—சொல்லப்படப்போகிற காரியங்க

ளுக்குச் சாட்சியாக, மோசே பணிவிடைக்காரனாய், அவருடைய வீட்டில் எங்கும் உண்மையுள்ளவனாயிருந் 6. தான்.—கிறிஸ்துவோ அவருடைய வீட்டிற்கு மேற் பட்டவரான குமாரனாக உண்மையுள்ளவராயிருக்கிறார்; நம்பிக்கையினாலே உண்டாகும் தைரியத்தையும் மேன் மை பாராட்டலையும் முடிவுபரியந்தம் உறுதியாய்ப் பற் றிக்கொண் டிருப்போமாகில், நாமே அவருடைய வீடா யிருப்போம்.

## அதிகார விஷயம்.

மோசேயைப்பார்க்கிலும் கிரிஸ்து அதிக மேன்மையுள்ளவர். 1-6. அவரை நாம் விசுவாசிக்காவிட்டால், கடின நெஞ்சுள்ள இஸ்ரவே லரைப்பார்க்கிலும் அதிக ஆக்கினைக்குட்படுவோம்.

## குறிப்பு.

முந்தின இரண்டதிகாரங்களுக்கும், 3-ம், 4-ம் அதிகாரங்களுக் கும் முக்கியமான நியாய ஒற்றுமையுண்டென்று வெஸ்ட்கட் கண்காணி யார் காட்டியிருக்கிறார். அதாவது:

| | |
|---|---|
| கிரிஸ்து தூதருக்கு உயர்ந்த வர் (1. 5-14). போதனை (2. 1-5). | கிரிஸ்து மோசேக்கு உயர்ந்த வர் (3. 1-6). போதனை (3.7-19). |
| அவரிலே மனிதன் தூதரு க்கு உயர்ந்தவனாகிறான் (2. 6-16). | அவரிலே அவர் ஜனம் ஓய் வுக்குள் பிரவேசிக்கிறது (4.1-13). |
| அவரது உயர்ந்த ஆசாரியத்து வம். (2. 17, 18) | அவரது உயர்ந்த ஆசாரியத்து வம். (4. 14-16) |

## அரும்பத விளக்கம்.

1. **இப்படியிருக்க.** முன்சொன்ன ஆசாரியத்துவத்தினால் நாம் நிறை வேற்றவேண்டிய கடமை கூறப்படுகிறது. **பரம அழைப்பு.** இது கிரேக்கத் தொடர்மொழி. 'அழைப்பு' என்கிற பதம் உத்தியோகம், தொழில் முதலியவற்றைக் குறிக்கும். கிரிஸ்தவர்கள் ஒரு முயற் சிக்குப் பங்காளிகளாக்கப்பட் டிருக்கிறார்கள். இது பரமதொழில். ஏனென்றால் (1) மோட்சத்திலிருந்துண்டானது (12. 25); (2) பூமியைவிட்டு மோட்சத்துக்கே செலுத்துகின்றது (பிலி. 3. 14); (3) பரிசுத்தத்துக்கு நடத்துகின்றது (1 தெச. 4. 7). **பரிசுத்த**

**சகோதரரே.** இது இந்நிருபத்துக்குரியது. பவுல் "பரிசுத்தவான்கள்" என்றார். பரிசுத்த ஜீவியத்துக்கு அழைக்கப்பட்டவர்கள். **அறிக்கைபண்ணுகிற:** திருத்தமாக, அறிக்கையின் நம்பிக்கைக் காதாரமாக பூஜித்துவருகிற (4. 14; 10. 23; 2 கொரி. 9. 13; 1 தீமோ. 6. 12). **அப்போஸ்தலரும் பிரதான ஆசாரியருமானவரை** என்று திருத்த வேண்டும். இரட்சகர் இங்கு அப்போஸ்தலர் என்றழைக்கப்படுகிறார். கடவுளால் அனுப்பப்பட்டவர். அப்போஸ்தலப் பட்டம் அவருக்குத்தான் ஆதிதொடுத்துரியது. பேதுரு முதலானவர்கள் எம்பெருமானுக் கெப்படியோ, அப்படியே குமாரனும் பிதாவுக்கு அப்போஸ்தலரும் தூதருமானவர் (யோ. 20. 21). மோசேயும் ஆரோனும்போல அவர் புதிய உடன்படிக்கையின் பிரதான ஆசாரியர். அவர் மோசேயைப்போல அப்போஸ்தலராயிருந்து கடவுளனுப்பின தானாபதியாய் அவருக்காக நம்மோடு வழக்காடுகிறார்; ஆரோனைப் போலப் பிரதான ஆசாரியராயிருந்து நமக்காகக் கடவுளோடு பரிந்து பேசுகிறார். குமாரனும் நவயுகத்தாண்டவருமாகிய அவர் தூதர்களுக்கு மேலானவரும்; மெல்கிசேதேக்கு முறைமையின்படி ஆசாரியராகிய அவர் ஆரோனுக்கு மேலானவரும்; வீட்டுக்குமாரனாகிய அவர் வீட்டு வேலைக்காரனாகிய மோசேக்கு மேலானவருமானவர். இவையெல்லாம் இனி நிருபத்திலே விரித்துரைக்கப்படும். **கிறிஸ்து யேசுவை** அநேக பிரதிகளில் "கிறிஸ்து" இல்லை. இதற்குப் பதில், அதாவது, இயேசுவை. இங்கே மோசேயும் மானிடனாகிய இயேசுவும் ஒப்பிடப்படுகிறார்கள். **கவனித்துப் பாருங்கள்.** கவனியுங்கள். இயேசுவை நாம் நமது சிந்தைக்கு லக்காக்கவேண்டும். மோசே முதலான மகாத்மாக்களையன்று, காபிரியேல் முதலான அசரீரி தூதர்களையன்று, பேதுரு முதலான அப்போஸ்தலரையன்று, புருஷர் ஸ்திரீகளான பல பரிசுத்தவான்களையன்று, திருஅவதார புருஷராகிய இயேசுவை உங்கள் இடைவிடாச் சிந்தையில் வைத்துக்கொள்ளுங்கள் எ-று.

2. நிருபாசிரியர் இயேசுவின் உண்மைக்குணத்தை இங்கு எடுத்துரைக்கிறார். இவ்வாக்கியம் முன்வாக்கியத்திலுள்ள இயேசுவுக்கு அடைமொழி. உண்மையுள்ளவராயிருந்த இயேசுவைக் கவனியுங்கள் என்று வாசித்தால் முழுப்பொருளும் நன்கு விளங்கும். **தேவனுடைய**

**வீட்டில் எங்கும்:** கடவுள் வீட்டிலெங்கும். இங்கு வீடு என்பது ஆலய மும் அதன் சடங்காசாரங்களும் ஆராதனைமுறைமைகளும்; ஒரு வார்த் தையில், பழைய உடன்படிக்கை. எண். 12. 7; 1 தீமோ. 3–15 காண்க. **உண்மை—போல.** இருந்ததுபோலவே. **ஏற்படுத்தினவ ருக்கு**—நியமித்தவருக்கு—அதாவது, பிதாவுக்கு. அப்போஸ்தலரும் பிரதான ஆசாரியருமாகத் தம்மை நியமித்தவருக்கு. 1 சாமு. 12. 6; அப். 2. 36 காண்க. மோசேயின் உண்மைக்கு உபா. 4. 5; யாத். 40. 16 காண்க. கடவுள் தமக்குக் கற்பித்ததையெல்லாம் இஸ்ரவேல ருக்கு உபதேசித்து, தாமும் அவற்றைக் கைக்கொண்டு நடந்தார். கிரேக்கிலுள்ள "செய்தார்" என்கிற வார்த்தையை ஆதாரமாகக் கொண்டு ஆதிகாலத்து ஆரியன்கள் (Arians) இயேசு சிருஷ்டிக்கப் பட்ட புருஷரெனத் துணிந்தார்கள்.

3. **வீட்டை உண்டுபண்ணினவன்.** கட்டினவன். **வீட்டைப் பார்க்கிலும்.** விட. **கனத்திற் குரியவனுயிருக்கிறன்.** கனமடைவது போலவே. **பாத்திரராயிருக்கிறர்.** பாத்திரராக அல்லது உரியவராக மதிக்கப்பட்டிருக்கிறர். யூதர்கள் மோசே மகாத்மாவை அதிக உயர் பதவியில் வைத்து மேன்மைபாராட்டி வந்தவர்கள். இந்தப் பிசகைக் கண்டிக்க, இயேசு மோசேக்கு எத்தனையோ உயர்ந்தவரென்பதை நிருபாசிரியர் இவ்வாக்கியங்களில் ஸ்திரப்படுத்துகிறர்.

4. **எந்தவீடும் ஒருவனுல் உண்டாக்கப்படும்.** ஒவ்வொரு வீடும் யாராயினும் ஒருவனுற் கட்டப்படுகிறது. இதிலே கட்டுகிறவனுக் கும் கட்டப்படுகிற வஸ்துவுக்குமுள்ள பேதத்தைக் காண்பிக்கிறர். வீடு சிங்காரமாயிருந்தாலும் அது தன்னைத்தானே கட்டிக்கொள் ளாது; தானே எழும்பாது. அதன் உருவம் முதலானவை சிற்பா சாரியின் மனதிற் பிறக்கிறது; பின்பு அவ்வெண்ணம் உருவாக்கப் படுகிறது. ஒவ்வொரு குடியும் ஒருவனுல் ஏற்படுத்தப்பட்டது, என்றும் பொருளுரைக்கலாம். **எல்லாவற்றையும் கட்டினவர் கடவுள்.** பழைய புதிய உடன்படிக்கைகள் இரண்டையும் உண்டு பண்ணினவர் கிறிஸ்துவாயினும், மோசே முன்னதைக் கருவியா கக்கட்டி முடித்தார். ஆனல் முதற்கர்த்தா கடவுளே. சக. 6. 12 காண்க. அண்டசராசரத்துக் கெல்லாம் ஆதிகர்த்தன் அவரே.

**5. சொல்லப்பட, மூ.** இனிச் சொல்லப்படவிருந்த காரியங்களுக்கு. உப. 18. 15. மோசே கிறிஸ்துவை வரப்போகிற தீர்க்கதரிசியாக முன்னுரைத்தார். பழையது புதிய உடன்படிக்கைக்குச் சாட்சியாக விருந்தது. முந்தியது நிழலும், பிந்தியது பொருளும், முந்தியது அடையாளமும் பிந்தியது பொருளும், முந்தியது முன்னுரையும், பிந்தியது நிறைவேற்றமுமாயிருந்தன. **சாட்சியாக.** மோசே சாட்சியாகவும் கிறிஸ்து உண்மையுமாக விளங்கினார்கள். இவ்விருவரும் இரண்டு வீடுகளுக்கு அதிகாரிகள். அவ்வீடுகள் முறையே யூதமார்க்கமும், கிறிஸ்துமார்க்கமும்; கிரியை உடன்படிக்கையும் கிருபை உடன்படிக்கையும்; நியாயப்பிரமாணமும் சுவிசேஷமும், ஆனால், முக்கியமான பேதம் ஒன்று: மோசே பணிவிடைக்காரன்; கிறிஸ்து குமாரன்; மோசே ஊழியன், கிறிஸ்து உடையவர்; மோசே வீட்டிலிருந்தவர், கிறிஸ்து வீட்டுக்கு அதிகாரியாயிருந்தவர். யாத். 14. 31; ரோ. 3. 21; 10. 1. **அவருடைய வீட்டிலெங்கும் மூ. வ. 2** காண்க.

**6. கிறிஸ்துவோ மூ. அவருடைய,** கடவுளின். **மேற்பட்ட,** மேலான குமாரனாக விருந்தார். ஊழியனுக்கும் குமாரனுக்குமுள்ள பேதம் இங்கு மீண்டும் உரைக்கப்படுகிறது. **நம்பிக்கையினாலே** வேதாகமத்தில் வழங்கிவருகிற இப்பதம் கோரிக்கையைக் குறிக்குமேயன்றி, வழக்கமான நம்புதலையல்ல. அவன் வருவானென்று நம்புகிறேன், அவன் வருவானென்று கோருகிறேன்: இவ்விரண்டு வாக்கியங்களுக்கும் வித்தியாசமுண்டென்பதற்கு ஐயமில்லை. கிறிஸ்தவர் கோரிக்கையிலே கொஞ்சம் உறுதியுண்டு. இதனால்தான் ஒரு வேளை நம்பிக்கை என்கிற பதத்தை வேதத்தில் உபயோகித்திருக்கிறது. **தைரியத்தையும்.** சொல்லவும் செய்யவும் வேண்டிய தீரம் 1 யோ. 3. 26. **மேன்மை பாராட்டலையும்**—வெற்றி மகிழ்ச்சி அதாவது, நம்பிக்கையின் தீரத்தையும் மகிழ்ச்சியையும் அக்காலத்தில் கிறிஸ்தவர்கள் எம்பெருமானின் வருகைக்குக் காத்திருந்தும், துன்பப்பட்டுமிருந்தமையால், தங்கள் கோரிக்கையை யிழக்குந்தறுவாயில் இருந்தார்கள். ஆனதுபற்றி, நிருபாசிரியர் அவர்களை உற்சாகப்படுத்துகிறார். **முடிவுபரியந்தம் 14. வ.** காண்க. மரணமட்டுமென்று; கோரிக்

கை நிறைவேறும்வரைக்கும். பற்றிக்கொண்டிருப்போமாகில். — இருக்கிறோமானால்; நிகழ்காலம். **நாமே அவருடைய வீடாயிருப்போம். நாமே அவருடைய வீடு** எனத் திருத்திக்கொள்ளவும். கிரேக்கிலே இரண்டு வினையும் நிகழ்காலத்தில் வழங்கியிருக்கிறது. **வீடு.** சபை: அவர் ஸ்தாபித்த புதிய உடன்படிக்கையின் திருச்சபை. 2 கொரி. 6. 16; எபே. 2. 21, 22; 1 பேது. 2. 5. ஒத்துக் காண்க.

## எச்சரிப்பு. 7–14.

### 3. 7-11.

7 ஆகையால், பரிசுத்த ஆவியானவர் சொல்லுகிற படியே: இன்று அவருடைய சத்தத்தைக் கேட்பீர்க
8 ளாகில்,—வனாந்தரத்திலே கோப மூட்டினபோதும், சோதனைநாளிலும் நடந்ததுபோல, உங்கள் இருதயங்க
9 ளைக் கடினப்படுத்தாதிருங்கள்.—அங்கே உங்கள் பிதாக்கள் என்னைச் சோதித்து என்னைப் பரீட்சை பார்த்து, நாற்பது வருஷகாலம் என் கிரியைகளைக் கண்டார்கள்.—
10 ஆதலால், நான் அந்தச் சந்ததியை அரோசித்து, அவர்கள் எப்பொழுதும் வழுவிப்போகிற இருதயமுள்ள ஜனமென்றும், என்னுடைய வழிகளை அறியாதவர்க
11 ளென்றும் சொல்லி;—என்னுடைய இளைப்பாறுதலில் அவர்கள் பிரவேசிப்பதில்லையென்று என்னுடைய கோபத்திலே ஆணையிட்டேன் என்றார்.

**7. ஆகையால்.** இவ்விடைச்சொல்லை 12–ம் வசனத்திலுள்ள எச்சரிப்போடு சேர்த்துக்கொள்ளவும். சாதனையும் போதனையும் அங்கங்கே கலந்திருப்பதும், ஒன்றை ஒன்று தொடர்ந்துவருதலும் இந்நிருபத்துக்குரிய ஓர் லட்சணம். இதற்குதாரணங்களை 2. 1–14; 3. 7–19; 4. 1–14; 6. 1–9; 10. 19. 39–இல் காண்க. சுவிசேஷ சத்தியத்திலிருந்து தவறிப்போய் யூதமார்க்கத்துக்குள் நழுகிவிழ எதுவாயிருந்த கிறிஸ்தவர்களை எச்சரிப்பதே நிருபக் கர்த்தாவின் நோக்கமென்றறிக.

பின்வரும் நான்கு வாக்கியங்களும் சங். 95. 1–11–இலிருந்து எடுத்துரைக்கப்படுகின்றன. **பரிசுத்த—படியே.** வேதத்தில் எடுத்

துணைப்புக்கு ஆரம்பம். வேதவாக்கியங்கள் பரிசுத்த ஆவியின் ஏவலால் எழுதப்பட்டவை என்பதற்கு ஓர் சாட்சி. உதாரணத்துக்கு மாற். 12. 36; அப். 1. 16; 2 பேது. 1. 21 காண்க. இன்று. இரட்சண்ய காலம். 2 கொரி. 6. 2; ஏசா. 55. 6; வெளி. 3. 20. யூதர்கள் கடவுள் வாக்கைக் கேட்டபொழுது அதை அலட்சியஞ் செய்தார்கள். ஒன்றுசெய், நன்றுசெய், இன்றுசெய் என்பதுபோல ஒரு கடமையை உடனே நிறைவேற்றாவிட்டால், அதை இனி நிறைவேற்ற முடியாது. தருணம் தப்பினால் மரணம். இது மகா முக்கியமான வாக்கியம்.

8. **வனாந்தரத்திலே.** இதைச் சோதனையோடு சேர்த்துக்கொள்ளவும். வாக்கியத்தை, கோபமூட்டலிலும், வனாந்தரத்திற் சோதனை நாளிலும் நடந்ததுபோல. மூ. என்று மாற்றிக்கொள்க.

**கோபமூட்டலிலும்.** அல்லது, மனக்கசப்பிலும், மனங்கசந்த நாளிலும். மெரிபாவிலே நடந்த வரலாறு இங்கு ஒருவேளை குறிக்கப்படுகிறது. எண். 20. 7–13; யாத். 17; உபா. 33. 8 காண்க. எபிரேயர் வனாந்தரத்தில் 40 வருஷம் பிரயாணம் பண்ணினார்கள். மெரிபா வரலாறு முதல் வருஷத்திலும் மாசா வரலாறு நாற்பதாம் வருஷத்திலும் நடந்தமையால் நாற்பது வருஷம் முழுவதும் அவர்கள் மனக்கடினமுள்ளவர்களா யிருந்தார்கள் என்பது விசதமாகிறது. **கடினப்படுத்தாதிருங்கள்.** கடினப்படுத்திக் கொள்ளாதேயுங்கள். இது முரட்டாட்டத்துக்கும் சொற்கேளாமைக்கும் தன்னிஷ்டத்துக்கும் காரணம். இந்தக்குணம் சிறுவருக்கிருந்தால், சீர்கெட்டார்கள். அவர்களைக் குணப்படுத்துவதரிது. சித்தம் சிறிது சிறிதாய்க் கடினப்படுகிறது. குதிரையைப்போல அதை ஆரம்பத்திலேயே திருப்ப வேண்டும்.

9. **அங்கே** வனாந்தரத்திலே. **பிதாக்கள்.** முன்னோர்கள்—நாற்பது வருஷகாலம் எகிப்திலிருந்து கானானுக்குப் போகச் சிலநாள்தான் செல்லுமாயினும், கடவுள் எபிரேயரை ஆவிக்குரியவிதமாகப் பயில்விக்கும்பொருட்டே 40 வருஷகாலமாய் அவர்களை அப்பாலைவனத்திலேயே திரிந்து திரிந்து பிரயாணஞ்செய்யப் பண்ணினார். அதனால் ஆரம்பத்தில் எகிப்திலிருந்து புறப்பட்ட சந்ததி (இருவர்தவிர) ஆறு

லட்சம்பேரனைவரும் மாண்டுபோனார்கள். **என்னை—பார்த்து.** பரீட்சையால் என்னைச் சோதித்து. கடவுளின் அன்பையும் இரக்கத்தையும், நீதியையும் கண்டிப்பையும் பூர்த்தியாய்ப் பார்த்தார்கள். இந் நிருபம் எழுதிய காலம் எருசலேமின் அழிவுக்குச் சற்று முந்தி; அதாவது, எம்பெருமான் பரஞ்சென்று ஏறக்குறைய 40 வருஷத்துக்குப் பிந்தி. ரபிமார், மேசியாவின் நாட்கள் நாற்பது வருஷம் என்பார்களாம்.

10. **அந்த**—இந்தச் சந்ததியை. ஏககாலத்தில் இருக்கும் ஜனத்தை ஒரு சந்ததியென்கிறது மரபு. ஒரு சந்ததியின் காலம் 30 வருஷம். இரட்சகர் இதை எடுத்துரைத்ததைக் கேட்ட யூதர்கள் (மத். 23. 36; 24, 34). இந்நிருபத்தை வாசித்திருப்பார்கள்; அவ்வாறாயின் அவர்கள் இருதயம் அசைக்கப்பட்டதென்றே நினைக்கவேண்டும். **அரோசித்து.** இது கடினமான பதம், அந்தச் சந்ததியினிடம் விருப்பற்று என்றிருக்கவேண்டும். **எப்பொழுதும்.** இது எபிரேய மூலத்திலில்லை. சங். 78. 40, 41 காண்க. **வழுவி.** தவறி. **ஜனமென்றும்.** ஜனம் ஆயினும் என்று திருத்தவும். **அறியாதவர்கள்.** அறிந்திலர் என்று சொல்லி.

11. இதை: நான் என் கடுஞ்சினத்தில் ஆணையிட்டபடியே, அவர்கள் மு. என்று மாற்றவேண்டும். **ஆணையிட்டபடியே.** இந்தச் சம்பவத்தை எண். 14. 28–30; 32. 13-இற் காண்க. **என்னுடைய இளைப்பாறுதலில்.** இந்த இளைப்பாறுதல், 40 வருஷத்து அலைச்சலெல்லாம் ஓய்ந்து, கானான் நாடுசென்று அங்குள்ளவரோடு கடும் போர்புரிந்து அந்நாட்டை வென்று அதிற் குடியேறிச் சமாதானமாய் ஜீவிக்கும் சுகமென்றாலும், அது போதாது. அங்குக் குடியேறின பின்பும் இடைவிடாத சண்டை சச்சரவுகளும், போர் கலகங்களும் நேரிட்டன. ஆனதுபற்றி, மோட்சத்தில் கிறிஸ்தவர்களுக் குண்டாயிருக்கும் நித்திய ஓய்வுநாள் இங்குக் குறிக்கப்பட்டிருக்கிறது. இளைப்பாறுதல், இளைப்பாறல், அத்தனை உசிதமான பதங்களன்று; அதி. 4. 4 காண்க. **ஓய்வுக்குள்** என்று திருத்தலாம். யாத். 12. 9; ஏசா. 66. 1.

3. 12-15.

12 சகோதரரே, ஜீவனுள்ள தேவனைவிட்டு விலகுவதற் கேதுவான அவிசுவாசமுள்ள பொல்லாத இருதயம் உங்களில் ஒருவனுக்குள்ளும் இராதபடிக்கு நீங்கள்
13 எச்சரிக்கையாயிருங்கள். — உங்களில் ஒருவனாகிலும் பாவத்தின் வஞ்சனையினாலே கடினப்பட்டுப் போகாத படிக்கு, இன்று என்னப்படுமளவும் நாடோறும் ஒருவ
14 ருக்கொருவர் புத்திசொல்லுங்கள்.—நாம் ஆரம்பத்திலே கொண்ட நம்பிக்கையை முடிவுபரியந்தம் உறுதியாய்ப் பற்றிக்கொண் டிருப்போமாகில், கிறிஸ்துவினிடத்தில்
15 பங்குள்ளவர்களா யிருப்போம்.—இன்று அவருடைய சத்தத்தைக் கேட்பீர்களாகில், கோபமூட்டுதலில் நடந் ததுபோல உங்கள் இருதயங்களைக் கடினப்படுத்தா திருங்கள் என்று சொல்லியிருக்கிறதே.—

12. மேற்படி எபிரேயரிழந்த ஓய்வை நிருபாசிரியர் ஆதாரமாகக் கொண்டு எபிரெயக் கிரிஸ்தவர்களுக்கு நற்போதனை ஊட்டுகிறார். இந்த வாக்கியத்தில் பயங்கரமான ஓர் எச்சரிப்புண்டு. **ஜீவனுள்ள தேவன்.** ஜீவித்திருக்கிற கடவுள். பிரமா, விஷ்ணு, சிவன், முதலான கற்பனைத் தெய்வங்களல்ல—வாஸ்தவத்தில் ஜீவனோடிருந்து அரசாளு கிற கடவுளே, கிரிஸ்தவர்கள் வழிபடும் வஸ்து. வேதாந்திகளும் கடவுள் ஒருவர்மட்டும் ஜீவனுள்ளவர்—பிரபஞ்சத்திலுள்ள சராசர மனைத்தும்—மக்கள் தேவர் நரகர் உட்பட—சுத்த மாய்கை என்கிறார் கள். ஆனால் வேதாந்திகள் கற்பிக்கிற கடவுளுக்கு உயிரிருந்தாலும், உணர்ச்சி கிடையாது; பாவபுண்ய பகுத்தறிவு கிடையாது; சுத்த நிர்க்குண ஜீவி. இப்பொய்க் கடவுள் மானிடர் மனதில் உற்பத்தியான மாயவஸ்து. நாம் எத்தனை பாக்கியசாலிகள்! **விலகுவதற்கான.** ஒருவேளை விழுந்துவிடத்தக்க. **அவிசுவாசமுள்ள பொல்லாத இரு தயம்.** இருதயத்தில் தீங்கு பிறந்தால், அவிசுவாசம் பிறக்கும். மேற் கிலே அனேகம்பேர்க் கிரிஸ்தவர்கள் துன்மார்க்கத்தில் பிரவேசித்த வுடன் அதற்குச் சாக்குப்போக்காக கடவுளில்லை, மோட்சமார்க்கங்கள் பொய், நீதிநெறி வழக்கப்பாரம்பரியம், வேதமெல்லாம் கட்டுக்கதை யென்று பிதற்றுகிறதுண்டு. ஒருவேளை எபிரேயச் சபையிலே சிலர் துன்மார்க்கமாய் ஜீவித்து, கடவுளை விட்டுத் தவறி விழுந்திருப்பார்

கள். அப்படிப்பட்டவர்களை நிருபாசிரியர் கண்டித்து எச்சரிக்கிறார். அவர்கள் நேரில் வனாந்தரத்தில் மடிந்த அவிசுவாச எபிரேயரின் கதியை எடுத்துக் காண்பிக்கிறார். இருதயமே எல்லாத்துக்கும் வேரும், வித்துமாம். அங்கே துன்மார்க்கமுண்டானால் நம்பிக்கை கெடும். அனேக வாலிபர் நமது சபைகளிலும் இவ்வாறு தவறி விழுந்து அளவற்ற துன்பத்தை இம்மை மறுமைகளில் சம்பாதித்துக் கொள்ளுகிறார்கள். அவர்களுக்கும் இது ஓர் எச்சரிப்பு. நாம் இருதயக்கடினத்தைக்குறித்து எச்சரிக்கையா யிருக்கவேண்டும். இனி இதைக் கொஞ்சம் விரிவாக வற்புறுத்தி உரைக்கிறார்.

13. **ஆகிலும்** என்கிற பதம் விடப்பட்டிருக்கிறது. அதை ஆரம்பத்தில் வைத்துக்கொள்ளுங்கள். **பாவத்தின் வஞ்சனையினாலே.** இங்கு உரைக்கப்படுகிறது சிறிதும் பெரிதுமான தனிப்பாவங்களன்று; பஞ்சமாப்பாதகங்களு மன்று. பாவகுணமே; தெய்வ சித்தத்துக்கு விரோதமான சித்தமும் அதன் செயலும், இதிலிருந்து பிறப்பவை எண்ணுக்கடங்காத பாவங்கள். இராவணனின் தசத்தலைகள்போல, ஒன்று அறுபட்டால் இன்னொன்று கிளம்பும். இரட்சிப்பினால் இந்தப் பாவகுணந்தான் அழிக்கப்படுகிறது; அதுவும் ஒரே நேரத்தி லல்ல; கொஞ்சங்கொஞ்சமாய். பாவியையும், குணப்பட்ட விசுவாசி யையும் ஏமாற்றி வஞ்சிக்கிற சுபாவமதற்குண்டு. இந்தச் சுபாவத் தினால் இருதயம் இறுகிக் கடினப்பட்டுப்போகிறது. நன்மையை நாடித் தீமையை விலக்கத்தக்க சக்தி கிஞ்சித்தும் இல்லாமற் போகி றது ஆனதுபற்றியே இவ்வெச்சரிப்பு. அதி. 12. 4; ரோ. 7. 8, 11; 2 தெச. 2. 10; யாக். 1. 15 காண்க.

**இன்று.** வாக்கியத்தில் இந்த முக்கியமான பதம் பெரிய அச்சில் அடிக்கப்படவேண்டும். சங்கீதத்து வார்த்தை எந்நாளுக்கும் உரியது. இதுவே "சந்திப்பின் நாள்." லூக். 19. 44; யோ. 12. 35, 36 காண்க. **நாடோறும்.** பிரதிதின ஆராதனை, ஜெபக்கூட்டம், குடும்ப ஆராதனை முதலியன இதிலடங்கியிருக்கிறது. ஞாயிற்றுக்கிழமையில் மட்டுமல்ல. அக்காலத்துச் சபை மிகுந்த ஒற்றுமையுற்று ஒருவருக் கொருவர் அன்பினாலே **புத்திசொல்லு**கிற சபையாயிருந்தது. இக்கா லத்துச் சபையார் புத்திகேட்கப் பொறுக்கமாட்டார்கள்.

14, 15. தொடர்ச்சிக்காக 15-ம் வாக்கியத்தை முன்வைத்து; "ஏனெனில், இன்று—சொல்லியிருக்கையிலே" என்று முடித்துப் பின்பு 14-ம் வாக்கியத்தைச் சேர்த்துக்கொள்ளவும். இந்த வாக்கியம் 13-வதிலே வருகிற "இன்று" என்கிற பதத்தின் விரித்துரையாகத் தோன்றுகிறது. **ஆரம்பத்தில் கொண்ட நம்பிக்கையை.** நாம் ஆரம்பித்த கோரிக்கையை எனின் பொருள் நன்குவிளங்கும். சங். 39. 7 காண்க. **முடிவுபரியந்தம் மூ.** முற்றுமுடிய உறுதியாய்ப் பற்றியிருந்தால். 6-ம் வ. பாருங்கள். **கிறிஸ்துவினிடத்தில் பங்குள்ளவர்களாயிருப்போம்.** கிறிஸ்துவிலே பங்குள்ளவர்களாய்விட்டோம். பவுலின் தொடர்மொழி: **கிறிஸ்துவுக்குள்.** நிருபாசிரியரின் தொடர்மொழி: **கிறிஸ்துவோடு,** கிறிஸ்துவின். வெளி. 3. 21. காண்க. அதாவது, எம்பெருமானின் முழுஜீவியத்திலே பங்கு பெறுகிறவர்களாகிறோம். அவர் சம்பாதித்த பரிசுத்த சொத்துக்கெல்லாம் பாத்தியஸ்தராகிறோம். இதென்ன மகத்துவம்! அவர் நமது ஊன் உதிரத்தில் பங்குபெற்றமையால், நாம் அவரது மகத்துவ சுபாவத்தில் பங்கடைகிறோம்.

3. 16-19.

16 கேட்டவர்களில் கோபமூட்டினவர்கள் யார்? மோசேயினால் எகிப்திலிருந்து புறப்பட்ட யாவரும் அப்படிச்
17 செய்தார்களல்லவா?—மேலும், அவர் நாற்பது வருஷமாய் யாரை அரோசித்தார்? பாவஞ்செய்தவர்களையல்லவா? அவர்களுடைய சவங்கள் வனாந்தரத்தில் விழு
18 ந்துபோயிற்றே.—பின்னும், என்னுடைய இளைப்பாறுதலில் பிரவேசிப்பதில்லையென்று அவர் யாரைக்குறித்து ஆணையிட்டார்? கீழ்ப்படியாதவர்களைக் குறித்தல்
19 லவா? — ஆதலால், அவிசுவாசத்தினாலே அவர்கள் அதில் பிரவேசிக்கக்கூடாமற் போனார்களென்று பார்க்கிறோம்.

## அரும்பத விளக்கம்.

16. **ஏனென்றால்.** இப்பதத்தை வருவித்துக்கொள்ளவும். வாக்கிய முழுவதும்: "ஏனென்றால், கேட்டபொழுது கோபமூட்டினவர்கள் யார்? மோசேயினால் எகிப்திலிருந்து புறப்பட்ட எல்லாருமல்லவா?" பாவத்தின் வஞ்சனைக்குத் தப்பிக்கொள்வது வெகுவும் அரி

தென்பதை உதாரணப்படுத்துகிறுர். இதிலே நியாயத் தொடர்ச்சியைக் கவனித்தல் நன்று. அடிமைத்தனத்திலிருந்து தப்புவிக்கப்பட்டவர்கள் முறுமுறுத்து மனங்கசந்து சினந்துகொண்டார்கள். பாவஞ்செய்து மாண்டார்கள். அவிசுவாசம் அவர்களை அழிவுக்குள்ளாக்கிற்று. ஆறுலட்சம்பேரில் காலெப், யோசுவா இருவர் தவிர மற்றெல்லாரும் பாவ வஞ்சனையினுலே அப்பாலேவனத்தில் வீழ்ந் திறந்தார்கள். கானுனின் ஒய்வை அவர்கள் காணவேயில்லை.

17. **அரோசித்தார்**—முன்போல, யாரிடம் விருப்பமற்றுப்போனுர் என்று திருத்தவேண்டும். தங்கள் பிணங்கள் வனந்தரத்தில் விழத்தக்கதாய்ப் பாவஞ்செய்தவர்களிடத்தில் அல்லவா? **பிணங்கள்** — எபிரேயப்பதம் உறுப்புகளைக் குறிக்கும். கடவுளின் வெறுப்பால் அவர்கள் எல்லாரும் 40 வருஷகாலத்தில் கொஞ்சம் கொஞ்சமாய்ப் பிரயாணத்தில் இறந்துபோனுர்கள். வழியிற் பிறந்த பிள்ளைகள்மட்டும் கானுன்தேசம் போய்ச் சேர்ந்தார்கள்.

18. இந்த வாக்கியத்தை: பின்னும், அவர் கீழ்ப்படியாதவர்கள் தவிர வேறு யாருக்கு அவர்கள் தமது ஓய்வுக்குள் பிரவேசியார்கள் என்று ஆணையிட்டார்? சங். 106. 24–26.

19. **அவர்கள்**- அவர்களுக்கு (அதில்) பிரவேசிக்க முடியாமற்போயிற்று என்று காண்கிறேம். கடவுட்பற்று அல்லது விசுவாசமில்லாமை சகல பாவத்துக்கும் துன்பத்துக்கும் மரணத்துக்கும் நித்யஆக்கினைக்கும் காரணம். **காண்கிறேம்**—நியாயத்தின் முடிவுரை. எண். 14. 40–45.



# 4. அதிகாரம்.

## அதிகார விஷயம்.

கடவுள் வாக்களித்த ஒய்வைப்பற்றிய போதனை (1–12). கிரிஸ்துவின் பிரதான ஆசாரியத்துவ விளக்கம். (13–16)

4. 1-5.

ஆனபடியினுலே, அவருடைய இளைப்பாறுதலில் பிரவேசிப்பதற் கேதுவான வாக்குத்தத்தம் நமக்குண்டாயிருக்க, உங்களில் ஒருவனும் அதை அடையாமல் பின்

வாங்கிப் போனவனுகக் காணப்படாதபடிக்குப் பயந்
2 திருக்கக்கடவோம்.—ஏனெனில், சுவிசேஷம் அவர்க
ளுக்கு அறிவிக்கப்பட்டதுபோல நமக்கும் அறிவிக்கப்
பட்டது; கேட்டவர்கள் விசுவாசமில்லாமல் கேட்டபடி
யினுல், அவர்கள் கேட்ட வசனம் அவர்களுக்குப் பிர
3 யோஜனப்படவில்லை.—விசுவாசித்தவர்களாகிய நாமோ
அந்த இளைப்பாறுதலில் பிரவேசிக்கிறேம்; அவருடைய
கிரியைகள் உலகத்தோற்றமுதல் முடிந்திருந்தும்: இவர்
கள் என்னுடைய இளைப்பாறுதலில் பிரவேசிப்பதில்லை
யென்று என்னுடைய கோபத்திலே ஆணையிட்டேன்
4 என்ருர்.—மேலும், தேவன் தம்முடைய கிரியைகளை
யெல்லாம் முடித்து ஏழாம் நாளிலே ஓய்ந்திருந்தார்
என்று ஏழாம் நாளைக்குறித்து ஓரிடத்தில் சொல்லியிருக்
5 கிருர்.—அன்றியும், அவர்கள் என்னுடைய இளைப்
பாறுதலில் பிரவேசிப்பதில்லை என்றும் அந்த இடத்தி
லேதானே சொல்லியிருக்கிருர்.

## அரும்பத விளக்கம்.

1. **ஆனபடியினுலே.** ஆகையால், மேலே அதிகாரத்தின் ஈற்றிலே விவரித்த நியாயத்தினுலே. வேதாகமங்கள் ஆரம்பத்தில் அதிகாரங்களாகவும், வாக்கியங்களாகவும் நிருபாசிரியர்களால் வகுக்கப்படவில்லை என்று உணர்ந்துகொள்ளவும். பிற்காலத்தில்தான் அவைகள் அவ்வாறு வகுக்கப்பட்டன. **இளைப்பாறுதலில்.** ஓய்வுக்குள். **வாக்குத்தத்தம்.** வாக்கு. நமக்கு. மூலத்திலில்லை. **உண்டாயிருக்கிற.** இன்னுமிருக்க. **உங்களில் ஒருவனும்.** இதன்பின் **ஒருவேளை** சேர்த்துக்கொள்ளவும். **அதை—போனவனுக.** அதை அடையாதவனுகக் குறையுருதபடிக்கு **பயந்திருக்கக்கடவோம்.** அஞ்சி யிருப்போமாக. நம்பிக்கைக் குறைவாலன்று, அஜாக்கிரதையான நிர்விசாரத்தினுலே இந்தப் பரமவாக்கை இழந்துவிட நேரிடும். வாக்குச்செய்திருக்கிற ஓய்வு, பூர்வ எபிரேயருக்குப்போலவே கிரிஸ்தவ எபிரேயருக்கும் உண்டாயிருந்தது. அந்த ஓய்வு பரம ஓய்வு. பரமகானுனுகிய சுவர்க்கத்தில் சுகிக்கும் நித்திய ஓய்வு. சர்வ சமயத்திலுமுள்ள சர்வ விசுவாசிகளுக்கும் வாக்குச் சொல்லப்பட்ட, இளைப்பொழிக்கும் பேரின்ப ஓய்வு.

2. இந்த ஓய்வு இருபட்சத்தாருக்கும் பொருந்தியதென இங்கு விளக்கப்படுகிறது. **சுவிசேஷம்**—இது கடினமான தொடர்மொழி. தமிழ்க் கிரிஸ்தவர்களில் பெரும்பாலாருக்கு விளங்காத மறைமொழி. **நற்செய்தி** எனின் நன்கு விளங்கும். வாக்கியத்தின் முதற்பாகத்தை ஏனெனில், "அவர்களுக்கு அறிவிக்கப்பட்டதுபோலவே, நமக்கும் ஓர் நற்செய்தி அறிவிக்கப்பட்டது வாஸ்தவமே," எனத் திருத்தலாம். நற்செய்தி ஓய்வைப்பற்றிய பரமவாக்கு. **ஆகிலும், அவர்கள் செவி கொடுத்தவர்களோடு விசுவாசத்தினால் ஐக்கிய மாகாமையால் கேட்டவார்த்தை அவர்களுக்குப் பயன்படாமற் போயிற்று.** கேட்டவர்களுக்குப் பதிலாக, செவிகொடுத்தவர்கள் என்பதில் பொருள் சிறக்கும். செவிகொடுத்தவர்கள் மோசே, யோசுவா, காலெப்—இம் மூவர்தாம். அறிவிப்பதுபோலவே செவிகொடுப்பதும் அவசியம். **ஐக்கியமாகாமையால்.** காய்கிற இரும்புத்துண்டுகள் ஒன்றுசேர்வது போல். காதால் கேட்டார்களேயன்றி, மனதால் கேட்கவில்லை. **கேட்டவர்கள்** ஒருவேளை **கேட்டவைகள்** என்பதற்கு வேறுபாடமா யிருக்கலாமென்று ஒரு வியாக்கியானி உத்தேசிக்கிறார். அவ்வாறாயிற் கேட்டவாக்கு முதலியன என்று பொருள் செய்துகொள்ளலாம். கேட்டவைகளை விசுவாசிக்கவில்லை எ—று. யாக். 1. 22, 23.

கிரிஸ்தவர்கள் இளமைதொட்டு நற்செய்தியும் பிரசங்கமும் கேட்டுவந்தாலும் பயனடையக்காணோம். விசுவாசப்பற்றுடன் செவிகொடுத்துக் கேட்கிறதில்லை. மாய்மாலக் கிரிஸ்துமார்க்கம் நமது சபைகளிலே பரவியுள்ளது.

3. **பிரவேசிக்கிறோம்**—எதிர்காலத்துக்கு நிகழ்காலம் கூறியிருக்கிறது. ஆயினும் வாஸ்தவத்தில் அந்த ஓய்வை இப்பொழுதே சுகிக்க ஆரம்பிக்கிறோம். **என் கோபத்திலே ஆணையிட்டேனென்றவர் உரைத்தபடியே உலகாஸ்திபாரம் முதல் கிரியைகள் முடித்திருந்தும் அவர்கள் என் இளைப்பாறுதலில் பிரவேசிப்பதில்லை யென்று. கிரியைகள்** கடவுளின் படைப்புத்தொழில்கள். நமக்குத் தெரிந்திருக்கிற விதமாய் கடவுள் பிரபஞ்சத்தைப் படைத்து ஓய்ந்திருக்கிறார். அந்த ஓய்வுக்குள்ளே நாமும் பிரவேசிக்க வேண்டுமென்பது அவருடைய அபேட்சை. மேற்கண்ட வாக்கியங்களின் தர்க்கத் தொடர்ச்சியாவது:

(1) கடவுள் இஸ்ரவேலருக்கோர் ஓய்வை வாக்களித்தார். (2) அவர் களில் அனேகர் அதை அடையவில்லை. (3) இந்த ஓய்வு கடவு ளின் முதலாம் ஓய்வு நாளிலேயே ஆரம்பித்தது; சிலர் அதில் அப் பொழுதே புகுந்ததாகத் தோன்றுகிறது. (4) முதல் முதல் வாக்குப் பெற்றவர்கள் விசுவாசக்குறைவால் அதை அடைய முடியாமற்போன தால், பிற்காலத்தில் "இன்று" என்கிற நிகழ்காலப் பதத்தால் கடவுள் அவ்வாக்கைத் திரும்பத் திரும்பக் கூறியிருக்கிறார்.

4. **தேவன்**—கடவுள். **முடித்து.** இது மூலத்திலில்லை. எல்லா **வற்றிலுமிருந்து** என்று திருத்தலாம். **ஏழாம் நாளிலே,** அதாவது சிருஷ்டிப்பு நடந்த ஆறுநாளைக்குப்பின்பு. இந்த அறுதினத்துக்கும் காலை மாலை கூறியிருந்தாலும், ஏழாம் நாளுக்கு அவை கூறப்படாமை யால், அத்தினம் நித்ய ஓய்வுகாலமா யிருக்கிறது. **என்று.** என்றிவ் வாறு. **ஓரிடத்தில்.** ஏதோ ஓரிடத்தில். ஆதி. 2. 2; யாத். 20. 11; 31. 17 காண்க.

5. **இந்த இடத்தில்தானே**—இந்த இடத்திலும். **இளைப்பாறு தலிலே.** ஓய்வுக்குள் விசுவாசிகளின் நித்ய ஓய்வைக்குறித்து இன் னும் எச்சரிக்கிறார்.

4. 6-11.

6 ஆகையால், சிலர் அதில் பிரவேசிப்பது இன்னும் வரப்போகிற காரியமாயிருக்கிறபடியினாலும், சுவிசே ஷத்தை முதலாவது கேட்டவர்கள் கீழ்ப்படியாமையி னாலே அதில் பிரவேசியாமற் போனபடியினாலும்,—
7 இன்று அவருடைய சத்தத்தைக் கேட்பீர்களாகில் உங் கள் இருதயங்களைக் கடினப்படுத்தாதிருங்கள் என்று வெகுகாலத்திற்குப்பின்பு தாவீதின் சங்கீதத்திலே சொ ல்லியிருக்கிறபடி, இன்று என்று சொல்வதினாலே பின்
8 னும் ஒருநாளைக் குறித்திருக்கிறார்.—யோசுவா அவர் களை இளைப்பாறுதலுக் குட்படுத்தியிருந்தால், பின்பு, அவர் வேறொரு நாளைக்குறித்துச் சொல்லியிருக்கமாட்
9 டாரே. — ஆகையால், தேவனுடைய ஜனங்களுக்கு இளைப்பாறுகிறகாலம் இனி வருகிறதாயிருக்கிறது.—
10 ஏனெனில், அவருடைய இளைப்பாறுதலில் பிரவேசித் தவன், தேவன் தம்முடைய கிரியைகளை முடித்து ஓய்ந்

ததுபோல, தானும் தன் கிரியைகளை முடித்து ஓய்ந்
11 திருப்பான்.—ஆகையால், அந்தத் திருஷ்டாந்தத்தின் படி, ஒருவனாகிலு கீழ்ப்படியாமையினாலே விழுந்து போகாதபடிக்கு, நாம் இந்த இளைப்பாறுதலில் பிரவே சிக்க ஜாக்கிரதையாயிருக்கக்கடவோம்.

6. **ஆகையால், சிலர், மூ.** ஆகையால், சிலர் அதில் பிரவேசிக் கும்படி அது இருக்கிறபடியினாலும், நற்செய்தியை முன்னே அறி விக்கப்பெற்றவர்கள் கீழ்ப்படியாமையினாலே அதிற் பிரவேசிக்கத் தவறினதினாலும், எ–று.

7. இன்று அவர் சத்தத்தைக் கேட்பீர்களாகில் உங்கள் இருதயங் களைக் கடினப்படுத்தாதேயுங்கள் என்று அத்தனைக்காலத்துக்குப்பின்பு தாவீதிலே முந்திச் சொல்லியிருந்தபடி "இன்று" என்று ஒரு விசே ஷதினத்தை மறுபடியும் குறிப்பிக்கிறார். **தாவீதில்.** நூலாசிரியர்க ளின் பாடல் முதலானவற்றை இவ்வாறு சுருக்கிச்சொல்வது வழக்கம். உதாரணமாக: ஷேக்ஸ்பியரில், மில்ற்றனில், கம்பர், ஒட்டக்கூத்தரில் இவ்வாறு பாடியிருக்கிறது என்பார்கள். **தாவீதில்** என்பது சங்கீதத்தில் என்றர்த்தப்படும். நிருபாசிரியர் பதினொரு சங்கீதங்களை இந்நிருபத் தில் எடுத்துரைக்கிறார். அவை: சங். 2, 8, 22, 40, 45, 95, 102, 104, 110, 118, 135. எபிரேயர் சங்கீதங்களை ஆவலாய்ப் பாடு வார்கள்.

8. **யோசுவா**—மோசேக்குப் பின்வந்த தலைவன். இந்த வார்த்தை க்கு அர்த்தம் இரட்சகர் இந்த வார்த்தைதான் கிரேக்கிலே இயேசு என்று வழங்கினது. யோசுவாவைக்குறித்து அவர் பெயர்கொண்ட ஆகமத்தை வாசித்துக்கொள்ளவும். **அவர்களை, மூ.** அவர்களுக்கு ஓய்வு கொடுத்திருந்தால் என்னத் திருத்தவும். இஸ்ரவேலரைக் கானான் நாட்டுக் குள் கொண்டுபோய்க் குடியேற்றினது அவர்களுக்கு ஓய்வாக மதிக் கப்பட்டிருந்தால் என்றவாறு. அவர்களுக் கருளப்பட்டது ஒருவித மான ஓய்வுதான். கடும்பிரயாணம் முடிந்தது; நல்ல நாடு கிடைத்தது; அதுவும் பாலுந்தேனும் பாயப்பெற்ற மிக்க செழிப்பான நாடு, யுத்தங் கள் எல்லாம் ஓய்ந்தன. இனி அவர்கள் ஜீவியம் அமைதியான கிரு ஷித்தொழில்மாத்திரம். இதெல்லாம் ஒருவித ஓய்வாயினும், நித்ய

மும் உண்மையுமான ஓய்வன்று. உப. 12-9; யோ. 23. 1 காண்க. அவையனைத்தும் கிறிஸ்து தமது அடியாருக்கு அருளும் ஓய்வுக்கு அறி குறியும் முன்னடையாளமுமாய் மாத்திரமிருந்தது. மத். 11. 28; 2 தெச. 3. 1–6; வெளி. 14. 13. **பின்பு அவர்,** மூ. வேறொரு நாளைக் குறித்து அவர் பிற்பாடு சொல்லியிருக்கமாட்டாரே எனத் திருத்தல் நன்று. அவர். யெகோவா. வேதமுழுவதும் நிருபாசிரியருக்குக் கடவுள் வாக்காயிருக்கிறது.

9. **ஆகையால்,** மூ. இது முந்தின நியாயத்தின் முடிவு. இது மகா முக்கியமான சுலோகம். ஆறு நெஞ்சுக்கு அமுதளிக்கும் அரும் வாக்கு. கடவுள் ஜனத்துக்கு ஓர் ஓய்வுகாலம் இனியுண்டு, என்று திருத்தவும். இந்த ஓய்வின்பேரில் ரிச்சர்ட் பாக்ஸ்ற்றர் என்ற ஓர் வைதீக சாஸ்திரி சிறந்த ஒரு புஸ்தகம் எழுதியிருக்கிறார். யோசுவா ஓர் ஓய்வு வருஷம் ஏற்படுத்தினார். பிந்தி ஏழாம் வருஷமும். குறிப்பு ஒருவேளை இக்காலத்துக்கும், இதன் மூலமாய் இனிவரும் நித்திய ஓய்வுக்கும் இருக்கலாம். யோசு. 14. 15; சங். 92 ஓய்வுநாள் கீதம் என்று தலைப்பில் காட்டியிருக்கிறது.

10. **அவருடைய,** மூ. இவ்வாக்கியம் முற்கூறிய "ஓய்வுநாளை" நன்கு விளக்குகிறது. அவருடைய: கடவுளின் ஓய்வுக்குள் பிரவேசித் தவன் அவரைப்போலவே தன் வேலைகளை விட்டு ஓய்ந்திருக்கிறான் எனின் வாக்கியத்தின் பொருள் நன்கு விளங்கும். கடவுள் இப்போது நடக்கிற "ஓய்வுநாளிலே" தமது சிருஷ்டிப்பின் வேலையைமாத்திரம் நிறுத்தியிருக்கிறார்; பிரபஞ்ச அரசு தாம் ஏற்படுத்திய சட்டங்களின் படியே நடந்தேறுகிறது.

11. **அந்தத் திருஷ்டாந்தத்தின்படி.** இதை நீக்கி, வாக்கியத்தைப் பின்வருமாறு மாற்றவும்: ஒருவரும் அதேமாதிரியான கீழ்ப்படியா மைக்குள் விழாவண்ணம், நாம் அந்த ஓய்வுக்குள் பிரவேசிக்கச் சுறு சுறுப்பா யிருப்போமாக. 2 பேது. 1. 10, 11; பிலி. 3. 14 காண்க. "சோம்பலுக் கிடங்கொடேல்." சாமானிய விஷயங்களில் எவ்வாறோ, அவ்வாறே ஞானவிஷயங்களிலும் சோம்பல் தீமை விளைக்கும். வனாந் தரத்து இஸ்ரவேலரை நமக்குத் திருஷ்டாந்தமாக வைத்துக் காட்டு கிறார்.

4. 12, 13.

12 தேவனுடைய வார்த்தையானது ஜீவனும் வல்லமையும் உள்ளதாயும், இருபுறமும் கருக்குள்ள எந்தப் பட்டயத்திலும் கருக்கானதாயும், ஆத்துமாவையும் ஆவியையும், கணுக்களையும் ஊனையும் பிரிக்கத்தக்கதாக உருவக் குத்துகிறதாயும், இருதயத்தின் நினைவுகளையும் யோசனைகளையும் வகையறுக்கிறதாயும் இருக்கிறது.—13 அவருடைய பார்வைக்கு மறைவான சிருஷ்டி ஒன்றுமில்லை; சகலமும் அவருடைய கண்களுக்கு முன்பாக நிர்வாணமாயும் வெளியரங்கமாயு மிருக்கிறது, அவருக்கே நாம் கணக்கு ஒப்புவிக்கவேண்டும்.

அரும்பத விளக்கம்.

12. **தேவனுடைய வார்த்தையானது.** கடவுள் வாக்கு. இங்கு கிறிஸ்துவாகிய நித்ய வார்த்தை (யோவா. 1. 1) குறிக்கப்படுகிறதில்லை. நிருபாசிரியர்காலத்தில் வழங்கின பழைய ஏற்பாடாகிய வேதாகமத்தைக்குறித்தே இவ்வாறு புகல்கின்றார். தாவீதும் சங். 1. 2–இலே கர்த்தருடைய வேதத்தைப்பற்றி அவ்வாறே கூறுகின்றார். பழைய ஏற்பாடு அத்தனைச் சிறந்ததானால், கிறிஸ்துவின் வாக்காகிய புதிய ஏற்பாடு எத்தனைச் சிறந்ததா யிருத்தல்வேண்டும். நிருபாசிரியருக்கு வேதவசனம் முன்னோரின் பூர்வ வாக்கன்று; எந்நாளும் ஜீவித்திருக்கிற சக்தியின் வாக்கே. இனி கடவுள் வாக்கின் லட்சணங்களாவன: (1) **ஜீவனும்;** உயிருள்ளது; (2) **வல்லமையும்.** கிரியாசக்தியுள்ளது; (3) **இருபுறமும் கருக்குள்ள எந்தப் பட்டயத்திலும் கருக்கானதாயும்.** இருகருக்குள்ள எந்தக்கத்தியிலும் கூரியது. ஏசா. 49. 2; எபே. 6. 17; வெளி. 2. 16; 19. 15 காண்க. தர்மாதர்மங்களையும், நீதிநியாயங்களையும், சத்தியாசத்தியங்களையும் சரிவரப் பகுத்தறியும் சக்தியுள்ளது. அதன் வெட்டுக்கு யாரும் தப்பார்கள். வேதாகமத்திலே ஒவ்வொரு மனிதனும் தன் யதாஸ்திதியைக் கண்டுகொள்ளுகிறான். கண்டு, நான் இத்தனைத் துன்மார்க்கனா? இன்னின்ன கேடுகள் எனக்குள்ளே ஒளித்திருக்கின்றனவா? பலரும் என்னைப் புகழ, இந்தச் சத்திய வாக்குமட்டும் என்னை இகழ்கிறதே என்பான். (4) **ஆத்மா ஆவிகளை கணுக்கள் மூளை யிரண்டுவையும் ஊடுருவிப் பிரிக்கத்தக்கது.** கடவுள் வாக்

குக்கு மனுஷ சுபாவத்தை வேரறப் பகுத்துப் பிரித்துக்காட்டுஞ் சக்தி யுண்டு. ஆத்மாவானது மனிதனை மிருக ஜீவன்களுடன் சேர்க்கிற ஐம் புல உணர்ச்சி முதலானதை யுடையது; ஆவியானது மனிதனைக் கடவு ளுடன் சேர்க்கிற ஞானவாஞ்சை, தெய்வபக்தி, கடவுளேக்கம், ஸ்வர் க்கநாட்டம், பாவ உணர்ச்சி, பாவ நிவாரணம் முதலான லட்சணங்க ளுடையது. இந்த நுண்ணிய பிரிவு செயலின் பூர்த்தியைக் குறிபிக்க கணுக்குள் மூளைவரையும் என்கிருர். (5) இருதயத்தின் நினைவுகளை யும் யோசனைகளையும் வகையறுக்கிறது. இருதயத்தின் நினைவுகளையும் எண்ணங்களையும் வகுக்கத்தக்க விரைவுள்ளது. நினைவுகளென்றது நமக்குள் எழும்பும் பலவிதமான சிந்தைகள், தோற்றங்கள், பாவனை கள் முதலானவை. சில நல்லவை, சில தீயவை; சில இரண்டிலும் கலவாதவை. எண்ணங்களென்றது நமது நற்செயல் துர்ச்செயல்க ளாகிய சகலத்துக்கும் மூலகாரணமாகிய நோக்கங்கள். நோக்கத்தின் குணத்தால் ஒரு செயலின் தன்மை நன்று தீதாகத் தீர்க்கப்படும்; அத ஞல் நற்செயலும் தீதாகும், துர்ச்செயல்போன்றதும் நன்ருகிவிடும். இந்த நுட்பா நுட்பங்களை மயிரிழைபோல் பிரித்தெடுத்துத் தீர்க்கும் லட்சணம் கடவுள் வசனத்துக்குண்டு. இவ்வாக்கியத்தைக் கடவுள் வாக்கின் பஞ்சலட்சண சுருக்கம் என்னலாம். அவற்றை உயிர், சக்தி, கருக்கு, பிரிப்பு, தீர்ப்பு எனச் சுருக்கி யுரைக்கலாம்.

13. மறைவான—தோற்ருத. யோபு. 34. 21; சங். 90. 8; 139. 1–12. மேல்வாக்கியத்தில் கடவுள் வாக்கின் சர்வஞ்ஞத்துவத்தை விளக்கி, இவ்வாக்கியத்தில் அவரது சர்வ வியாபகத்தையும் சர்வஞ்ஞத் துவத்தையும் உதகரிக்கிருர். சகலமும் மூ. சகலமும் (எல்லா வஸ்துக் களும்) நாம் அடங்கி நடக்கவேண்டியவரின் கண்களுக்கு நிர்வாண மும் திறந்துவைத்த வண்ணமுமாயிருக்கிறது எனத் திருத்தவும். முன் ஸ்லோகத்தில் எதிர்மறையை நிறுத்தி, பின் ஸ்லோகத்தில் உடன் பாட்டை உறுதிசெய்கிருர். வெளி. 2. 18. அடங்கி நடக்கவேண்டி யவர். அல்லது கணக்கு ஒப்புவிக்கவேண்டியவர்; அல்லது நம ததிகாரியின். லூக். 16. 2–இலே "உன் உக்கிராணக் கணக்கை ஒப்புவி" என்றிருக்கிறது. அவ்வாறே 1 இரா. 2. 14; 2 இரா. 9. 5 காண்க.




4. 14-16.

14 வானங்களின் வழியாய்ப் பரலோகத்திற்குப் போன
தேவகுமாரனாகிய இயேசு என்னும் மகா பிரதான
ஆசாரியர் நமக்கு இருக்கிறபடியினால், நாம் பண்ணின
அறிக்கையை உறுதியாய்ப் பற்றிக்கொண் டிருக்கக்கட
15 வோம்.—நம்முடைய பலவீனங்களைக்குறித்துப் பரி
தபிக்கக்கூடாத பிரதான ஆசாரியர் நமக்கிராமல், எல்
லாவிதத்திலும் நம்மைப்போல் சோதிக்கப்பட்டும், பாவ
மில்லாதவராயிருக்கிற பிரதான ஆசாரியரே நமக்கிருக்
16 கிறார்.—ஆதலால், நாம் இரக்கத்தைப் பெறவும், ஏற்ற
சமயத்தில் சகாயஞ்செய்யுங் கிருபையை அடைய
வும், தைரியமாய்க் கிருபாசனத்தண்டையிலே சேரக்
கடவோம்.

## அரும்பத விளக்கம்.

14. **பரலோகத்துக்குள்**—மூலத்திலில்லை. போன. போயிருக்கிற. தேவ. கடவுள். இருக்கிறபடியினால். உண்டாயிருப்பதால். **நாம் பண்ணின**. நமது அறிக்கையை உறுதியாய்ப் பற்றிக்கொள்வோமாக. இயேசு. ரட்சகரின் மனுஷீக நாமம்; கடவுள் குமாரன், அவரது தெய்வீகநாமம்: இருசுபாவமும் அவரில் இணைந்திருக்கிறதற்குத் திருஷ்டாந்தமாக. வானங்கள் பூலோகத்துக்கும் பரலோகத்துக்கும் மத்தியில் திரைபோன்ற ஆகாயமண்டலம். கிரிஸ்து பிரதான ஆசாரியர் மாத்திரமல்ல. மகாப் பிரதான ஆசாரியராயிருக்கிறார். நியாயமாய் இந்த வாக்கியம் ஒரு புது அதிகாரத்தைத் தொடங்கவேண்டும். இப்பொழுது நிருபாசிரியர் முன்னே. அதி. 2. 17; 3. 1—இலே குறிப்பிட்ட விஷயத்தை இனித் திட்ப நுட்பமாய் விளக்கப்போகிறார். ரட்சகர் முதலாவது தேவதூதருக்கும், இரண்டாவது மோசேக்கும் மேலானவரென்று வேதவாக்கியத்தைக்கொண்டு ரூபித்தவர், இனி அவர் ஆரோனுக்கும் அவன் பின்னடியாரான சகல பிரதான ஆசாரியருக்கும் லேவியருக்கும் கிரகிக்கமுடியாத மேன்மையுள்ளவரென்று ரூபிக்கத் தொடங்குகிறார். ஒன்று நிஜம்: அவர் நித்திய ஓய்வுக்குள் பிரவேசித்து, பிதாவின் வலப்பக்கத்தில் வீற்றிருக்கிறார். அவரை நாம் நமது ஜீவியத்தில் **அறிக்கை**யிட்டால், நாமும் அவருடைய ஓய்வை அடைவோம்.

15. **ஏனெனில்**—இதை வருவித்துக்கொள்ளவும். நமது அறிக்கைப்பாட்டை உறுதியாய்ப் பற்றவேண்டிய நியாயங் கூறப்படுகிறது. **பலவீனங்கள்**.—மனதுக்கும் மாமிசத்துக்குமுரிய குறைகள். அதாவது, நமது சங்கடங்கள், சஞ்சலங்கள், நோய் நொடிகள், பாவத் தூண்டல்கள், சிறிதும் பெரிதுமான சோதனைகள், துக்க துயரங்கள், கஷ்ட நஷ்டங்கள்; தொகையாய், நாம் குடிக்கவேண்டிய கசப்புக்கலந்த பானம், இது உடலெடுக்கும் ஒவ்வொரு மானிடனின் இதழண்டை வைத்திருக்கிறது. **பரிதபிக்கக்கூடாத**. உடன் உணர்ச்சியுறமாட்டாத, **பிரதான ஆசாரியர் நமக்கிராமல்**. ஒருவரல்ல; **எல்லாவிதத்திலும்**. முன்விவரித்த சகல சம்பவங்களிலும். **சோதிக்கப்பட்டும்**. பாவத்துக்கு மாத்திரமல்ல துக்க துன்பம் முதலான சகலத்துக்கும். யோவா. 11. 33,

35; லூக். 22. 28; 4. 2. **பாவமில்லாதவராயிருக்கிற.** *பாவமுறாத.* **நமக்கிருக்கிறர்.** *நமக்குண்டு.* *யோ.* 14. 30; 2 *கொரி.* 5. 21; 1 *பேது.* 2. 22; 1 *யோ.* 3. 5 *காண்க. ஏனைய பிரதான ஆசாரியரோடே கிறிஸ்து ஒப்பிடப்படுகிறார். அவர்கள் பெரும்பாலும் உடலுணர்ச்சியற்ற அகங்காரிகள்; பாவப்பிணியுள்ளவர்கள்; பாவிகள் கரையேற வழி காட்ட முடியாதவர்கள்; விதவைகளையும் அநாதர்களையும் கொள்ளையிடுபவர்கள்; "வாய் வாழைப்பழமும் கை கருணைக்கிழங்கும்" போன்றவர்கள்; கொடுக்கிறதைவிட வாங்குகிறதே பாக்கியமெனச் சாதிப்பவர்கள். கிறிஸ்துவோ அவ்வாறல்லர். அவர் தேவகுமாரனாயிருந்து மகிமையிலே வசிப்பவராயினும் நம்மைப்பார்த்துப் பரிதபிப்பவர். பாவமொன்று தவிர, மற்றெல்லாவிதத்திலும் நம்மைப்போலச் சோதிக்கப்பட்டு, பாடுபட்டு, துன்பப்பட்டு, துக்கப்பட்டு, தூஷிக்கப்பட்டு, பகைக்கப்பட்டு, கொல்லுண்டு, கல்லறையிலே வைக்கப்பட்டு—இக வாழ்வுக்குரிய எண்ணிறந்த சம்பவங்களுக்கெல்லாம் இலக்காயிருந்தவரானமையால் அநுபவ சித்தாந்தமாய்த் தம்மை நம்மைப்போலெண்ணி நமக்காக இடைவிடாமல் தவிப்பவர். வாக்கியத்தைப் பின்வருமாறு திருத்தலாம்:* **ஏனெனில், நம்முடைய பலவீனங்களைக்குறித்து நம்மிடம் உடனுணர்ச்சி யுறமாட்டாத ஒருவரல்ல; எவ்விஷயத்திலும் நம்மைப்போலச் சோதிக்கப்பட்டும் பாவமுறாத பிரதான ஆசாரியரே நமக்குண்டு.**

*இதனால் தேவகுமாரன் மானிட உடலெடுத்தபொழுது, மானிடருக்குரிய பாவமொன்று தவிர மற்றெல்லாப் பாடுகளையும் சகிக்க உடன்பட்டாரென்றறிக. பரோபகார சிந்தை அவரிடத்தில் பூர்த்தி பெற்றதேயன்றி, சுயோபகாரசிந்தை தினையத்தனையும் காணப்படவில்லை. சிலுவையில் அவர் தொங்குகையில், "பிறரை ரட்சித்தான், தன்னை ரட்சிக்க முடியவில்லை" என்று பலர் பரிகாசம்பண்ணினது ஒருவாறு வாஸ்தவந்தான்.*

16. **ஆதலால்.** *ஆனதுபற்றி. இத்தகைய தலைக்குரு நமக்குண்டாயிருக்கிற காரணத்தால், எ–று.* **இரக்கத்தைப்பெறவும்.** *இரக்கம் பெறவும்.* **ஏற்ற சமயத்தில்.** *குறையுறுங்காலத்தில்.* **சகாயஞ்செய்தல்.** *உதவுகிற என்றாலுமே போதும்.* **கிருபையை அடையவும்.** *அரு*

ளைக் காணவும். நமக்கு இரண்டு ஆசீர்வாதங்கள் தேவை. ஒன்று, துர்க் கதியில் இரக்கம், கைம்மாறு விரும்பாத தயை; மற்றொன்று, குறைநீக் கும் சகாயம். கிருபாசனத்தண்டையிலே. அதி. 8. 1 காண்க. இங்கே தேவாலயத்தில் பரிசுத்த ஸ்தானத்திலே உடன்படிக்கைப் பெட்டிமே லிருந்த இரக்காசனம் குறிக்கப்படுகின்றது (யாத். 25. 21). அவ்வி டத்தில் கேருபீன்கள் சிறகுகளுக்கிடையில் ஷிக்கைனு என்ற ஒளி பிரகாசித்தது. இங்கே பிரதான ஆசாரியன்மட்டும் வருஷத்துக் கொரே முறை சேரலாம். ரட்சகர் இப்போதிருக்கிற ஸ்தானத்தை இவ்வாறு உவமிக்கிறார் நிருபாசிரியர். கடவுளின் வலதுஸ்தானம் அதைவிட எத்தனையோமடங்கு உன்னதமானது! சேரக்கடவோம். சமீபிப்போ மாக. தைரியமாய். அதி. 3. 61 காண்க. நிருபாசிரியர் எபிரேயர் ஆராதனையை அடிக்கடி எடுத்து விவரிக்கிறார். உதாரணமாக லேவி. 21. 17; 22. 3. இந்நிருபத்தில் அதி. 7. 25; 10. 1, 22; 11. 6; 12. 18–22 காண்க. பவுலப்போஸ்தலன் கிறிஸ்துவோடு ஒன்றித்துப்போ தலை முக்கியப்படுத்துகிறார்; நிருபாசிரியர் யூதமுறைமைகளுக்கு ஏற்ற தாக கடவுள் சமுகம் சமீபிப்பதை முக்கியப்படுத்துகிறார். இதனால் ஹிந்து ஆராதனை முறைமைகளில் சிறந்து விளங்குகிறவைகளை நாம் அலட்சியம் பண்ணலாகாதென்றறிக. படம் பார்க்க.

கிருபாசனத்தைக் கிட்டிச் சேருகிற மிராசு பிரதான ஆசாரியனுக்கு மாத்திரம் உண்டாயிருந்தது. கிறிஸ்து இந்த மிராசைத் தமதடியாராகிய நம்மெல்லாருக்கும் அருளியிருக்கிறார். நாமதனால் பிரதான ஆசாரியராய் விடுகிறோம். அவனுக்குக்கிடைத்த வருஷாந்த மிராசு நமக்கு எந்நாளும் கிடைத்திருக்கிறது. வாஞ்சித்த பொழுதெல்லாம் நாம் நமது மகாப் பிரதான ஆசாரியரின் அருளாசனத்தைச் சேர்ந்து அவருடைய சொந்த உதிரத்தை நம் கரத்தில் ஏந்தி, நம்முடைய விண்ணப்பங்களை அவரு க்கு நம்பிக்கையுடன் செலுத்தலாம். யூதக் கிறிஸ்தவர்களுக்கு, இப் போதனையினால் எவ்வளவு ஆறுதலும் தேறுதலும் உண்டாயிருக்கும்! அவ்வாறாயின், சுத்த அந்நியராயிருந்து பரிசுத்த ஸ்தலத்திற் பிரவே சிக்க அருளடைந்த நமக்கு இது எத்தனை உன்னதமான பாக்கியம்!



பிரதான ஆசாரியன்.

# 5. அதிகாரம்.

## அதிகார விஷயம்.

பிரதான ஆசாரியத்துவத்துக்குரிய லட்சணங்கள் (1) உடனுணர்ச்சிச் சக்தி (1–3); (2) உத்தியோக அழைப்பு (4–10); எபிரேய சபையாரின் மந்தகுணம் (11–14).

5. 1-3.

அன்றியும், மனுஷரில் தெரிந்துகொள்ளப்பட்ட எந்தப் பிரதான ஆசாரியனும் பாவங்களுக்காக காணிக்கைகளையும் பலிகளையும் செலுத்தும்படி, மனுஷருக்காக தேவகாரியங்களைப்பற்றி நியமிக்கப்படுகிறான்.—
2 தானும் பலவீனமுள்ளவனானபடியினாலே, அறியாதவர்களுக்கும் நெறிதப்பிப் போனவர்களுக்கும் இரங்கத்
3 தக்கவனாயிருக்கிறான்.—அதினிமித்தம் அவன் ஜனங்களுடைய பாவங்களுக்காகப் பலியிடவேண்டியதுபோல, தன்னுடைய பாவங்களுக்காகவும் பலியிடவேண்டியதாயிருக்கிறது.

## எம்பெருமானின் பிரதான ஆசாரியத்துவம்.

பிரதான ஆசாரிய உத்தியோக லட்சணங்களை விளக்க ஆரம்பித்து, கிறிஸ்துவின் ஆசாரியத்துவத்தை மூன்று அதிகாரங்களிலே விரித்துரைக்கிறார். எவ்வாறெனில், (1) கிறிஸ்துவிலே பிரதான ஆசாரியத்துவ லட்சணங்கள் நிறைவேறுகின்றன (அதி. 5. 1–10); (2) இடைவிடா முயற்சியினாலே உண்டாகிற விர்த்தி (5. 11–6 அதி. முழுமையும்); (3) கிறிஸ்துவின் உத்தியோக லட்சணங்கள் மெல்கிசேதேக்குவினால் முன் குறிக்கப்பட்டது (அதி. 7. 1); லட்சணங்கள் இரண்டு. முதலாவதை முதல் மூன்று வாக்கியங்களிலே விளக்குவிக்கிறார்.

### அரும்பத விளக்கம்.

1. வாக்கியத்தைப் பின்வருமாறு மாற்றினால் பொருள் சிறந்து விளங்கும்: ஏனெனில், ஒவ்வொரு பிரதான ஆசாரியனும் மனிதரிலிருந்து எடுக்கப்பட்டு, பாவங்களுக்காகக் கொடைகள் பலிகள் இரண்டையும் செலுத்தும்பொருட்டு கடவுளுக்குரிய காரியங்களில் மனிதருக்காக நியமிக்கப்படுகிறான். **எடுக்கப்பட்டு**—தெரிந்துகொள்ளப்படுகிறது பொழிப்புரை, மொழிபெயர்ப்பன்று. யாத். 28. 1. எம்பெருமான் மனிதாவதாரஞ் செய்ததினாலே இந்த லட்சணத்தைத் தெரிவித்தார். அவரும் மனிதனானார். அதி. 2. 7; 3. 1; 4. 14, 15 காண்க. **கொடைகள் பலிகள்**—பழைய ஏற்பாட்டிலே இவ்விரண்டுக்கும் பேதம் கண்டில்லை. ஆயினும் சாதாரணமாய், **கொடைகள்** சமர்ப்பிக்கப்படுகிற பூ, காய், கனி, பணம், பலகாரம் முதலியவற்றையும், **பலிகள்** கொல்லுண்டு தகிக்கப்படுகிற மிருக ஜீவன்களையும் குறிக்கும். இதுகளைக்குறித்து ஆதி. 4. 4; லேவி. 1. 2, 3 காண்க. **பாவங்களுக்காக**—பாவப்பழியை நீக்க; அதனால் வரும் நிஷ்டையை விலக்க. **மனிதருக்காக**—அவர்களுக்குப் பிணையும் பதிலாளியுமாக; இலௌகீக விஷயங்களிலன்று, ஞான விஷயங்களிலே, கடவுளுக்குரிய காரியங்களிலே எ-று.

2. **தானும் பலவீனமுள்ளவனானபடியினாலே**—பிரதான ஆசாரியனின் இன்னொரு லட்சணம் கூறப்படுகிறது இவ்வாக்கியத்தில்.

அந்த லட்சணத்துக்குக் காரணம் அவனது பலவீனம். **உள்ளவன்.** மூலப்பதத்தின் பொருளை நன்கு விளக்கவில்லை. அதற்குச் சரியான பதம்: பலவீனம் சூழ்ந்தவன். **பலவீனக் கட்டுள்ளவனானதால்**—என்றாற் பொருள் சிறக்கும். இந்தப் பலவீனம் சரீரத்துக்கும் ஆத்ம ஆவிகளுக்கும் உரியது. **அறியாதவர்களுக்கும்** ழி—தெரியாதவருக்கும் தவறுகிறவருக்கும். (1) நீதிநெறி தெரியாதவர்கள்; (2) தெரிந்தும் தாமஸகுணத்தால் தவறுகிறவர்கள். **இரங்கத்தக்கவன்** — இரங்கிப் பொறுக்கத்தக்கவன் என்று திருத்தவும். அப்படிப்பட்டவருக்கு தயவு பாராட்டுங் குணமுள்ளவன். மற்ற துஷ்டருக்கன்று. எண். 15. 30; உபா. 17. 12–உம்; 1 தீமோ. 1. 13; லேவி. 4. 2, 13; 5. 1; 19. 20–22 காண்க. தயை தாட்சண்யமும், உடனுணர்ச்சியும் பொருந்தி யிருத்தல்வேண்டும். மாமிச உணர்ச்சியில்லாத தேவதூதனுக்கு மனிதரிடம் உடனுணர்ச்சி பிறப்ப தெவ்வாறு? சுகதுக்கமற்ற துறவிக்கும் அவ்வுணர்ச்சி பிறவாது. இரட்சகர் பூரணமான பிரதான ஆசாரியராய் விளங்கினார்.

3. **அதினிமித்தம்**—அந்தக் காரணத்தினாலே, பலவீனத்தாற் கட்டுண்டவனானதினாலே, பாடும்பாவமும் குறையும் கறையும் உள்ளவனான காரணத்தினாலே. வாக்கியத்தை மீளவும் மாற்றவேண்டும்: **ஜனங்களுக்காக எவ்வாறே, அவ்வாறே தனக்காகவும், பாவங்களுக்குப் பலிசெலுத்தக் கடன்பட்டவன்.** 2-இலே உவமை காட்டினவர், 3–இலே பேதத்தை விளக்குகிறார். இரட்சகர் அவனைப்போலிரங்கிப் பொறுத்துப் பாவங்களுக்குப் பலி செலுத்துகிறது மெய்தான்; ஆனால் அவன் தன் பாவங்களுக்காகவும் பலி செலுத்தினதுபோல அவர் செய்யவேண்டியதேயில்லை; அவர் பாவரகிதராயிற்றே; பாவ பலவீனத்தாற் கட்டுண்டவரல்லவே! லேவி. 4. 3; 9. 7; 16. 6 காண்க. ஒவ்வொரு பிரதான ஆசாரியனும் முதலாவது தன் சொந்தப் பாவங்களுக்குப் பரிகாரஞ்செய்து, பின்பு தன் ஜனத்தின் பாவங்களுக்குப் பலி செலுத்த வேண்டியது பூர்வ சட்டம். (லேவி. 4. 3–12.)

5. 4-6.

4 மேலும், ஆரோனைப்போல தேவனால் அழைக்கப்பட்டாலொழிய, ஒருவனும் இந்தக் கனமான ஊழியத்

5 துக்குத் தானாய் ஏற்படுகிறதில்லை. — அந்தப்படியே கிறிஸ்துவும் பிரதான ஆசாரியராகிறதற்குத் தம்மைத் தாமே உயர்த்தவில்லை; நீர் என்னுடைய குமாரன், இன்று நான் உம்மை ஜநிப்பித்தேன் என்று அவ
6 ரோடே சொன்னவரே அவரை உயர்த்தினார்.—அப்ப டியே வேறொரு இடத்திலும்: நீர் மெல்கிசேதேக்கின் முறைமையின்படி என்றென்றைக்கும் ஆசாரியராயிருக் கிறீர் என்று சொல்லியிருக்கிறார்.

(ii) இப்பொழுது இரண்டாம் லட்சணத்தை எடுத்துரைக்கிறார்.

**௪. மேலும் ஆரோனைப்போல**-**போலவே** எனத் திருத்தவும். ஆரோன் முதலாம் பிரதான ஆசாரியன். திவ்ய அழைப்பும் அபிஷேக மும் பெற்றவர். பிற்காலத்தில் தோன்றிய பிரதான ஆசாரியர்கள் பெரும்பாலும் ஒழுங்கில்லாமலும், வஞ்சனையினாலும், இப்பெரும் உத்தியோகத்தை அபகரித்துக்கொண்டவர்கள். விசேஷமாய், நிருபா சிரியர் காலத்தில், அன்னா, காய்பாவைப்போன்ற தகாதபேர் ஆனந் தம்பேர் ஏற்பட்டிருந்தார்கள். இதனாலே அவர் ஆரோனை மாதிரி ஆசாரியராக அங்கீகரித்து, கிறிஸ்துவை அவரோடு ஒப்பிடுகிறார். **கனமான ஊழியத்தை**—மூலத்தில், **கண்யத்தை**—மாத்திரம் கண்டி ருக்கிறது; இந்த உயர்ந்த தொழிலை எ-று. **தானாய் ஏற்படுகிறதில்லை**—**தானாய் எடுத்துக்கொள்ளுகிறதில்லை**—வியாபாரம், கைத்தொழில் முதலானவைகளைப்போலன்று; சிறந்த உத்தியோகங்களை மேலான ஒருவர் ஒருவனுக்குத் தரவேண்டும். ராஜனும் அபிஷேகம் பண்ணப் படுகிறான். மந்திரி பிரதானிகளும் அவ்வாறே. **தேவனால் அழைக் கப்பட்டாலொழிய**—திவ்ய அழைப்பு இன்றியமையாதது. ஆரோன் அவ்வாறழைக்கப்பட்டான் (யாத். 28. 1; எண். 3. 10 காண்க.). தங்களைத் தாங்களே ஆசாரியரும் அரசருமாக ஏற்படுத்திக்கொண்ட கோரா, உசியா முதலானவர்களுக்கு வந்தகதியை மறக்கவொண்ணாது (எண். 16. 40; 2 நாளா. 26. 18-21). யெரொபெயாம் லேவி வம்சத் தில் பிறவாத அற்பரை ஆசாரியராக்கின அக்கிரமம் மகாப்பாதகமாக எண்ணப்பட்டது (1 ராஜா. 12. 31). தற்காலத்தில் அந்தந்தச் சபைகளில் குருப்பட்டத்துக்கு வேண்டிய சட்டதிட்டங்களுண்டு.

அவற்றின்படியே அபிஷேகங்கள் நடக்கவேண்டும். எந்த மனுஷனும் எத்தனைச் சமர்த்தனுயிருந்தாலும், எத்தனைப் பக்தனுயிருந்தாலும் குருப்பட்டத்தைத் தானே தனக்குச் சூட்டிக்கொள்ளலாகாது. திவ்ய அழைப்பு ஒருவனுக்குப் பலவிதமாய் தொனிக்கும். ஆத்மாக்களை ரட்சிக்கவேண்டுமென்கிற ஆவலபேட்சை அவனைப் பற்றிக்கொள்ளும். அதுவே அவனுக்கு அன்னபானமாயிருக்கும். அல்லது தன் பிரசங்கத்தினுலே அனேகர் குணப்படுவார்கள். அல்லது ஒரு சபையார் ஒருவனுடைய பக்தியையும் குணத்தையும் திறமையையும் பார்த்துத் தங்கள் குருவாகவேண்டுமென்று அவனை அழைப்பார்கள். சில தேவதா பக்தர், பவுலைப்போல், தேவதரிசனமடைந்து அழைக்கப்படுவார்கள். இவை முதலான அழைப்புகளுடன், சபைகள் முறைமைப்படி ஒருவன் அபிஷேகம் பண்ணப்படவேண்டும். அனேகர் இவ்வித அழைப்பும் அத்தாட்சியும் சற்றேனும் இல்லாமல், கண்யத்துக்காகவும் சம்பளத்துக்காகவும் பிழைப்புக்காகவும் இந்த உயர்பதவியில் புகுந்துவிடுகிறுர்கள். ஆனுல் அம்மாய்மாலம் விரைவில் வெளிப்பட்டுவிடுகிறது. இதற்கு ஏராளமான உதாரணங்கள் உண்டு.

5. **அந்தப்படியே—அவ்வாறே** நன்றுயிருக்கிறது. **ஆசிரதந்த—ஆக்கப்படும்படி உயர்ந்தவில்லை.** மகிமைப்படுத்திக்கொள்ளவில்லை எனத் திருத்தவும். பிரதான ஆசாரியனைக்குறித்து எடுத்துக்கொள்ளுகிறதில்லை யென்ற நிருபாசிரியர் எம்பெருமானைக்குறித்து மகிமைப்படுத்திக்கொள்ளவில்லை என்று சொல்லி இரண்டு அந்தஸ்துக்குமுள்ள தாரதம்மியத்தை விசதப்படுத்துகிறுர். **அவரோடு சொன்னவரே—அவருக் குரைத்தவரே**—வாக்கியமுழுவதும்: அவ்வாறே, நீர் என் குமாரன்; இன்று உம்மைப் பிறப்பித்தேன் என்று அவருக்குரைத்தவரேயன்றி, கிறிஸ்துவும் பிரதான ஆசாரியராக்கப்படும்படி தம்மைத் தாமே மகிமைப்படுத்திக்கொள்ளவில்லை. பிதாவினுல் ஏற்படுத்தப்பட்ட குமாரத்துவமே பிரதான ஆசாரியத்துவம். அதி. 2. 9; யோ. 12. 28; 13. 31 காண்க. யோ. 8. 54-இலே இயேசு "என்னை நானே மகிமைப்படுத்தினுல் அந்த மகிமை வீணுயிருக்கும், என் பிதா என்னை மகிமைப்படுத்துகிறவர்; அவரை உங்கள் தேவனென்று நீங்கள் சொல்லுகிறீர்கள்" என்று சொன்னுர்.

6. இந்த மகிமைக்கு இன்னெரு திருஷ்டாந்தமும் எடுத்துரைக்கிறார்: அப்படியே வேறேரிடத்திலும்—சங். 110. 4 காண்க. இது மேசியாச் சங்கீதம். யோனத்தான் என்ற ஓர் எபிரேய வியாக்கியானி இதை யெகோவா தமது வார்த்தைக்குச் சொன்னார் என்று ஆரம்பிக்கிறார். மெல்கிசேதேக்கின் முறைமைப்படி—இந்த நூதன உதாரணத்தை மகா சாமர்த்தியமாய்த் திடீரென்று உபயோகப்படுத்துகிறார். இப்பொழுது ஒரே ஒரு வார்த்தை சொல்லி பிறகு 7-ம் அதிகாரத்தில் இதைத் திட்ப நுட்பமா யுறுதிசெய்கிறார். எபிரேய கிறிஸ்தவர்கள் இதைக் கனவிலும் நினைத்திரார்கள். ஆவியினால் ஏவுண்ட சங்கீதக்காரன் ஆரோனின் முறைமைப்படி என்னுமல், மெல்கிசேதேக்கின் முறைமைப்படி யென்ற காரணம் யாது? எம்பெருமான் நித்யமான ஆசாரியர். இது பின்பு விளங்கும். இந்த விஷயத்தில் தான் இரட்சகர் பிரதான ஆசாரியராயினும், மெல்கிசேதேக்கின் முறைமையில் தோன்றினவர். சகரியா 4. 14-இல் கடவுள் சமுகத்தில் அபிஷேகம்பண்ணப்பட்ட இருவர் இருந்தார்கள். அவர்கள் ஆரோனும் மேசியாவும். 110-ம் சங்கீதத்திற் கிசைய மேசியாவே யெகோவாவின் வலப்பக்கத்தில் வீற்றிருக்கிறவர்.

5. 7-10.

7 அவர் மாம்சத்திலிருந்த நாட்களில், தம்மை மரணத்தினின்று இரட்சிக்க வல்லமையுள்ளவரை நோக்கி, பலத்த சத்தத்தோடும் கண்ணீரோடும் விண்ணப்பம்பண்ணி, வேண்டுதல்செய்து, தமக்கு உண்டான பயபக்தி
8 யினிமித்தம் கேட்கப்பட்டு,—அவர் குமாரனாயிருந்தும் பட்ட பாடுகளினாலே கீழ்ப்படிதலைக் கற்றுக்கொண்டு,—
9 தாம் பூரணரானபின்பு, தமக்குக் கீழ்ப்படிகிற யாவரும் நித்திய இரட்சிப்பை அடைவதற்குக் காரணராகி,—
10 மெல்கிசேதேக்கின் முறைமையின்படியான பிரதான ஆசாரியர் என்று தேவனாலே நாமம் தரிக்கப்பட்டார்.

7. ஏழுமுதல் பத்து ஈறான நான்கு வாக்கியங்களும் தரிக்கப்பட்டார் என்னும் வினைமுற்றோடு முடிகிற ஒரே பெரிய வாக்கியம். மேற்காட்டிய மெல்கிசேதேக்கின் முறைமையைச் சேரப்பெற்ற சிலாக்கியத்துக்கு நியாயங் கூறுகிறார்.

## அநம்பத விளக்கம்.

**அவர் மாமிசத்திலிருந்த நாட்களில்**—தமது மாமிசத்து நாட்களில், அதாவது மனுஷாவதார காலத்தில். **மாமிசம்** இங்கு மனுஷிகத்தைக் குறிக்கிறது. ரோம. 8. 1 முதலிய மற்ற விடங்களிற்போல் கடவுளுக்கு வெறுப்பும் ஆவிக்கு விரோதமுமான மிதமற்ற ஐம்புல நுகர்ச்சியை அன்று. **மரணத்தினின்று இரட்சிக்க**—தப்புவிக்க, விடுவிக்க என்றாலுமே போதும். இரட்சிப்பு என்னும் வடமொழிக்குப் பாதுகாத்தல், உயிர்காத்தல் பொருளாயினும் கிரிஸ்துமார்க்கத்திலே நித்ய நரகாக்கினியிலிருந்தும் பாவத்தின் பழியிலிருந்தும் சக்தியிலிருந்தும் விடுவிக்கப்படுகிறதைமாத்திரம் குறிக்கும் சிறப்புப்பதமாய்விட்டது. இங்கு மரணமென்றது மரணத்துக்குத் தப்பும்படியல்ல, மரித்தும் மீண்டு உயிர்த்தெழுகிறதைக் குறிக்கின்றது. கடவுள் தமது வல்லமையின் சக்தியால் இயேசுவை மரணத்திலிருந்து உயிரோடெழுப்பினாரென்று எபேசியர் நிருபத்தில் சொல்லியிருக்கிறது. **பலத்த**—செய்து. நிருபாசிரியர் கெத்செமனே தோட்டத்தில் நடந்த வரலாற்றை ஞாபகப்படுத்திக்கொள்ளுகிறார். **உரத்த அழுகையோடும் கண்ணீரோடும்** எனத் திருத்தவும். தமிழ் நடையிலே உரக்க அழுது கண்ணீர் விட்டு என்பார்கள். இப்படியே சத்தமிட்டழுதார் என்று சுவிசேஷங்களில் சொல்லியிராவிட்டாலும் நிருபாசிரியர் கொண்ட மனோபாவனை பிசகல்ல. ரட்சகருக்கு அந்நேரத்தில் நேரிட்ட உபத்திரவம் மகாப் பயங்கரமானது. உதிரவேர்வை உண்டாயிற்று. "இந்தப் பாத்திரம் என்னை விட்டு நீங்கவேண்டும்" என்று மூன்றுமுறை வேண்டிக் கொண்டாரல்லவா? யோ. 11. 35; லூக். 22. 43; யோ. 12. 28; சங். 22. 21, 24 காண்க. **விண்ணப்பம் பண்ணி வேண்டுதல்செய்து**—கிரேக்கிலே ஒரே வினைமுற்றுத்தான் உபயோகித்திருக்கிறது; ஆகிலும் இதில் உணர்த்திய பொருள் சரிதான். விண்ணப்பங்களும் வேண்டுதல்களும் (பலிபோல்) செலுத்தி எ-று. அந்த மன்றாட்டுகளின் லட்சணங்களாவன: (1) ரகசியமானவை, (2) வணக்கமானவை, (3) புத்திரனுக்குரியவை, (4) வாஞ்சையுள்ளவை, (5) அடக்கமுள்ளவை. அச்சமயம் எம்பெருமான் செய்த மன்றாட்டுகள் சுகந்தமான பலிகள்போல் சுவர்க்கலோகம் சேர்ந்தன. அவருடைய மனு

ஊழிகம் அந்தச் சொல்லரிய சஞ்சலபாரத்தைச் சுமக்க அரிதாய்விட்டது. சரீர வேதனையைவிட ஆத்மவேதனை துக்கப்பிரவாகமாக அவர் மீது புரண்டது. அவர் உரக்க அழுது உதிரக் கண்ணீர்விட்டது இந்தக் காரணத்தினால்தான். அவர் மன்றாட்டு வீண்போகவில்லை. **நமக்கு--கேட்கப்பட்டு.** தமது தெய்வ பக்தியினிமித்தம் கேட்கப்பட்டு எனத் திருத்தவேண்டும். அதாவது, மரணத்தைப்பற்றிய திகிலல்ல; பிதாவினிடத்தில் தமக்கிருந்த புத்திர பக்தியினால் அந்த மலை போன்ற துயரத்தைத் தாங்கவும் சிலுவையிலே மரித்தும் மூன்றாந்தினம் மீண்டுயிர்த்தெழவும் சக்திபெற்றார்.

8. அவர் **குமாரனாயிருந்தும்.** அனாதி குமாரனாயிருந்தாலும், எம் பெருமான் தமது சரீரம் வளர்ந்ததுபோல, தமதாத்ம ஆவிகளிலும் அநுபவத்திலும் வளர்வ தவசியமாயிருந்தது. முப்பது வயதானபின்புதான் அவர் வெளிப்பட்டு பஹிரங்க வேலைசெய்யத் தொடங்கினார். அனேக தனவான் புத்திரர்கள் கொஞ்சம் கொஞ்சமாய்ப் படித்துத் தேர்ச்சியடையப் பொறுமையில்லாமல் பிஞ்சியிலேயே பழுத்துவிடுகிறார்கள். குமாரத்துவம் கர்வவிர்த்தியன்று; கீழடங்கும் தத்துவம். அழாமல் படிக்கக்கற்ற பிள்ளை அரிது. தொடங்குங்கால் துன்பமாயிருக்குங் கல்வி. குமாரத்துவம் புருஷத்தவமாகக் கஷ்டமும் கவனமுமே வழி. **பட்டபாடுகளினாலே கீழ்ப்படிதலைக் கற்றுக்கொண்டு.** மேற்சொன்னவைகளால் இந்த நியாயம் இப்பொழுது விளங்கும். இதிலே இரண்டு பதங்கள் முக்கியம்: பாடு, கீழ்ப்படிதல். இவ்விரண்டில் "கீழ்ப்படிதல்" தமிழ்ச் சொல்லன்று: கிரிஸ்தவமொழி; ஆங்கிலீஷுக்குச் சரியாக உண்டுபண்ணின வார்த்தை. **சொற்கேட்டல், சொற்கேளாமை** என்கிற தமிழ்ப் பதங்களை உபயோகித்தல் நன்று. **தாம் சகித்த காரியங்களினால் சொற்கேட்டல் கற்று** எனத் திருத்தலாம். மனுஷீகம்பூண்ட திவ்ய புருஷனுக்கும் இந்த அப்பியாசம் வேண்டியதாயிருந்தது. மனிதனைப்போல அவரும் ஜீவிய சட்டத்துக்கு அமைய நேர்ந்தது. தமது பெற்றோருக் கடங்கியிருந்தாரென வாசிக்கிறோம். இங்கு "கீழ்ப்படிதல்" என்றது வருஞ்சங்கடங்களைப் பார்த்து ஓட்டம்பிடிக்காமல் அவற்றைப் பொறுமையாய்ச் சகித்து மேலெழும்புதல். மூழ்கிப் போகிறவனைவிட மிதந்து நீந்

துகிறவனே சமர்த்தன். இதன் பயனை அடுத்த வாக்கியத்திற் காண்க.

9. **நாம் பூரணரானபின்பு.**—மேற்சொல்லிய உபத்திரவங்களி ஞலே பூரணபுருஷராக விளங்கினுர் எம்பெருமான். புராணங்களிலே புகன்றிருக்கும் புல்லவதாரப் புருஷர் இவ்வாறு தேர்ச்சியடையாமல் சாமானிய மனிதனைப் பார்க்க சகலருக்கும் சங்கடத்துக்கும் அஞ்சி, சர்வ பாவங்களுக்கும் உட்பட்டு, துக்கம் பொறுக்கமாட்டாமலும், துன்பம் சகிக்கமாட்டாமலும் கேவல ஸ்திதியிலிருந்து மாண்டவிதங் காண்கிருேம். எம்பெருமாஞே அன்பும் அருளும் தூய்மையும் தர்ம மும் உருவெடுத்தவையாய் விளங்கினுர். ஈராயிர வருஷக் காலமாய் அவரது எதிரிகள் முதலாய் அவர் பூரணத்தில் யாதொரு குறையுங் கறையுங் கண்டதில்லே. பரம புருஷோத்தமனுக எழுந்தருளினுர். இப்பூர்த்திக்கு அவர் பாடுகள் பேருதவியாயிருந்தன. லூக். 13. 32 காண்க.

**தமக்குக் காரணராகி.** **தமது சொல்கேட்கும்** யாவருக்கும் நித்ய ரட்சிப்பின் கர்த்தாவாகி எனத் திருத்தவும். இங்கு நாம் கவனிக்க வேண்டிய பல சத்தியங்கள் உண்டு. எம்பெருமான் அருளும் ரட் சிப்பு நித்தியமானது. இம்மையில் தொடங்கியும் மறுமையில் முடிவு பெருது. இப்பேர்ப்பட்ட அருமையான சுவர்க்க பாக்கியத்தை அனேகம்பேர் அற்பமான அநித்திய சிற்றின்பத்துக்கு விற்றுப்போடு கிருர்கள். நித்திய ரட்சிப்புத்தான் ஏனைய பாகங்களில் நித்திய ஜீவன் அல்லது நித்திய ஜீவியமென்று அழைக்கப்படுகிறது. இந்த ரட்சிப்பு எம்பெருமான் சொல் கேட்பவருக்குத்தான். விசுவாசத்திலே சொல் கேட்டலும் அடங்கியது. சொல் கேளாமை உண்டாஞல், விசுவாசத் துக்கு உண்மை குறையும். **கர்த்தா.**—காரணரென்றும் கூறலாம். ரட்சிப்பைத் தமது பிரதான ஆசாரியத்துவத்திஞல் எம்பெருமான் உண்டாக்கினுர்; அதிலே காரணமும் அமைந்திருக்கிறது.

10. **மெல்கிசேதேக்கின் — பட்டார்.** முறைமையின்படியான முறையில் வந்த. **தேவனுலே. கடவுளாலே பெயரிடப்பட்டார்.**— இவ்வாக்கியங்கள் நான்கும் ரத்னங்கள் கோத்த அருமையான ஓர் சரடுபோன்றன. ஒவ்வொரு பெயரும் வினையும் ஒவ்வொரு ரத்ன

மாகப் பிரகாசிக்கிறது. அருள்வேதத்தின் சாராம்ஸம் எனத்தகும். வேறு வேதசாஸ்திரம் வேண்டியதில்லை. இந்த நடை பவுலப்போஸ்தலன் நடைபோன்றதன்று. அவர் ஒரு வார்த்தையிலிருந்து புதிதான இன்னொரு விஷயத்துக்கு அவசரப்பட்டுப் போய்விடுகிறவர். நிருபாசிரியரோ தமது நியாயத்தொடர்ச்சியை விடாமல் ஒன்றுமேல் ஒன்றடுக்கி முடிவுவரைக்கும் வழக்கை விடாதவர். மெல்கிசேதேக்கு என்னும் முக்கியமான பேர் வந்தாலும், ஆத்திரப்படாமல் தமது சபையாருக்கு முந்திக் கொஞ்சம் புத்திபோதனை சொல்லுகிறார்.

5 11-14.

11 இந்த மெல்கிசேதேக்கைப்பற்றி நாம் விஸ்தாரமாய்ப் பேசலாம்; நீங்கள் கேள்வியில் மந்தமுள்ளவர்களானபடியால், அதை விளங்கப்பண்ணுகிறது அரிதாயிருக்
12 கும்.—காலத்தைப் பார்த்தால், போதகராயிருக்கவேண்டிய உங்களுக்கு தேவனுடைய வாக்கியங்களின் மூல உபதேசங்களை மறுபடியும் உபதேசிக்கவேண்டியதாயிருக்கிறது; நீங்கள் பலமான ஆகாரத்தையல்ல, பாலை
13 உண்ணத்தக்கவர்களானீர்கள்.—பாலுண்கிறவன் குழந்தையாயிருக்கிறபடியினாலே நீதியின் வசனத்தில் பழக்க
14 மில்லாதவனாயிருக்கிறான். — பலமான ஆகாரமானது நன்மை தீமை யின்னதென்று பயிற்சியினால் பகுத்தறியத்தக்கதாக முயற்சிசெய்யும் ஞானேந்திரியங்களையுடையவர்களாகிய பூரண வயதுள்ளவர்களுக்கே தகும்.

## எபிரேயசபையின் மந்தகுணத்தைப்பற்றிக் கடிந்துகொள்ளல்.

### அரும்பத விளக்கம்.

11. **இந்த மெல்கிசேதேக்கைப் பற்றி.** மூலத்தில் **அவரைப் பற்றி** என்றிருக்கிறது; ஆயினும் குறிப்பிக்கப்பட்டவர் மெல்கிசேதேக்குத்தான். அவரை அதையென்று மாற்றல் பிசகு. **நாம்—பேசலாம்**—நாம் சொல்லவேண்டிய அனேகமுண்டு என மாற்றவும். **நீங்கள்—படியால்**—நீங்கள் கிரகிப்பதில் மந்தமாயிருக்கிறபடியால். **அதை**—அவற்றை; சொல்லவேண்டிய அனேக விஷயங்களை. **விளங்கப்பண்ணுவது** – விளக்குவது. **அரிதாயிருக்கும்**—அரிது. எபிரேய

கிரிஸ்தவர்கள் மாத்திரமன்று. தற்கால கிரிஸ்தவர்களும் பெரும்பா லும் மந்தபுத்தியுள்ளவர்கள். உலக விஷயங்களையும், கதாசமாசாரங் களையும் எடுத்துரைத்தால் இன்பத்துடன் செவிகொடுப்பார்கள்; ஆவிக் குரியவைகளை எடுத்து விவரித்தாலோ கொட்டாவிவிட்டுக் காது கொடுத்துக் கேட்க மனமற்றவர்களா யிருப்பார்கள். பாதிக்குற்றம் பிரசங்கியின் பாகமாயினும், மற்றதுக்குச் சபையார் நிர்த்தோஷிக ளல்லர். அனேகருக்கு வேதசரித்திரமே தெரியாது; கிரிஸ்துமார்க்க மூலாதாரங்களுக்குச் சுத்த அந்நியர். பின்வரும் வாக்கியங்கள் இந்த மந்தகுணத்தைத் திருஷ்டாந்தப்படுத்துகின்றன. மத். 13. 14, 15.

12. **காலத்தை — வேண்டிய. ஏனெனில், போதகராயிருக்க வேண்டிய இக்காலத்தில் நீங்கள்** – இந்நிருபம் எழுதப்படுநாளில் அவர்கள் குணப்பட்டுக் கிரிஸ்தவர்களாகி வெகு காலமாயிருந்தது. ஆகிலும் அவர்கள் யாதொரு தேர்ச்சியுமடையாமல், ஆவிக்குரிய சாதாரண சத்தியங்களைக் கிரகிப்பதிலே மந்தபுத்தியுள்ளவர்களா யிருந் தார்கள். யூத சடங்காசாரங்களினாலே இன்னுங் கட்டுண்டவர்களா யிருந்தார்கள். மேசியாவின் தன்மையையும் தத்துவங்களையும் சரிவர அறிந்துகொள்ளவில்லை. அவர்கள் கழித்த காலத்தைப் பார்த்தாலோ அவர்கள் பிறரை உபதேசிக்கத்தக்க அறிவும் சக்தியுமுடையவர்களாய் விளங்கவேண்டும். **உங்களுக்கு — இருக்கிறது. கடவுள் வாக்கியங் களின் மூலாதார முதற்பாடங்களை ஒருவனால் மறுபடியும் கற்பிக்கப் படவேண்டியவர்களாகி** எனத் திருத்தவும். **கடவுள் வாக்கியங்க ளின்**—ரோ. 5. 2 காண்க. பழைய ஏற்பாடு; அக்காலத்துச் சத்திய வேதம்; இதனுடன் எம்பெருமான் அருளிச்செய்த உபதேசங்களையும் சேர்த்துக்கொள்ளலாம். தொகையாய், கிரிஸ்துமார்க்க சாராம்ஸங்கள்; 7-10-இல் உள்ளபடி என்றாலும் தகும். **நீங்கள்—ஆனீர்கள். புஷ்டி யான உணவையல்ல, பாலைப் பருகவேண்டியவர்களாய் விட்டீர் கள்** என மொழிபெயர்க்கலாம். **புஷ்டியான உணவு**–தமிழருக்குக் கறிசோறு என்றால் விளங்கும்; குழந்தை பெரிதாகிப் பாலை நிறுத்தி அன்னமுண்பிக்கத் தொடங்குவதை ஒரு ஆசாரமாகக் கைக்கொள்வார் கள்; அன்னப்பியாசமானது பாலபருவம் போய்ப் புருஷபருவம் வந் ததை உதகரிக்கிறது. 1 கொரி. 3. 1, 2 காண்க.

13. வாக்கியத்தை: **பாலுண்கிறவன் நீதிவாக்கியத்தில் அநுபவ மற்றவன்; அவன் பாலகனுயிற்றே**—என்று மொழிபெயர்க்கலாம். கலா. 4. 3; 1 கொரி. 2. 6; எபே. 4. 13, 14 காண்க. **பாலுண் கிறவன்.** அணி நீங்கி, யாதொரு சத்தியமும் அறியாதவன் என் றர்த்தப்படும். அனேக இடங்களில் ஏழைகள்பேரில் தண்ணீர்த் தெளித்து அது ஞானஸ்நானமென்று சொல்லி, அவர்களைக் கிரிஸ் தவர்களென்றழைப்பது மாத்திரமல்ல, பின்பு யாதொரு போதனையு மின்றி யதாஸ்திதியில் விட்டுவிடுகிருர்கள். இப்பேர்ப்பட்டவர்கள் சதாகாலமும் நீதிவிஷயங்களிலே சுத்த குழந்தைகளாகவே யிருக்கி ருர்கள். அந்த எபிரேயரைப்போல. **நீதிவாக்கியம்.** வேதவாக்கியங் கள்; நீதியைப் போதிக்கிற அருள்வேதம்; பழைய ஏற்பாடும், புதிய ஏற்பாடும்; விசேஷமாய் அக்காலத்தில் எழுதியும் எழுதாமலும் வழங்கி வந்த எம்பெருமான் மலர்ந்தருளிய உபதேசங்கள்; ஒருவேளை சில நிரு பங்களும். இவற்றிலும் இவற்றின் சத்தியங்களிலும் பயிற்சியும் தேர்ச் சியுமில்லாத "பாலகனுக்கு" என்ன அனுபோக அறிவே உண்டாயிருக் கும்? 2 தீமோ. 3. 16; ரோ. 1. 17 காண்க. தற்கால தேவாராத னைகளிலே கற்றோரும் கல்லாதோரும் சிறியோரும் பெரியோரும் கலந்திருக்கிறதினுல், பிரசங்கம் இருபாலார்க்கும் ஏற்றதாயிருக்க வேண்டும். பெரியோருக்குமாத்திரம் உபதேசித்தால், மற்றவர்கள் உணவு கிடையாமல் பசித்தும் பசியாறுமல் அதைரியங்கொண்டு போவார்கள்; அவ்வாறே சிறியோருக்குமாத்திரம் உபதேசித்தால் பெரியோர் மனக்கசப்படைவார்கள். நியாயமாய்ச் சிறியோருக்கொரு ஆராதனையும் பெரியோருக்கொரு ஆராதனையுமாக இரண்டு ஆராதனை கள் அவசியம். இங்கிலாந்திலே அனேக ஆலயங்களில், முதல் சிறுவர்க்குப் பிரசங்கம்செய்து முடித்து, பின்பு பெரிய பிரசங்கம் நடத்துவார்கள். பாலகருக்குப் பாலும், பெரியவர்களுக்குப் புஷ்டி யுணவும் ஏற்றவை அல்லவா?

14. இந்த முக்கியமான வாக்கியத்தைப் பின்வருமாறு மாற்றினுல் பொருள் நன்குவிளங்கும்: **நன்மை தீமை பகுத்தறியும்படி தங்கள் புலன்களைப் பழக்கத்தினுல் அப்பியாசப்படுத்துகிறவர்களுக்கு. அதா வது பூரண வயதுள்ளவர்களுக்கே, புஷ்டியான உணவு தக்கது.**

**நன்மை தீமை**—இது சாதாரணமான நீதி அநீதிகளையல்ல, உபதேசத்திலே உத்தமமும் உயர்ந்ததுமானவைகளை உணரும் சக்தியை. ஒரு நாள் அபிஷேகம் பண்ணப்படுகையில் அச்சமயம் அப்புது குரு செய்த பிரசங்கத்தைக் கேட்ட ஒரு தேர்ச்சியடைந்த சகோதரி "அவருக்குக் கிரிஸ்துவின் ஆவியில்லை" என்றாள். அவர் கிரிஸ்துவிலே "பூரணவயது அற்றவர்" **புலன்கள்**—ஞானேந்திரியங்கள். மறுபிறப்படைந்த சாதாரண மனிதனுக்கு ஆவியின் காரியங்கள் அவலமாய்த் தோன்றும். ஆவிக்குரியவன்தான் ஆவிக்குரிய அருஞ் சத்தியங்களை அறிந்துகொள்வான். 1 கொரி. 2. 14, 15; ரோ. 2. 18; பிலிப். 1. 9, 10. நன்மை தீமை யறிதல் என்கிறது எபிரேயத் தொடர்மொழி. ஆதி. 2. 17; எசா. 7. 15, 16 காண்க. **பழக்கம் அப்பியாசம்**—மற்றெல்லாத் தொழில்களுக்கும் இவ்விரண்டும் எத்தனை அவசியமோ, அவ்வாறே ஞானதொழில்களுக்கும் இவை அத்தனையுமவசியமென்றறிக. கிரிஸ்தவ பக்தி விசுவாசத்துக்குரிய செயல்கள், ஜெபங்கள், தியானங்கள், கீதங்கள், சம்பாஷணைகள், வேதவாசிப்புகள், பக்திநூல் ஓதல்கள், கடிதப்போக்குவரத்து முதலியவற்றாலே "பூரணவயதுள்ளவன்" ஆவியிலே பலங்கொண்டு தேர்ச்சியடைகிறான்.



## 6. அதிகாரம்.

### அதிகார விஷயம்.

பூரண ஸ்திதிக்குச் செல்ல எச்சரிப்பு (1–3). தவறி விழுதலைப் பற்றி பயங்கரமான எச்சரிப்பு (4–8). உற்சாகப்படுத்தும் உபதேசம் (9–12). கடவுளின் வாக்குண்மை (13-15). பக்தர் அவர் வாக்கைப்பற்றி யிருக்கவேண்டும். (16-20)

### அரும்பத விளக்கம்.

6. 1-3.

1 **ஆ**கையால், கிறிஸ்துவைப்பற்றிச் சொல்லிய மூல உபதேச வசனங்களை நாம் விட்டு, செத்த கிரியைகளுக்கு நீங்கலாகும் மனந்திரும்புதல், தேவன்பேரில்

2 வைக்கும் விசுவாசம்,—ஸ்நானங்களுக்கடுத்த உபதேசம், கைகளை வைக்குதல், மரித்தோரின் உயிர்த்தெழுதல், நித்திய நியாயத்தீர்ப்பு, என்பவைகளாகிய அஸ்திபாரத்தை மறுபடியும் போடாமல், பூரணராகும்படி கடந்து
3 போவோமாக.—தேவனுக்குச் சித்தமானல் இப்படியே செய்வோம.

1. கிறிஸ்துவை—விட்டு. மேற்காட்டிய பாலகரின் முதற்பாடங்களை விட்டு முன்னுக்கு வரவேண்டுமென்று போதிக்கிறார். **கிறிஸ்துவின் மூலாதார பாடங்களைக்குறித்துப் பேசுகிறதை நிறுத்தி** என திருத்தவும். நிறுத்தி என்கிற வினையெச்சம் 3–ம் வசனத்தில் 'கடந்து போவோமாக' என்னும் முற்றோடு முடிகிறது காண்க. அதி. 5–12 பார்க்கவும். யூதச்சபையார் இன்னும் பாலகர் ஸ்திதியிலிருந்தார்கள். ஞானோபதேசத்துக்கப்பால் யாதொரு விர்த்தியும் அடையவில்லை. பாலர் வகுப்பைக் கடந்து 6–ம் பாரத்துக்கு எட்டவில்லை. இந்த ஞானோபதேசங்களை முற்றிலும் விட்டு மறந்துவிடவேண்டுமென்றல்ல. ஆறும் பாரத்திலிருக்கிறவன் அரிச்சுவடியை மறப்பானே? அது அவன் மனதிற் கெட்டியாய்ப் பதிந்திருக்கிறதே. அதுபோல கிறிஸ்துமார்க்க மூல சத்தியங்கள் பக்தர்களின் ஆவிக்குரிய ஜீவியத்தில் ஓர் முக்கிய பாகம். ஆகிலும், ஞான அறிவிலும், திவ்ய ரகசியங்களையும், ஆவிக்குரிய அனுபவ ஆராய்ச்சிகளிலும் கிறிஸ்தவர்கள் வளர்ந்து பூர்த்தியடைய முயலவேண்டுமென்பது. **தாட்டிக்ச்சியுமேன்** என்ற ஞான ஸ்நானம்பெற விருந்தவர்களுக்கு, கற்பிக்கப்பட்ட சில முதற்பாடங்களை நிருபாசிரியர் இங்கு எடுத்துரைக்கிறார். அவையாவன:—
(i) **செத்த கிரியைகளுக்கு நீங்கலாகும் மனந்திரும்புதல்.** மனந்திரும்பல் சுவிசேஷப் போதனையில் முதலாவது. மாற். 1. 15; அப். 2. 38 இலே பேதுரு அப்போஸ்தலன் இருதயத்திற் குத்துண்டவர்களைப் பார்த்துரைத்த முதல் கட்டளை: **நீங்கள் மனந்திரும்பி** என்றதே. **செத்த செயல்களை விட்டு மனந்திரும்பல்** என மாற்றினல் நன்று. கிறிஸ்துவின் அடியார் செத்த கிரியைகளை விட்டுத் திரும்பவேண்டும். குணப்படாதவன் செயல்கள் ஏன் செத்தவை? (1) அவை பாவம் நிறைந்தவை. கலா. 5. 21. அவனது நன்மையிலும் தீமையமைந்

திருக்கிறது. (2) அவை மரணத்துக்குச் செலுத்துகின்றவை. (ரோ. 6. 23). (3) நியாயப்பிரமாணத்தின் கிரியைகளில் உயிர் கிடையாது. யாக்கோபு அப்போஸ்தலனும் பவுலப்போஸ்தலனும், இதை நன்கு விளக்கியிருக்கிறார்கள். அவ்வாறே, ஹிந்துமார்க்க சடங்காசாரங்கள், தானதர்மங்கள், ஸ்தல யாத்திரைகள் முதலியவையெல்லாம் உயிரற்ற செயல்கள்; கிறிஸ்துமார்க்கத்தைச் சேர்ந்த இவைபோன்ற சார மில்லாத ஆராதனை ஆசாரங்கள் யாவும் அவ்வாறே "செத்த கிரியைகள்." (ii) **தேவன்பேரில் வைக்கும் விசுவாசம்.** கடவுளிடத்தில் விசுவாசம் எனத் திருத்தலாம். மனந்திரும்பினபின்பு பொய்த் தேவதைகளைத் தள்ளி மெய்க்கடவுளைப் பற்றிக்கொள்ளுகிறது. உயிரற்ற சடங்கங்காசாரங்களை நம்பிவந்தால், கடவுளை மறக்க நேரிடுகிறது. யூதர்கள் மாத்திரமல்ல, கிறிஸ்தவர்களும் அவ்வாறே கடவுளிடம் பக்தியும் பற்றும் வையாமல் ஆராதனை, ஞானஸ்நானம், நற்கருணை முதலியவற்றை நம்பி மோசம் போகிறார்கள். இவை கடவுள் பற்றின்றெனின், தம்மிலே தாம் செத்த செயல்களாகும்.

2. (iii) **ஸ்நானங்களைக் குறித்த உபதேசம்.** யூதர்கள் அநேகவித மான ஸ்நானனுஷ்டானங்களை அநுசரித்தவர்கள். அவர்கள் கிறிஸ்தவர்களாகி ஞானஸ்நானம்பெற்றும், இதையும் மற்ற ஸ்நானங்களுடன் சம்பந்தப்படுத்தி மயங்கி நடந்தார்கள். அதனால் தெளிவும் திருத்தமுமான உபதேசம் அவர்களுக்கு ஆரம்பத்தில் அவசியமாயிருந்தது. மனந்திரும்பலுக்குப் பின்பு ஞானஸ்நானம். இரண்டையும் பேதுரு அப்போஸ்தலன் தாம் செய்த முதற் பிரசங்கத்தில் (அப். 2. 38) முக்யப்படுத்தியிருக்கிறார். இங்கு பன்மை வழங்கியது ஞானஸ்நானத்தில் சிலர் செய்கிற முற்று முழுக்கையும், யோவான் அப்போஸ்தலன் குறிப்பிக்கிற "ஜலம், ஆவி, இரத்தம்" என்னும் ஸ்நானத்தையும் பற்றியதன்று. அக்காலத்து யூதசபையார் தங்கள் சடங்கு ஸ்நானங்களுக்கும் ஞானஸ்நானத்துக்குமுள்ள முக்கியமான பேதத்தை உணர்த்தின உபதேசத்தைக்குறித்து. இதுவே நிருபாசிரியரின் கருத்து. (iv) **கைகளை வைக்குதல்**–கைகள் வைத்தல் என மாற்றவும். தலைமேல் கைகள் வைக்கிறது அபிஷேகத்துக்கும் (எண். 8. 10, 11; அப். 6. 6; 13. 2, 3; 19. 6), திடப்படுத்தலுக்கும் (அப். 8. 17), சுகப்படுத்

தலுக்கும் (மாற். 16. 18). எம்பெருமான் பன்னிரு அப்போஸ்தல ரையும் நியமித்தபொழுது அவர்கள்மீது கை வைத்ததும் வையாததும் தெரியமாட்டாது. கை வைத்தாசீர்வதிக்கிறதுமுண்டு. அப். 8. 17-இல் சொல்லியது திடப்படுத்தலைப் பற்றியதெனத் துணிதல் சந்தேகத்துக் கிடமுண்டு. (v) **மரித்தோரின் உயிர்த்தெழுதல்.** அப்போஸ்தலர் ரட்ச கரின் உயிர்த்தெழுதலை ஆதாரமாய்க் கொண்டு அதிக உறுதியாய் வற்புறுத்தினார்கள். யூதர்களுக்குக்கூட இந்த நம்பிக்கை உண்டா யிருக்கிறது. (அப். 2. 38; 3. 19 - 21; 26. 20—உம்; லூக். 20. 37, 38; தானி. 12. 2; அப். 23. 8-உம் காண்க. (vi) **நித்திய நியாயத்தீர்ப்பு. நித்திய தீர்ப்பு** எனத் திருத்தவும்: கடைசிநாளிலே நல்லார் பொல்லார் யாவருக்கும் அவரவர்கள் நடத்தையின்படி நடக்கிற தீர்ப்பு. இந்தத் தீர்ப்பு நித்தியமாயிருக்குமென்பது விளங்க **நித்திய** என்னு முரிச்சொல் சேர்ந்திருக்கிறது. மத். அதி. 25; தானி. 7. 9, 10 காண்க.

மனந்திரும்பல், விசுவாசம், ஞானஸ்நானம், திடப்படுத்தல், உயிர்த் தெழுதல், நித்திய தீர்ப்பு ஆகிய இவ்வாறும் கிறிஸ்துமார்க்கத்தின் மூலாதார சத்திய உபதேசங்கள். இதுகள் பாலருக்கும் புதிதாய் ஞான ஸ்நானம் பெறப்போகிறவருக்கும் ஞானோபதேசமாகப் போதிக்கப்பட் டவை. கிறிஸ்துவின் நித்ய ஆசாரியத்துவமாகிய பூரண புருஷத்துவத் துக்கு வளருகிறதைவிட்டு, இதுகளையே திரும்பத் திரும்ப பாடம் பண் ணிவருகிறது போதாதென்று நிருபாசிரியர் எபிரேய கிறிஸ்தவர்களுக் குக் கண்டித்தெழுதுகிறார். தற்கால கிறிஸ்தவர்களும் கிறிஸ்தவ வள ர்ச்சியிலே தேர்ச்சியும் பூரணமும் கருதாமல் பழையபடி மந்திர ஜெபங்கள்மட்டும் கிளியைப்போல் ஓதி, சாரமற்ற ஜீவியஞ்செய் கிறது விருதா. கிறிஸ்தவ யோகத்தால் கடவுளின் இரகசியங்களை ஆராய்ந்த மனத்தெளிவடையவேண்டும். இப்பொழுது அக்கிரம மான யுத்தஞ்செய்து போர்வீரர் உதிரத்தைப் பிரவாகமாகப் பாய்விக் கிறவர்கள் மேற்சொல்லிய ஆறுபதேசங்களையும் நன்றா யறிந்தவர்கள் தானே – ஆகிலும் பொறுமை, அடக்கம், சமாதானம், மனரம்மியம், சுயவெறுப்பு, இச்சையடக்கம் முதலான பூர்ண லட்சணங்களை இந் நாள்வரையும் கற்காமல், எம்பெருமானை இகழ்வது, மீளவும் சிலு

வையிலறைகிறவர்களாய் விளங்குகிறார்களே. உலகம் அவர்களைப் பழிக்கிறதே.

இவ்வாறிலே முதலிரண்டு ஆவிக்குரியவை; இடையிரண்டும் அறிகுறி யடையாளங்களாவன; கடையிரண்டும் யுகாந்த காலத்தவை. என்பவைகளாகிய. என்கிற அல்லது ஆகிய. அஸ்திபாரத்தை. ஓர் அஸ்திபாரம் மறுபடியும் போடாமல். பூரணராகும்படி—போவோமாக. பூரணத்துக்கென்று முயன்று செல்வோமாக.

3. தேவனுக்குச் சித்தமானால். கடவுள் சம்மதித்தால் எனத் திருத்தவும். இம்மாதிரியான பக்தி வாக்கியங்கள் ஆதியிலேயே வழங்கத் தொடங்கின. 1 கொரி. 16. 7; யாக். 4. 15. இப்படியே செய்வோம். நிருபாசிரியர் மனத்தாழ்மையாய்த் தம்மையும் கூட்டிக் கொள்ளுகிறார்.

6. 4-6.

4 ஏனெனில், ஒருதரம் பிரகாசிப்பிக்கப்பட்டும், பரம ஈவை ருசிபார்த்தும், பரிசுத்த ஆவியைப் பெற்றும்,—
5 தேவனுடைய நல்வார்த்தையையும் இனிவரும் உலகத்
6 தின் பெலன்களையும் ருசிபார்த்தும்,—மறுதலித்துப் போனவர்கள், தேவனுடைய குமாரனைத் தாங்களே மறுபடியும் சிலுவையில் அறைந்து அவமானப்படுத்துகிறபடியால், மனந்திரும்புதற்கேதுவாய் அவர்களை மறுபடியும் புதுப்பிக்கிறது கூடாதகாரியம்.

4. ஏனெனில். நாம் மூலாதாரத்தை விட்டு முழு வளர்ச்சிக்கு முயலவேண்டியவர்களாகையால் எ-று. இதுமுதல் மூன்று வாக்கியங்களிலும் பக்தராயிருந்து மருள விழுந்தவர்களின் பரிதாப நிலைமை காண்பித்திருக்கிறது. அப்பக்தருக்கு ஐந்து லட்சணங்கள் கூறியிருக்கின்றன; அவையாவன: (i) ஒருதரம் பிரகாசிப்பிக்கப்பட்டும். ஒருதரம். இது இந்நிருபத்தின் முக்கிய பதங்களில் ஒன்று. புதிய ஏற்பாடு முழுவதிலும் இந்நிருபத்தில் இப்பதம் அடிக்கடி வருகிறது. நிருபாசிரியருக்கு மிகப் பிரியமான பதம். இதை ஒருகால் எனத் திருத்தி ஒவ்வொரு லக்ஷணத்துக்கும் வருவித்துக்கொண்டால் பொருள் சிறந்து விளங்கும். பிரகாசிப்பிக்கப்பட்டும். அதாவது பரி

சுத்தஆவியினுல். யோவா. 1. 9; அதி. 10. 26, 32; 2 கொரி. 4. 4. எழு பதிலே இதற்கு "உபதேசிக்கிறது" அர்த்தமாகக் கண்டிருக்கிறது (2 இரா. 12. 2). பிற்காலத்தில் இதை ஞானஸ்நானத்துக்குப் பிரதி பதமாக வழங்கினுர்கள். இதனுல் சிலர் ஞானஸ்நானத்துக்குப் பின்பு விழுந்து பெரும்பாவிகளானவர்களுக்குப் பாவமன்னிப்புக் கிடையாதெனச் சாதித்தார்கள். இது பிசகு; 1 கொரி. 5. 5; 1 தீமோ. 1. 20 காண்க. அன்றி, இதனுல் இரண்டாந்தரம் ஞானஸ்நானம் செய்விக்கப்படாதென்று ஆதிச் சபைக் குருக்கள் கூறினுர்கள். (ii) பரம ஈவை ருசிபார்த்ததும்-இந்தப் பரம ஈவு இன்னதென்று திட்டமாய்ச் சொல்லமுடியாது. இருதயத்திலே பாவ மன்னிப்பினுலுண்டாகிற சமாதான, சந்தோஷங்களையும் அல்லது இரட்சிப்பின் பரிசுத்த கிரியையையும் குறிக்கிறதாகத் தோன்றுகிறது. ருசித்துமென்னுமல் ருசிபார்த்தும் என்கிறதினுல் இந்த அனுபவ ஆரம்பத்தைமாத்திரம் பெற்றவர்கள் எனத் தெரியவருகிறது. அப்பியாசம் பூர்த்தி செய்யும்; ஆனுல் அது நின்றுபோனுல், அத்தனையும் அவமாய்ப் போகும். 2 கொரி. 9. 15-இலே அப்போஸ்தலன் "கடவுளருளிய சொல்லிமுடியாத ஈவுக்காக" ஸ்தோத்திரம் செலுத்துகிருர். அப். 10. 44-46 காண்க. (iii) பரிசுத்தஆவியைப் பெற்றும்-பரிசுத்தஆவியில் பங்கடையப் பெற்றும் எனத் திருத்துக. பரிசுத்தஆவி பக்தருக்கு அருளும் வரங்கள் பல. இவற்றை 1 கொரி. 12. 8-10-இல் காண்க. இந்த அரும் வரங்களில் இரண்டொன்று அநுபவித்தவர்கள். பிரசங்க வரம், அனேகரைக் குணப்படுத்தும் வரம், அற்புத வரம், சபைநடத்தும் புத்தி, நூலெழுதும் சக்தி, பாடும் வரம், பிரயாணஞ் செய்து பிரசங்கிக்கும் முயற்சி முதலானவை.

5. தேவனுடைய-ருசிபார்த்தும். (iv) கடவுளின் வாக்கு நலத்தையும் என்று ஒருவாறு திருத்தலாம். கடவுளின் வாக்கு நன்மை நிறைந்தது-அதை அவர் பக்தர் அநுபவிக்கிறது வாஸ்தவம். சங். 34. 8 காண்க. (v) வரவிருக்கும் யுகத்தின் சக்திகளையும். இது மேசியாவின் காலத்துச் சக்தி வரங்களையாவது, மறுமையிற் கிடைக்கப்போகிற ஆனந்தத்தையாவது குறிக்கும். யூதர்கள் எம்பெருமான் வருகையை எதிர்பார்த்து அதனுலே அனந்த கிருபாவரங்களையும் அருஞ் சிலாக்

கியங்களையும் சுகிக்கக் காத்திருந்தார்கள். அவ்வாறே பல துன்பங்களை யும் கொடுமைகளையும் பொறுமையாய்ச் சகித்த பக்தர்கள் இனிவரும் மோட்சானந்தத்தையும் அதன் பேரின்பத்தையும் விசுவாசத்தினாலே ருசிபார்த்து வந்தார்கள். இந்தப் பஞ்சலட்சணங்களையும் இதுவிதுவென வகுத்து விளக்க வியாக்கியானிகளுக்கு முடியாதெனினும், ஒன்று நிஜம். இவற்றால் உண்மையாய் மனந்திரும்பிக் குணப்பட்டவர்கள் தாம் இங்கு நிருபாசிரியர் சிந்தையிலிருந்தார்களென்பது விசதம். உம் மையை ஒவ்வொரு பதத்துக்கும் கூட்டியிருக்கிறதைக் கவனிக்கவேண் டும். இதனால் ஒவ்வொரு தொடர்மொழியிலுமடங்கிய உண்மை உறுதி செய்யப்படுகிறது.

5, 6. **மறுதலித்துப் போனவர்கள்.** பின்பு விழுந்து போனவர் களை மனந்திரும்பும்படி மறுபடியும் புதுப்பிக்க முடியாது; (7) அவர் கள் தேவதுமாரனைத் தங்களுக்குத் தாங்களே மீண்டும் சிலுவையில் அறைந்து பகிரங்க வெட்கத்துக் குட்படுத்துகிறர்களே எனத் திருத் திக்கொள்ளலாம். **விழுந்து போனவர்கள்.** விசுவாசத்தை விட்டும் பரிசுத்தத்தை விட்டும் மருள விழுந்தவர்கள். கிறிஸ்துவை முற்றிலும் திரஸ்கரிக்கிறவர்கள். பேருக்குக் கிறிஸ்தவர்களாக நடித்தாலும், உள் ளத்தில் எம்பெருமான்பேரில் பற்றும் அன்பும் கிஞ்சித்துமில்லாமல் ஜீவிக்கிறவர்கள். இதுதான் பரிசுத்தஆவியைத் தூஷிக்கிற பாவ மென்று இரட்சகர் கூறுகிறார். மனப்பூர்வமாய்க் கர்த்தனை விரோதித் துப் பாவச்சேற்றிலே உவப்புடன் உழன்று வருபவர்கள். இதுடன் அதி. 10. 26–29 ஒத்துக்காண்க. அவ்வாறே 2 பேது. 2. 20, 21 காண்க. ஒரு அற்ப சிறுமியை அகஸ்மாத்தாய்த் தீண்டினவன் தீட்டை ஒரு துளி ஜலம் சுத்திகரித்தாலும், அவளை வேண்டுமென்று தன்கை யில் பிடித்திருப்பவன் பாவத்துக்குச் சமுத்திரம் கூட உதவாதென்று ரபிமார் சொல்வார்கள். நிருபாசிரியர் இங்கே எபிரேய கிறிஸ்தவர்களை இவ்வாறு கண்டிக்கவில்லை, ஒரு பொதுச் சத்தியத்தைக் கூறுகிறார். ஒரு வார்த்தையிலே இரண்டாம் மறுபிறப்புக் கிடையாது. இருதயம் கடினமாகிவிடுகிறது. தாவீதும் பேதுருவும் தவறி விழுந்தும் மனந்தி ரும்பினார்கள்; யூதாஸ்காரியோத்து மனந்திரும்ப முடியாமற் தற்கொலை செய்துகொண்டான். **அவர்கள் — உட்படுத்துகிறர்களே.** எம்பெரு

மான் சிலுவையில் அறையுண்டபொழுது உலகத்தின் பாவம் உச்சி பெற்றது. அதற்கு மிஞ்சின பாதகமில்லை. முற்றிலும் மருள விழுந்து கிடக்கிறவர்கள் இந்தப் பெரும்பாதகத்திற் காளாகிறார்கள். கடவுள் அருளுக்கு அளவில்லை என்றாலும், மானிடர் அதற்குக் கடக்கவொண்ணாத ஓரெல்லைபோட முடியும். சூரியவெப்பமானது ஒன்றேயாயினும் அதன் சக்தியினாலே மெழுகு உருகிப்போகிறது, களிமண் இறுகிப்போகிற பேதத்தைக் கவனியுங்கள்.

6. 7, 8.

7 எப்படியெனில், தன்மேல் அடிக்கடி பெய்கிற மழையைக் குடித்து, தன்னிடத்தில் பயிரிடுகிறவர்களுக்கேற்ற பயிரை முளைப்பிக்கும் நிலமானது தேவனால்
8 ஆசீர்வாதம் பெறும்.—முள்செடிகளையும் முள்பூண்டுகளையும் முளைப்பிக்கிற நிலமோ தகாததாயும் சபிக்கப்படுகிறதற் கேற்றதாயுமிருக்கிறது; சுட்டெரிக்கப்படுவதே அதின் முடிவு.

7. இந்த முக்கியமான போதனைக்கு ஒரு உதாரணம் கூறுகிறார். அதை **எப்படியெனில்** என்று ஆரம்பிக்கிறார். **தன்மேல்—குடித்து.** இத்தேசத்தில் இதற் குரைசெய்ய அவசியமில்லை. வறண்டநிலம் வானத்தின் தானத்தைக் குடிக்கிறதென்றே சொல்லவேண்டும். உபா. 11. 11. **தன்னிடத்தில்—நிலமானது** பின்னும் **தன்னைக் கொத்துகிறவர்களுக்கேற்ற பூண்டுகளை முளைப்பிக்கிற நிலமானது** எனத் திருத்தலாம். **ஏற்ற பூண்டுகள்.** தானிய தவசங்கள், உணவுக்கேற்ற பயிர்கள் பூண்டுகளுக்குப் பதில் பயிர்கள் என்று மொழிபெயர்த்தாலும் பிசகன்று. **தேவனால். கடவுளிடத்திலிருந்து** என மாற்றவும். இந்த நிலம் உண்மையான கிறிஸ்தவர்களுக்கு உவமானமென்றறிக. இதுடன் ஏசா. 5. 1–6, 24 காண்க.

8. **முள்செடிகளையும்—நிலமோ.** ஆனலது ——— முளைப்பித்தால். இப்பேர்ப்பட்ட நிலங்களுமுண்டு; இதற்கேற்ற அவபக்தரும் உண்டு. **தகாததாயும்——இருக்கிறது.** இதை, **தள்ளுண்டு சாபத்துக்குச் சமீபமாகிறது** எனத் திருத்தவும். சபிக்கப்படுகிறதென்று உரையாமையால், கடவுளின் இரக்கம் போதிக்கப்படுகிறது. கனிகொடாத

அத்திமர உவமை இதற்கொத்த உண்மையுள்ளது. **சுட்டெரிக்க— முடிவு.** எரிக்கப்படுவதே என மாற்றிக்கொள்க. அதின் என்பது சாபத்தையல்ல, நிலத்தைக் குறிக்கிறது. காடு கொளுத்துகிறது இத்தேசத்தில் வழக்கமாயினும், நிலங்கொளுத்துகிறது அப்படியல்ல. பலஸ்தீனு மிகவும் மலைச்சார்பான நாடானதால், நிலத்தை நெருப்பிட்டு எரிக்கிறது அங்குச் சாதாரணம். ஆதி. 19. 24; உபா. 29. 23 காண்க. யூதேயா நாடு வெகுகாலம் ஏர் உழாமல் புல்பூண்டும் செடிகொடியும் அடர்ந்துபோனபடியாலும், அதிலேயே யூதர்கள் விதைத்தபடியாலும் அது நல்ல பயிர் முளைப்பிக்கவில்லை; அதை அங்கங்கே கொளுத்த வேண்டியதாயிற்று. ஆதிகாலத்திலேயே பூமி முள்ளும் புதரும் முளைப்பிக்க நேரிட்டதையும் நாம் மறக்கலாகாது.

6. 9-12.

9 பிரியமானவர்களே, நாங்கள் இப்படிச் சொன்னாலும், நன்மையானவைகளும் இரட்சிப்புக்குரியவைகளுமான காரியங்கள் உங்களிடத்தில் உண்டாயிருக்கிற
10 தென்று நம்பி யிருக்கிறோம்.—ஏனென்றால், உங்கள் கிரியையையும், நீங்கள் பரிசுத்தவான்களுக்கு ஊழியஞ் செய்ததினாலும் செய்துவருகிறதினாலும் தமது நாமத்திற்காகக் காண்பித்த அன்புள்ள பிரயாசத்தையும் மறந்துவிடுகிறதற்கு தேவன் அநீதியுள்ளவரல்லவே.
11 நீங்கள் அசதியாயிராமல், வாக்குத்தத்தமான ஆசீர்வாதங்களை விசுவாசத்தினாலும் நீடிய பொறுமையினாலும் சுதந்தரித்துக் கொள்ளுகிறவர்களைப் பின்பற்றுகிற
12 வர்களாயிருந்து,—உங்களுக்கு நம்பிக்கையின் பூரண நிச்சயமுண்டாகும்படி நீங்கள் யாவரும் முடிவுபரியந்தம் அப்படியே ஜாக்கிரதையைக் காண்பிக்கவேண்டுமென்று ஆசையாயிருக்கிறோம்.

9. **பிரியமானவர்கள்.** இது தமிழுமல்ல, திருத்தமான மொழிபெயர்ப்புமல்ல. இதை எழுத்திலும் பேச்சிலும் விட்டுவிடுவதே உத்தமம். அன்பர்களே எனத் திருத்தி இதற்குமுன் **ஆகிலும்** என்கிற பதத்தை வைக்கவேண்டும். **நாங்கள்—சொன்னாலும்.** நாங்கள் இவ்வாறு உரைத்தாலும் என்றால் சிறக்கும். மேற்கூறியவாறு உங்களைக் கண்டித்துப் பேசினாலும், உங்களைப் புகழவேண்டிய காரணமும் உண்டு

எ-று. நிருபாசிரியரிடத்தில் கண்டிப்புமுண்டு, கருணையுமுண்டு. நன்மையானவைகளும் மு. அதிலும் நல்லவைகளும் ரட்சிப்புக்குரியவைகளும் உங்களுக்குண்டென்று நம்பி யிருக்கிறேம் என மாற்றவும். மூலாதாரத்திலேயே நின்றுவிடாமல் முன்னேறி வருகிறீர்களென்றும் ரட்சிப்பின் கிரியை உங்களிடம் விர்த்தியாகி வருகிறதென்றும் நிச்சயமாயிருக்கிறோம். வாக். 4-8 காண்க.

10. **உங்கள் கிரியையும்.** கடவுள் உங்கள் வேலையையும். **அன்புள்ள பிரயாசத்தையும்**—அன்பையும் எனத் திருத்தவும். கடவுள் இவ்விரண்டையும், அதாவது, உங்கள் வேலையையும் அன்பையும் மறந்துவிடத்தக்க அநீதியுள்ளவரல்ல. என்ன அன்பு? பரிசுத்த வான்களுக்கு முன்னே ஊழியஞ்செய்ததும், இன்னும் செய்துவருகிறதுமான அன்பு. எதற்காக அன்பு? **தமது நாமத்திற்காக.** அவரது பேரைத் தரித்தவருக்கு. யாருக்கு அன்பு? பரிசுத்தவான்களுக்கு. இது அக்காலத்துச் சபையாருக்கு ஒரு பொதுப்பெயராக வழங்கியது. தற்காலத்துக் கிரிஸ்தவர்களைக் கிரேஸ்தவர்கள் (கிரகஸ்தவர்கள்) என்றழைப்பதுண்டு. எருசலேம் சபையாரைமட்டுமல்ல, சகல கிரிஸ்தவர்களையும் குறித்தது. கிரிஸ்தவன் காட்டும் தினைத்துணை அன்பைக் கடவுள் பனைத்துணையாக மதிப்பார். அவர்கள் பிழைகள் அனேகமாயினும், அவர்களிடம் விளங்கும் அருளானது அவர் பார்வைக்கு மறைந்திராது. எரே. **31. 16**; சங். **9. 12**; ஆமோ **8. 7** காண்க.

11, 12. இவ்விருவாக்கியங்களையும் பின்வருமாறு திருத்திக்கொள்ளலாம்: **அன்றியும்,** உங்களில் ஒவ்வொருவரும் கோரிக்கையானது பூர்த்தியடையும் முடிவுமட்டும் அதே ஜாக்கிரதையா யிருக்கவேண்டுமென்றும்; மந்தமுற்றிராமல், விஸ்வாசத்தினாலும் பொறுமையினாலும் வாக்குகளைச் சுதந்தரிக்கிறவர்களை அநுசரிக்கிறவர்களா யிருக்கவேண்டுமென்றும் அபேக்ஷிக்கிறோம்.

**கோரிக்கை—மட்டும்.** ஆசையும் எண்ணமும் நிறைவேறுகிறதுதான் கோரிக்கை பூர்த்தியடைகிறது. அந்தப் பூர்த்தியே முடிவு. கோரிக்கை நிறைவேறினபின்பு அது இராது. கிரிஸ்தவர்கள் அனேக ஆசீர்வாதங்களைக் கோரியிருக்கிறார்கள். உலக கோரிக்கை வேறு, தெய்வ கோரிக்கை வேறு. இவ்வுலகத்தில் நாமிருக்குமளவும் இந்தப்

பரிசுத்த கோரிக்கைதான் நம்மைத் தாங்கிவருகிறது. கப்பலுக்கு நங்கூரம்போல கிரிஸ்தவருக்குக் கோரிக்கையானது உறுதி நிலை கொடுத்துதவுகிறது. **அதேஜாக்கிரதை.** பரிசுத்தவான்களுக்கு உதவி அன்புப் பாராட்டுவதில் எத்தனை ஜாக்கிரதையாயிருந்தீர்களோ, கோரிக்கை விஷயத்திலும் அவ்வாறே ஜாக்கிரதையாயிருங்கள் எ—று. அதி. 3. 14; 10. 12; 1 தெச. 1. 5; கொலோ. 2. 2 காண்க. **விஸ்வாசத்தினாலும்** மூ. வாக். 15; அதி. 12. 1; ரோ. 2. 7 காண்க. **பொறுமை.** கோரிக்கை நிறைவேறுகிறவரைக்கும் சலிப்பும் சந்தேகமுமில்லாமல் காத்திருக்கிற குணம் (கொலோ. 1. 11; 2 கொரி. 6. 6). **சுதந்தரிக்கிறவர்கள்.** இம்மையிலே பாகம் பாகமாகவும், மறுமையிலே பரிபூரணமாயும். **அநுசரிக்கிறவர்கள்.** பின்பற்றுகிறவர்கள் அன்று; அதற்கு மேலானது. மேற்படி பக்தரை அநுசரிக்கிறதில் மந்தகுணம் உதவாது; சுறுசுறுப்பு அவசியம். அக்காலத்தில் சில பேர்போன பக்தர்கள் இருந்ததாக இதனால் பெறப்படுகிறது. தற்கால சபைகளிலும் அப்பேர்ப்பட்டவர்களிருந்தால் எத்தனை நன்று! அவர்களை அநுசரித்து நடக்கும்படி சபையாரைத் தூண்டிவரலாமே. **அபேக்ஷிக்கிறோம்.** விரும்புகிறோம்.

6. 13-15.

13 ஆபிரகாமுக்கு தேவன் வாக்குத்தத்தம் பண்ணினபோது, ஆணையிடும்படி தம்மிலும் பெரியவர் ஒருவருமில்லாதபடியினாலே தமது பேரிலேதானே ஆணையிட்டு:— 14 நிச்சயமாக நான் உன்னை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்து, உன்னைப் பெருகவே பெருகப்பண்ணுவேன் என்றார்.— 15 அந்தப்படியே அவன் பொறுமையாய்க் காத்திருந்து, வாக்குத்தத்தம் பண்ணப்பட்டதைப் பெற்றான்.

13. விசுவாசிகளின் தகப்பனாகிய ஆபிரகாம் கடவுள் வாக்கை நம்பி ஆசீர்வாதம் அடைந்ததை இவ்வாக்கியங்களில் உதகரிக்கிறார். முன்சொன்னதுக்கு இதுகாரணமாகையால், எவ்வாறெனில் என்றாரம்பிக்கவேண்டும். **ஆபிரகாமுக்கு—போது.** **கடவுள் ஆபிரகாமுக்கு வாக்கருளியபொழுது** என மாற்றவும். ரோ. 4. 13. **ஆணையிடும்படி,** மூ. **தம்மிலும் பெரியவர் ஒருவர்மேல் ஆணையிட மாட்டாமையால்.**

14. **நிச்சயமாகவே—பண்ணுவேன்.** இந்த அடுக்குத்தொடர் உறுதிக்கு வந்தது—இது எபிரெய நடை. என்று **தம்பேரில் தானே ஆணையிட்டார்.** இம்மொழிகளைச் சேர்த்துக்கொள்ளவும்.

15. **அந்தப்படியே.** அவ்வாறே. **காத்திருந்து.** சகித்திருந்து என்றும் மொழிபெயர்க்கலாம். **வாக்கு—பெற்றன்.** அவ்வாக்கைப் பெற்றுக்கொண்டான் என மாற்றலாம். ஆதி. 15. 1; 21. 5; 22. 17, 18; 25-7-உம்; யோ. 8. 56-உம் காண்க. அதி. 11. 13, 39-இலே இதற்கு மேலானதும் மறுமைக்குரியதுமான வாக்குகள் கூறியிருக்கின்றன. ஆபிரகாமின் வமிசத்தார் இந்நாளிலேயும் 1 கோடி 30 லட்சம் பேராய் உலகத்தில் சஞ்சரித்து வருகிறார்கள். கடவுள் வாக்கு ஆச்சரியமாய் நிறைவேறி யிருக்கிறது.

இந்த மகாத்மாவின் விசுவாசத்துக்கொப்ப விசுவாசம் உலகத்திற் காண்பதரிது. கடவுள் வார்த்தையை எவ்வாறே கேட்டு தன் நாட்டையும் இனஜனத்தையும் விட்டு, வயதுசென்ற தானும் தன் மனைவியும் இப்போது சண்டைநடக்கிற மெசொபொத்தாமியாவிலிருந்து புறப்பட்டு நெடுநாள் பிரயாணஞ்செய்து அந்நிய நாடாகிய கானான்தேசம் போய்க் குடியேறினார்கள். என்னத்திற்காக? 400 வருஷத்துக்குப் பிற்பாடு நிறைவேறவிருந்த கர்த்தன் வாக்கை விசுவாசித்தே! கிறிஸ்தவர்களுக்கு விசுவாசம் போதாது. தரிசித்துப் பிழைக்கிறார்களேதவிர, விஸ்வாசித்துப் பிழைக்கிறதில்லை.

6. 16-20.

16 மனுஷர் தங்களிலும் பெரியவர்பேரில் ஆணையிடுவார்கள்; உறுதிபண்ணும்படிக்கு ஆணையிடுதலே சகல
17 விவாதத்திற்கும் முடிவு.—அந்தப்படி, தேவனும் வாக்குத்தத்தம் பண்ணப்பட்டவைகளைச் சுதந்தரித்துக்கொள்ளுகிறவர்களுக்குத் தமது ஆலோசனையில் மாறாத நிச்சயத்தைப் பரிபூரணமாய்க் காண்பிக்கும்படி சித்தமுள்ளவராய், ஓர் ஆணையினாலே அதை ஸ்திரப்படுத்தினார்.—
18 நமக்கு முன் வைக்கப்பட்ட நம்பிக்கையைப் பற்றிக்கொள்ளும்படி அடைக்கலமாய் ஓடிவந்து நமக்கு இரண்டு மாறாத விசேஷங்களினால் நிறைந்த ஆறுதலுண்டாகும்படிக்கு எவ்வளவேனும் பொய்யுரையாத தேவன்

19 அப்படிச் செய்தார்.—அந்த நம்பிக்கை நமக்கு நிலையும் உறுதியும் திரைக்குள்ளாகப் போகிறதுமான ஆத்தும
20 நங்கூரமாயிருக்கிறது.—நமக்கு முன்னோடினவராகிய இயேசு மெல்கிசேதேக்கின் முறைமையின்படி நித்திய பிரதான ஆசாரியராய் நமக்காக அந்தத் திரைக்குள் பிரவேசித்திருக்கிறார்.

கடவுள் வாக்குப் பிசகாது.

16. **மனுஷர் தங்களிலும் — இடுவார்கள்.** கோர்ட்டு, கச்சேரிகளிலும், சபைகளிலும் பிரமாணஞ்செய்தல் நியாயந்தான். க்வெக்கர், சகோதரர் என்னும் சில சபையார் ஆணையிடுகிறதில்லை. அப்படிப்பட்டவர்களிடத்தில் உறுதிவாக்கு வாங்கிக்கொள்வார்கள். அதாவது, "நான் சொல்வது நிஜம்; எல்லாம் நிஜம், நிஜம் தவிர வேறொன்றுமில்லை." கிறிஸ்தவர்கள் சத்தியவேதத்தின்பேரில் சத்தியம் பண்ணுவார்கள். எந்தச்சத்தியத்துக்கும் தன்னிலும் மேலானதொன்று அவசியம். **உறுதி—முடிவு. அவர்களுடைய ஒவ்வொருவழக்கும் ஸ்திரப்பட அவ்வாணையே முடிவு** எனத் திருத்தவேண்டும். ஆணையிட்ட வாக்கை அங்கீகரிக்கவேண்டும். ஆகிலும் துன்மார்க்கர் பொய்யாணையும் இடுவார்கள். இது ரூபகாரமானால் அவர்களுக்குத் தக்க தண்டனை கிடைக்கிறது. ஆதி. 21. 23; 24. 3; 26. 30, 31 காண்க.

17. இதுமுதலான மூன்றும் மிகவும் கடினமான வாக்கியங்கள். **அந்தப்படியே** அல்லது **அவ்வாறே**: அதாவது, மனிதர் வழக்கத்துக்கேற்றபடியே எ—று. **தேவனும் மு. கடவுள் மனப்பூர்வமாய் தமது ஆலோசனையின் மாறுமையை அவ்வாக்குச் சுதந்தரவாளிகளுக்கு இன்னும் அதிகமாய்க் காண்பிக்கும்பொருட்டு இடையிலே ஓர் ஆணை வைத்தார்** என மாற்றவும். கடவுள் ஆபிரகாமுக்குச் செய்த பிரமாணத்தை நிருபாசிரியர் இங்கு விரித்துரைக்கிறார். கடவுள் வாக்கு எந்நாளும் பிசகாது. பிரமதேவன் மகம்மேருவின் சிகரத்தைக் கண்டதாகப் பொய் சொன்னதுபோல வன்று. **இடையிலே.** தமக்கும் ஆபிரகாமுக்கும் இடையிலே. மல்கி. 3. 6. அன்றி, ஏசா. 46. 10, 11; சங். 33. 11; யாக். 1. 17 காண்க. **இடையிலே மு.** ஓர் ஆணையைப் **புணைவைத்தார்** என்றும் மொழி பெயர்க்கலாம்.

18. இந்த வாக்கியத்தை: **கடவுள் பொய் உரைக்கமாட்டாத இரண்டு மாறாத காரியங்களினாலே நம்மெதிரில் வைத்திருக்கும் கோரிக்கையை அடைக்கலமாகப் பற்றிப் பிடிக்க ஓடிவந்த நமக்குப் பலத்த உற்சாகம் உண்டாகும்படி** என மாற்றவும். பொய்யுரைக்க மாட்டாத கடவுளுக்குப் பொய் ஒன்றுதவிர, வேறொன்றும் கூடாத காரியமன்று என்று பரி. கிலெமென்ட்ஸ் சொல்லுகிறார். தீத்து 1. 2; எண். 23. 19 காண்க. **இரண்டு காரியங்கள்**: அவை கடவுள் ஆணையும் அவர் வாக்குமே. **கோரிக்கை** இங்கு ஆறு அடைக்கலப்பட்டணங்களில் ஒன்றுக் கொப்பிடப்படுகிறது. அதுகாரணத்தினாலேயே நாம் அதனிடம் **ஓடிவந்த** பாவனை காட்டியிருக்கிறது. **கோரிக்கை.** கோரின காரியத்துக்கு ஆகுபெயர். அதி. 10. 23; கொலோ. 1. 5 காண்க.

பழிபாவத்துக்குள் அகப்பட்ட ஒருவன் முன்னாளில் அடைக்கலப்பட்டணம் ஓடி ஆதரவடைந்ததுபோல், இம்மையில் நமக்கு நேரிடும் சிறிதும் பெரிதுமான பல துன்பங்களிலே கோரிக்கையானது நமக்கு ஆறுதலளிக்கும் ஓர் அடைக்கலம். பாலியருக்கு எப்போதும் கோரிக்கையுண்டு. இது அவர்களுக்கு எந்நாளும் உபபலம். வயது செல்லச்செல்ல கோரிக்கையும் வலிகுறைந்துபோகிறது. ஆவிக்குரிய கோரிக்கைக்கு நம்பிக்கைக்குரிய வலியும் உறுதியுமுண்டு. பக்தர்களைக் குரல்கொடுத்தழைக்கும் நேசன்போன்றது. காரிருளில் காணும் சிறிய ஒரு சுடர்போன்றது; அதைக் கண்டஉடனே மனதிலிருக்கும் துக்கமும் திகிலும் அகன்றுவிடுகிறது.

19. இந்த வாக்கியத்தை: **நிச்சயமும் நிலைபெற்றதும் திரைக்குள் இருப்பதிற் பிரவேசிக்கிறதுமான (கோரிக்கையாகிய) இந்த ஆத்ம நங்கூரம் நமக்குண்டு** எனத் திருத்தவும் இது கலப்பணி. திரையும் நங்கூரமும் கலந்தது. நாம் கப்பல் அல்லது மரக்கலம். நமக்கு நிச்சயமும், உறுதிநிலையும், திரைக்குள் நுழையும் திறமையும் பெற்ற நங்கூரம் நமது கோரிக்கை. அதன் ஒருமுனை நமக்குள்ளும் மறுமுனை மகாப் பரிசுத்தஸ்தலமாகிய கிருபாசனமுமானவை. ரோம. **15. 13**—இலே கடவுள் "கோரிக்கையின் கடவுள்" என்று சொல்லியிருக்கிறது. திரையைப்பற்றி யாத். **26. 31. 35**; அதி. 10. **20**; மத்.

27. 51 காண்க. *கிறிஸ்தவர்களின் நங்கூரமாகிய கோரிக்கையானது ஆகாயக்கடலை அளாவிக்கடந்து நம்மைக் கடவுளின் திருச்சரணம் புகச்செய்கின்றது.*

20. *அணியைப் பின்னும் விளக்குகிறார். வாக்கியத்தை:* **அதற்குள்ளே, மெல்கிசேதேக்கு முறைமையின்படி நித்ய பிரதான ஆசாரியாயிருக்கிற இயேசு முன்னோடினவராய் நமக்காகப் பிரவேசித்தார்** *எனத் திருத்துக.* **அதற்குள்ளே.** *நங்கூரம் நுழைகிற அந்தத்திரைக்குள்ளே; பிரதான ஆசாரியன்மாத்திரம் வருஷத்துக் கொருமுறை பிரவேசிக்கக்கூடிய அந்த மகாப் பரிசுத்த ஸ்தலத்திற்குள்ளே.* **மெல்கிசேதேக்கு** *இந்நிருபத்தின் மையப்பொருள் என்னலாம். நியாயத்தொடர்ச்சி முழுவதும் அதைச்சுற்றிச் சுழல்கின்றது. அதி. 5. 10-இல் ஆரம்பித்த விஷயத்தை போதனைக்காகவும் புத்திமதிக்காகவும் 6-ம் அதிகாரம்வரையிலும் நிறுத்தி, இப்பொழுது விரித்துரைக்கத் தொடங்குகிறார். இந்த ஆறு அதிகாரங்களையும் முகவுரையெனக் கூறலாம்.* **முன்னோடி.** *இது எம்பெருமானுக்கு நலமான நாமம். யோவான்ஸ்நானன் அவருக்கு முன்னோடியாயிருந்த விதமாயல்ல. உயிர்த்தெழுந்தவர்களுக்கு இரட்சகர் "முதற்கனி"யா யிருப்பதுபோல, மகாப் பரிசுத்தஸ்தலத்தில் முதல் முதல் தமது சொந்த உதிரத்துடன், அதாவது, புண்ணியத்துடன் பிரவேசித்தவர் நமது மீட்பரே; கிறிஸ்து பரமேறினதும் இதிலடங்கியிருக்கிறது. ஆவிக்குரிய மகாப் பரிசுத்தஸ்தலம் ஒன்றுண்டென்பது இதனால் ஸ்திரமாகிறது. நமக்காக ஓர் இருப்பிடம் ஆயத்தம்பண்ண முன்புப் போயிருக்கிறார். (யோ. 14. 2, 3 காண்க.)*

**இயேசு**—*கிறிஸ்துவல்ல. அதாவது, இங்கு மனுஷீகமும் அதிலே அவர் இயற்றியதும் ஸ்திரப்படுத்தப்படுகிறது. இயேசு சென்றவிடத்தில் கோரிக்கையும் செல்கின்றது. பிரதான ஆசாரியன் புகுந்த ஸ்தலத்தில் அவன் ஜனம் புகவில்லை. இயேசுவின் அடியாரோ அவர் பின்னே அதே இடத்திற்குள் செல்கிறார்கள். இயேசு தமது திருயாகத்தாலும் மரணத்தாலும் பிரதான ஆசாரியனிலும் உன்னதமும் நித்யமுமான ஆசாரியராகி, தேவ வலதுபாரிசத்திற்சென்று வீற்றிருக்கிறார். அருமையான சத்தியங்கள். இவ்விதப் புஷ்டியுணவை அல்லவோ கிறிஸ்தவர்கள் உண்டு பூரண புருஷத்துவம் அடையவேண்டும்.*

# 7. அதிகாரம்.

## அதிகார விஷயம்.

கிரிஸ்து மெல்கிசேதேக்கின் முறைமைப்படி நித்ய பிரதான ஆசாரியர் (1-10). ஆனதுபற்றி அவர் லேவிய பிரதான ஆசாரியனுக்கு மேலானவர் (11. 24): இதை ஏழு காரணங்களினாலே திருஷ்டாந்தப்படுத்துகிறார். (i) ஆபிரகாம் அவருக்குத் தசமபாகம் செலுத்தினார் (4-7). (ii) அவர் ஆபிரகாமை ஆசீர்வதித்தார் (7). (iii) அவர் நித்ய ஆசாரியருக்கு முன் அடையாளமானவர் (8). (iv) ஆபிரகாமின் மூலமாய் இன்னும் பிறவாத லேவியன்கூட அவருக்குத் தசமபாகம் செலுத்ினான் (9. 10). (v) அவனுடைய ஆசாரியத்துவம் கிரிஸ்துவினால் நீடித்து ஒழிந்துவிடலாயிற்று (11-19). (vi) அது ஓர் ஆணையினாலே ஸ்திரப்படுத்தப்பட்டது (20-23). (vii) மரணத்தால் ஒழியாததும், இன்னொருவருக்குச் செல்லாததுமானது (23, 24). முடிவுரை. (25-28.)

7. 1-3.

1 இந்த மெல்கிசேதேக்கு சாலேமின் ராஜாவும், உன்னதமான தேவனுடைய ஆசாரியனுமாயிருந்தான்; ராஜாக்களை முறியடித்துவந்த ஆபிரகாமுக்கு இவன் 2 எதிர்கொண்டுபோய், அவனை ஆசீர்வதித்தான்.—இவனுக்கு ஆபிரகாம் எல்லாவற்றிலும் தசமபாகம் கொடுத்தான்; இவனுடைய முதற்பேராகிய மெல்கிசேதேக்கு என்பதற்கு நீதியின் ராஜா என்றும், பின்பு, சாலேமின் ராஜா என்பதற்குச் சமாதானத்தின் ராஜா என்றும் 3 அருத்தமாம்.—இவன் தகப்பனும் தாயும் வம்சவரலாறும் இல்லாதவன்; இவன் நாட்களின் துவக்கமும் ஜீவனின் முடிவுமுடையவனாயிராமல், தேவனுடைய குமாரனுக்கு ஒப்பானவனாய் என்றென்றைக்கும் ஆசாரியனாக நிலைத்திருக்கிறான்.

1. **இந்த மெல்கிசேதேக்கு.** இந்த எழுவாய்க்குப் பயனிலை "என்றென்றைக்கும் ஆசாரியனாக நிலைத்திருக்கிறான்" என்பது (வா. 3). ஆகையால், இம்மூன்று வசனங்களும் ஒரே வாக்கியம், இடையில் வருவனவெல்லாம் எழுவாய்க்கு அடைமொழிகள். இவை

முழுவதையும் ஒரே வாக்கியமாக முடித்தால்தான் பொருள் நன்ருய் விளங்கும். அவ்வாறு முடித்தல் கடினமாதலால், சிறுசிறு வாக்கிய மாக மொழிபெயர்த்திருக்கிறது. ஆகிலும், இதில் நான் திருத்தி யிருக்கிற முழுவாக்கியத்தையும் பின்வருமாறு காண்க: **சாலேமின் அரசனும்** மஹா உன்னதமான கடவுளின் ஆசாரியனும், அரசர்களைத் தோற்கடித்துத் திரும்பிய ஆபிரகாமைச் சந்தித்து ஆசீர்வதித்து, அவ ஞல் யாவற்றிலும் பத்திலொருபாகம் கொடுக்கப்பெற்றவனும்— முதற்பேரின் அர்த்தப்படி நீதிக்கரசனென்றும், பின்பு சமாதானத் துக்கரசனுகிய சாலேமின் அரசனென்றும் பேர்பெற்று, தந்தைதாயும் வம்சவரலாறும், நாள்கள் ஆரம்பமும் ஜீவியமுடிவும் இல்லாதிருந்தும் கடவுள் குமாரனுக் கொப்பானவனுமாகிய இந்த மெல்கிசேதேக்கு **நித்ய ஆசாரியனுய் நிலைத்திருக்கிறன்**. மெல்கிசேதேக்கின் வர லாற்றை ஆதி. 14. 18, 19, 20-இலே காணலாம். ஈராயிர வருஷச் சரித்திரத்தில் அவன் ஒரேதடவைமாத்திரம் — சங். 10-4-இலே சொல்லப்பட்டிருக்கிருன். இந்த ஏழாம் அதிகாரம் இந்த இரண்டு வரலாற்றுகளுக்கும் ஞான உரையாயிருக்கிறது. யூதர்கள்கூட மெல் கிசேதேக்கை நோவாவின் புத்திரனுகிய சேம் என்றெண்ணிக் கனம் பண்ணினுர்கள்; பீலோ என்பவரும் அவனை வார்த்தையானவருக்கு அறிகுறியாகக் கூறியிருந்தார்.

**சாலேமின் அரசன்**. சாலேம் சீகேமுக் கருகேயிருந்த ஓரூர். ஆதி. 33. 18-இலும், யோ. 3. 23-இலும் சொல்லியது அதுவே. யெரோம் என்றவர் இப்படியே எண்ணினுர். அது இருந்த இடத்தில் இப்பொழுது பாழ்க்கிணறு ஒன்று காட்டப்படுகிறது. யெரோமின் காலத்திலோ மெல்கிசேதேக்கின் அரண்மனைப் பாழ்கள் காட்டப்பட் டனவாம். அன்றி, சாலேம் எருசலேமுக்கு இன்னெரு பெயரானமை யால், சிலர் இந்த நகரமே அவனுடைய ஊர் என்கிருர்கள். ஆயினும் எருசலேம், ஆரோனின் ஆசாரியர் ஊழியஞ்செய்த ஸ்தலமாகையால் அவ்வபிப்பிராயம் பொருந்தாது. **மஹா உன்னதமான கடவுளின் ஆசாரியன்**—அரசன் தொழிலும் ஆசாரியத்தொழிலும் ஒரே புருஷ னிற் பொருந்தியிருப்பது அருமை. மெல்கிசேதேக்கு ஆபிரகாமுக் கினத்தானேயல்ல. கானுன் நாட்டிலிருந்த ஓர் அரசன். அவன் மெய்க்

கடவுளை அறிந்து வணங்கி அவருக்காசாரியனுமாயிருந்தது ஆச்சரியமே. ஆதலால், யூதர், கிரிஸ்தவர் அல்லாதவர்களும் மெய்க்கடவுளைத் தொழுபவர்களாய்ப் பூர்வத்திலும் தற்காலத்திலும் இருப்பது நிஜமாகிறது. வார்த்தையாகிய கிரிஸ்து உலகத்தில் உடலெடுக்கும் ஒவ்வொருவனையும் பிரகாசிப்பிக்கிறவரானதால், கடவுள் ஞானம் சமஸ்த பக்தருக்கும் சாதாரண பாத்தியமாகிறது. ஆதாம் முதல் நோவா ஈருக நெடுநாள் ஜீவித்த முற்பிதாக்கள் மெய்க்கடவுளைப்பற்றிய ஞானத்தை உபதேசித்துத் தம் பின் சந்ததியாரிடத்தில் அவ்வறிவு பரவும்படிச் செய்தார்கள். இவ்வாறு இந்துதேசம் பினிசியா எகிப்து முதலான நாடுகளில் ஏக தெய்வவணக்க முண்டாயிருந்தது. மெல்கிசேதேக்கு மெய்க்கடவுளை வழிபட்ட ஆசாரியன். சகரியா. 6. 13.

தோற்கடித்து. சீனேக் அரசன் அம்ராபேலுக்கும் சோதோம் அரசன் பீராவுக்கும் சண்டை உண்டாயிற்று. அம்ராபேலுக்கு மூன்று துணைவரும் பீராவுக்கு நாலு துணைவரும் சேர்ந்து போர்புரிந்து, பீராவைத் தோல்வித்துக் கொள்ளையடித்துக்கொண்டு போய்விட்டார்கள். சிறைபிடிக்கப்பட்டவர்களில் ஆபிரகாமின் மருமகன் லோத்து என்பவன். அதுகண்டு ஆபிரகாம் தன் 318 பணியாட்களையும், 3 கானானிய அரசர்களையும் கூட்டிக்கொண்டுபோய், தமஸ்கு ஊர் அருகில் அம்ராபேலைத் தோற்கடித்து, லோத்தை விடுதலைசெய்து, கொண்டுபோன கொள்ளையையெல்லாம் எடுத்துக்கொண்டு திரும்பிவருகையில் மெல்கிசேதேக்கு அவனை எதிர்கொண்டு சென்று சந்தித்து ஆசீர்வதித்தான். மெய்க்கடவுளினடியார் ஒருவரையொருவர் உடனே அறிந்து பரஸ்பரசினேகம் பாராட்டினார்கள். பெரியோர் சிறியோரை வாழ்த்துகிறதுபோல ராஜ குருவானவன் சாமானிய கனவானை வாழ்த்தினான். ஆபிரகாம் அவனுக்குப் பத்திலொன்று காணிக்கை செலுத்தினார். யுத்தக்களம் மெல்கிசேதேக்கின் சமஸ்தானத்தைச் சேர்ந்ததாயிருக்கும். வெற்றியடைந்து களைத்திருந்த போர்வீரருக்கு அவன் அப்பமும் ரசமும் அளித்தான்.

2. மெல்கிசேதேக்கு என்கிற பதத்துக்கு நீதிக்கரசனென்று பொருள். முதல் நீதி, பிறகு சமாதானம். அவர் நீதிக்கும் சமாதானத்துக்கு மரசனென்று நிருபாசிரியர் ஞான உரைசெய்கிறார். சங். 72.

7; 85. 10-உம்; ரோ. 5. 1—உம் காண்க. ஏசா. 32. 1-இலே, "இதோ ஒரு இராஜன் நீதியாய் ஆளுவார்" என்றிருக்கிறது. மேசியா வுக்கு இவ்விரண்டு பட்டங்களும் சூட்டியிருக்கிறது. எரே. 23. 6; ஏசா. 9. 6 காண்க. கிறிஸ்துவுக்கு மெல்கிசேதேக்கு தகுதியான முன்னடையாளமானவன். அவன் ராஜ ஆசாரியனாய் விளங்கி, ஆபிரகாமை ஆசீர்வதித்து, மிருகபலிகள் இடாத நித்யமான ஆசாரியன். ஏசா. 32. 17; எபே. 2. 14, 15, 17; ரோ. 5. 1 காண்க. "இந்த மெல்கிசேதேக்கு" முதற்பிரதான ஆசாரியனாகிய ஆரோனுக்கு எத்தனையோ நூற்றாண்டுக்கு முற்பட்டவன்.

3. பெற்றார் உற்றாரின் குலகோத்திரங்கள், குருப்பரம்பரை முதலிய யாவற்றுக்கும் மேம்பட்டவன். இந்தக் காரணத்தினாலே அவன் தேவகுமாரனாகிய இயேசுவுக்குத்தகுதியான முன்னடையாளமானவன். இயேசுவாகிய மனிதகுமாரனுக்குத் தாயார் மரியாளும், தத்துத்தகப்பன் யோசேப்புமாயினும், கிறிஸ்துவாகிய தேவகுமாரனுக்குத் தந்தையுமில்லை தாயுமில்லை "அவர் சந்ததியை யார் அறிவிக்கக்கூடும்?" அனாதி காலமாய்ப் பிதாவின் மடியிலிருந்த வார்த்தையாயிற்றே. ஆதித்திருச் சபையிலே மரியாளை தேவமாதா என்றழைத்ததே கிடையாது. **நாள்கள் ஆரம்பமும் ஜீவிய முடிவும்**—இல்லாதவன். அதாவது, அவனது பிறப்பிறப்பு சொல்லப்படவில்லை. மற்றப்படி அவன் பிறப்பின்றித் தோன்றினவனும் இறப்பின்றி மறைந்தவனுமான அற்புதப்புருஷனாக எண்ணப்படும். இது அசாத்தியமானது. கிறிஸ்து தாமே பிறந்திறந்தார். இந்தச் சங்கதிகளினாலே அவனுடைய வரலாறு திடீரென உரைத்திருக்கிறது என்பது மாத்திரம் குறித்திருக்கிறது. இதுகள் அவனைக் கிறிஸ்துவுக்குத்தக்க ஓர் அடையாளமாகச் செய்கிறதேயன்றி, மற்றப்படி அவனுக்கு யாதொரு அபௌருஷயமான அற்புத லட்சணங்களைக் கொடுக்கவில்லை. இவ்வரலாறு, அவன்பேரிலே, கிறிஸ்துவுக்கேற்க, ஒருவிதமான நித்திய நிழலிடுகிறது.

7. 4-10.

4 இவன் எவ்வளவு பெரியவனாயிருக்கிறான் பாருங்கள்; கோத்திரத் தலைவனாகிய ஆபிரகாம் முதலாய் கொள்ளையிடப்பட்ட பொருள்களில் இவனுக்குத் தசம

5 பாகம் கொடுத்தான்.—லேவியின் புத்திரரில் ஆசாரியத்துவத்தை அடைகிறவர்களும், ஆபிரகாமின் அறையிலிருந்து வந்த தங்கள் சகோதரரான ஜனங்களின் கையிலே நியாயப் பிரமாணத்தின்படி தசமபாகம்
6 வாங்குகிறதற்குக் கட்டளை பெற்றிருக்கிறார்கள்.—ஆகிலும், அவர்களுடைய வம்சவரிசையில் வராதவனாகிய இவன் ஆபிரகாமின் கையில் தசமபாகம் வாங்கி, வாக்
7 குத்தத்தங்களைப் பெற்றவனை ஆசீர்வதித்தான்.—சிறியவன் பெரியவனாலே ஆசீர்வதிக்கப்படுவான், அதற்
8 குச் சந்தேகமில்லை.—அன்றியும், இங்கே, மரிக்கிற மனுஷர்கள் தசமபாகம் வாங்குகிறார்கள்; அங்கேயோ, பிழைத்திருக்கிறான் என்று சாட்சிபெற்றவன் வாங்கி
9 னான்.—அன்றியும், மெல்கிசேதேக்கு ஆபிரகாமுக்கு எதிர்கொண்டு போனபோது, லேவியானவன் தன்
10 தகப்பனுடைய அறையிலிருந்தபடியால்,—தசமபாகம் வாங்குகிற அவனும் ஆபிரகாமின் மூலமாய்த் தசமபாகம் கொடுத்தான் என்று சொல்லலாம்.

4. வாக்கியத்தைப் பின்வருமாறு மாற்றவும்: **பிதாமகனான** ஆபிரகாமிடத்திலும் முக்கிய கொள்ளைப்பொருளில் தசமபாகம் கொடுக்கப்பெற்ற இப்புருஷன் எத்தனைப் பெரியவனென்பதை இப்பொழுது கவனியுங்கள். மெல்கிசேதேக்கின் ஆசாரியத்துவம் ஆரோனின் ஆசாரியத்துவத்துக்கு ஏழு விஷயங்களிற் சிறந்தது. இங்கு **முதற் சிறப்புக்** கூறியிருக்கிறது. ஆபிரகாம்கூட அவனுக்குப் பத்திலொன்று கொடுத்தான். கிரேக்கிலே இந்த வாக்கியம் மிகவும் நேர்த்தியாய் ஒலிக்கின்றது. **இப்புருஷன்.** மெல்கிசேதேக்கு. அப். 2. 29; 7. 8, 9 காண்க.

5. **ஆசாரியத்துவத்தை.** ஆசாரிய உத்தியோகத்தை எனத் திருத்தவும். கிரேக்குச் சாஸ்திரி ஆரிஸ்டாட்டில் என்பவர் ஆசாரியத்துவத்துக்கு "தேவர்களைப்பற்றிய கவலை" எனப் பயன் கூறியிருக்கிறார். ஆசாரியனைத் தெய்வப் பணிவிடைக்காரன் என்றும் சொல்லலாம். **அடைகிறவர்கள்**—பெறுகிறவர்கள். **ஆபிரகாமின் — கையிலே மூ. ஜனங்களிடத்தில்—அதாவது, ஆபிரகாமின் அறையிலிருந்து தோன்றிய தங்கள் சகோதரர்களிடத்தில் சட்டப்படி தசமபாகம் வாங்கக்**

**கட்டளை பெற்றிருக்கிறது** மெய்தான். பூர்வவழக்கமென்னவென்றால், லேவியர் ஜனங்களிடத்தில் வாங்கி, வாங்கினதில் பத்திலொன்று ஆசாரியருக்குக் கொடுப்பார்கள். எண். 18. 22–26; நெகே. 10. 35 காண்க. இங்கே ஆசாரியர்கள் நேராய் வாங்கினார்களென்று பொது வாய்க் கூறியிருக்கிறது. அப்படி வாங்க அவர்களுக்கு அதிகாரமிருந் தது. **அரையிலிருந்து** ஒ—எபிரேய நடைவழக்கு. ஆதி. 35. 11. லேவிய ஆசாரியரின் முறைமையோடு மெல்கிசேதேக்கின் முறை மையை ஒத்துக் காட்டுகிறார்.

6. **ஆயினும்—இவன்.** இதை ஆகிலும், **அவர்கள் வமிச வரிசையில் எண்ணப்படாதவனாகிய இவனே**—எனத் திருத்தவும். ஒவ் வொரு யூதனும் தன் வமிச வரிசையை மனப்பாடம் பண்ணிக்கொள் வான். பிராமணரும் பெரும்பாலும் தங்கள் கோத்திர வரிசையை எழுதிவைப்பார்கள். மெல்கிசேதேக்கு லேவிய வமிசத்தைச் சேராத வன். அது உண்டாக ஐந்நூறு வருஷத்துக்கு முந்தியிருந்தவனாயிற்றே! இது புதுமையல்லவா? சகல சட்டத்துக்கும் மேலானதாயிற்று. **ஆபிரகாமின் கையில்**-ஆபிரகாமிடத்தில் வாக்குத்தத்தங்களைப் **பெற்றவனை ஆசீர்வதித்திருக்கிறானே!** இது இரண்டாம் சிறப்பு. இந்த ஆசீர்வதிக் கும் சக்தி அல்லது பயன் இதுவரையுமுள்ளது என்பது நிருபாசிரிய ரின் கருத்து.

7. **சிறியவன்.** அல்லது குறைந்தவன். வாக்கியத்தை: **ஆனால் உயர்ந்தவன் தான் தாழ்ந்தவனை ஆசீர்வதிப்பான், இதை யாரும் ஆக்ஷேபியார்கள்** என மாற்றலாம். ஆசீர்வதித்தல் ஆசாரியத்தொழில் களிலொன்று. எண். 6. 23–26 காண்க. அதி. 12. 13; மத். 12. 41; 2 தெச. 2. 6; யோவா. 6. 37 காண்க. இது உலகமெங்கும் நடக்கிற காரியம். இத்தேசத்திலே இம்மரியாதை ஒழுங்கை விசேஷ மாகப் பார்க்கலாம். நீலகிரியிலிருக்கும் தோடர்ப்பெண்கள் குனிந்து ஆண்பிள்ளையின் பாதத்தை முத்தமிடுவார்கள். பெற்றோர் பிள்ளை களையும், குரு சிஷ்யனையும், மூத்தோர் இளைஞரையும் ஆசீர்வதிக்கி றது சாதாரணம்.

8. இப்பொழுது இன்னுமொரு பேதத்தை விளக்குகிறார். **இங்கே** அதாவது, இந்த **ஏற்பாட்டிலே;** லேவியர் கருமானுஷ்டானங்கள் அநு

சரித்து வரப்பட்ட இக்காலத்தில் எ-று. **மரிக்கிற மனுஷர்**—மரணத்துக்குரியவர்கள்; லேவியர், ஆசாரியர்களைக் குறித்தது. **அங்கேயோ.** அதாவது, லேவியருக்கு முற்பட்டதும் மேலான சிறப்புடையதுமான அந்தத் தனிவிஷயத்தில்; மெல்கிசேதேக்கு ஆபிரகாமைச் சந்தித்த சந்தர்ப்பத்தில். **பிழைத்திருக்கிறான்**—நித்ய ஆசாரியனாக நிலைத்திருக்கிறானென்று சொல்லப்பட்ட (வாக். 3 காண்க.) மெல்கிசேதேக்கு. **சாட்சிபெற்றவன்**—வேதவாக்கியத்தில், ஆதியாகமத்திலும் சங்கீதத்திலும் என்றும் ஜீவித்திருப்பவனாகச் சாட்சிபெற்றவன். முன்னதில் பிறப்பிறப்புக் கூறாமையால் நிருபாசிரியர் 110-ம் சங்கீத ஆதாரங்கொண்டு பிழைத்திருக்கிறவன் என்று கூறுகிறார். இது மூன்றாம் சிறப்பு.

9. **எதிர்கொண்டுபோன.** சந்தித்தபொழுது. **தகப்பன்**—அதாவது, முற்பிதாவின். **அரையிலிருந்தபடியால் முன்போல**—லேவியர் ஆபிரகாமின் சந்ததியார். ஆபிரகாம் காணிக்கை செலுத்தினது, தாங்கள் செலுத்தினதுபோலவே.

10. **அவனும்.** அவன் தானும் என்றால் உறுதிபெறும். **கொடுத்தான்.** செலுத்தினான், அல்லது கட்டினான் என்று திருத்தவும். லேவியர் மெல்கிசேதேக்குக்குப் பத்திலொன்று கட்டினது நான்காம் சிறப்பு.

7. 11-19.

11 அல்லாமலும், இஸ்ரவேல் ஜனங்கள் லேவிகோத்திர ஆசாரிய முறைமைக்கு உட்பட்டிருந்தல்லவோ நியாயப்பிரமாணத்தைப் பெற்றார்கள்; அந்த ஆசாரிய முறைமையினாலே பூரணப்படுதல் உண்டாயிருக்குமானால், ஆரோனுடைய முறைமையின்படி அழைக்கப்படாமல், மெல்கிசேதேக்கினுடைய முறைமையின்படி அழைக்கப்பட்ட வேறொரு ஆசாரியர் எழும்பவேண்டுவதென்ன?—

12 ஆசாரியத்துவம் மாற்றப்பட்டிருக்குமேயானால், நியாயப்பிரமாணமும் மாற்றப்பட வேண்டியதாகும்.—

13 இவைகள் எவரைக்குறித்துச் சொல்லப்பட்டிருக்கிறதோ, அவர் வேறொரு கோத்திரத்துக்குள்ளானவராயிருக்கிறாரே; அந்தக் கோத்திரத்தில் ஒருவனாகிலும்

14 பலிபீடத்து ஊழியம் செய்ததில்லையே.—நம்முடைய

கர்த்தர் யூதா கோத்திரத்தில் தோன்றினாரென்பது பிரசித்தமாயிருக்கிறது; அந்தக் கோத்திரத்தாரைக் குறித்து மோசே ஆசாரியத்துவத்தைப்பற்றி ஒன்றும் சொல்ல
15 வில்லையே.—அல்லாமலும், மெல்கிசேதேக்குக்கு ஒப்பாய் வேறொரு ஆசாரியர் எழும்புகிறார் என்று சொல்லியிருப்பதினால், மேற்சொல்லியது மிகவும் பிரசித்தமாய்
16 விளங்குகிறது.—அவர் மாம்ச சம்பந்தமான கட்டளையாகிய நியாயப்பிரமாணத்தின்படி ஆசாரியராகாமல்,—
17 நீர் மெல்கிசேதேக்கின் முறைமையின்படி என்றென்றைக்கும் ஆசாரியராயிருக்கிறீர் என்று சொல்லிய சாட்சிக்குத் தக்கதாக அழியாத ஜீவனுக்குரிய வல்லமையின்படியே ஆசாரியரானார்.
18 முந்தின கட்டளை பெலவீனமுள்ளதும் பயனற்றது
19 மாயிருந்ததினிமித்தம் மாற்றப்பட்டது. நியாயப்பிரமாணமானது ஒன்றையும் பூரணப்படுத்தவில்லை, அதிக நன்மையான நம்பிக்கையை வருவிப்பதோ பூரணப்படுத்துகிறது; அந்த நம்பிக்கையினாலே தேவனிடத்தில் சேருகிறோம்.

11. **அல்லாமலும்.** இப்பொழுது எனத் திருத்தவேண்டும். **இஸ்ரவேல் ஜனங்கள்**—மூலத்திலே இஸ்ரவேல் இல்லை. **ஜனமானது** (லேவிய ஆசாரியத்துவத்தின்பேரில் சட்டம்பெற்ற காரணத்தால்) அதன் மூலமாய் அதற்குப் பூர்த்தி உண்டாயிருக்குமானால், ஆரோனின் வரிசைப்படி வராமல், மெல்கிசேதேக்கின் **முறைமையின்படி** இன்னொரு **ஆசாரியர்** எழும்பவேண்டிய பின்னுமோர் **அவசியம்** யாது? என வாக்கியத்தை மாற்றிக்கொள்ளலாம். மெல்கிசேதேக்கைப்பற்றிய முக்கிய நியாயத்தை இதிலும் பின்வரும் எட்டு வாக்கியங்களிலும் நன்கு விளங்க எடுத்துரைக்கிறார். நியாயப்பிரமாணமாகிய சட்டம் லேவிய ஆசாரியத்துவமாகிய அஸ்திபாரத்தின் பேரில் எழுப்பப்பட்டது. இவ்விரண்டின் நோக்கம் இஸ்ரவேல் ஜனமாகிய ஆதிச்சபையை குணத்திலும் நடத்தையிலும் பூரணப்படுத்துவதே. அப்படிப் பூர்த்திசெய்ய அவற்றாலாகாதெனக் கடவுளுக்குத் தெரிந்துதான் தமது குமாரனை உலகத்திலனுப்பினார். லேவிய ஆசாரியத்துவமானது அவர்களைப் பூரணப்படுத்தாமையால், அதனுடன் எவ்

வளவும் சம்பந்தப்படாத வேறொரு ஆசாரியனை—அதாவது, எம்பெரு மானைத்—தோன்றச்செய்து அவர்களைப் பூரணப்படுத்த அத்தியாவசிய மாயிற்று. ஆயினும் பவுலப்போஸ்தலன் உரைக்கிறபிரகாரம் சட்ட மானது நல்ல ஒரு உபாத்தியாயராகி அவர்களைக் கிறிஸ்துவினிடம் கொண்டுபோய்ச் சேர்ப்பித்தது. அதன் கண்ட தண்டனைகளினாலும் கண்டிப்பான முறைமைகளினாலும், சடங்காசாரங்களினாலும், அவற் றுடன் கலந்திருந்த ஞானோப தேசங்களினாலும், பற்பல முன்னுரை களினாலும் அவர்கள் குறைவுகளை அவர்களுக்குணர்த்தி, நிறைவு செய்கிற நீதிசொரூபனை நோக்கிப் பிழைக்கக் கற்பித்தது. சட்டம் செய்யமாட்டாததைச் சற்குரு செய்து முடித்தார். ஆரோன் வமிசத் தாசாரியன் இயற்றமாட்டாத பூர்த்தியை மெல்கிசேதேக்கு முறையில் வந்த நித்திய பிரதான ஆசாரியர் இயற்றி முடிக்கிறார். அவர் வர, ஆசாரியன் போகிறான்; பொருள் உதிக்க நிழல் மறைகிறது. குறிக் கப்பட்டது தோன்றக் குறிப்புகள் யாவும் நீங்கின. இனி இஸ்ரவேல் சபையார் பழையவைகள் யாவற்றையும் விட்டுவிட்டு, நித்ய பிரதான ஆசாரியனை நம்பிப் பிழைக்கவேண்டுமென்பதே இந்தநியாயப்போங்கு. கலா. 2. 21 காண்க. அதி. 10. 1–14 ஒத்து வாசிக்க. இது ஐந்தாம் சிறப்பு: லேவியர் முறைமை ஒழிந்து, மெல்கிசேதேக்கு முறைமை ஏற்பட்டது.

12. **ஆசாரியத்துவம் மாற்றப்பட, சட்டமும் மாற்றப்படுதல் அவ சியமாகிறது** என வாக்கியத்தை மாற்றிக்கொள்ளலாம். இங்கே **மாற்றப்படுகிறது** என ஆரம்பித்தவர், நியாயம் முடிக்கிற 18–ம் வசனத்திலே **ஒழிக்கப்படுகிறது** — என உறுதிப்படக் கூறுகிறார். நிருபாசிரியர் நியாய வழிப்பாடுகளிலே மிக்கத் தேர்ந்தவர். நியாயத் தைச் சிறிது சிறிதாக உறுதிப்படுத்துகிறார். ஆரம்பத்தில் அமர்ந்த மொழிகளை உரைத்துப் பின்பு கடினபதங்களை உபயோகித்தல் நியாய சாஸ்திரிகளுக்கு நல்ல லட்சணம். ஆசாரியர் சட்டத்துக்கிசைய சபையை ஆண்டுவந்தார்கள். நித்ய ஆசாரியர் அன்பினாலே அர சாளுகிறார். நமக்கு வேறொரு சட்டம் கிடையாது. சட்டமென்கிற சங்கிலி சிலுவையிலே அன்பென்னும் அக்கினியினால் தகிக்கப்பட் டது. இப்பொழுது நமக்கு அன்பொன்றே சட்டம், ஆசாரியன்

ஒழிய, சட்டமும் ஒழிந்தது. இரண்டும் ஒன்றோடொன்று இணை பிரியாச் சம்பந்தமுள்ளவை.

13. கிரேக்கிலே இது ஒரே வாக்கியம். இங்கே அதை மூன்ருகப் பிரித்து மொழிபெயர்க்க அவசியம் காணும். இவைகளால் குறிக்கப்பட்டவர், தன்னைச்சேர்ந்த ஒருவனும் பலிபீடத்தண்டை சேவியாத வேறொரு கோத்திரத்தைச் சேர்ந்தவராயிற்றே—எனத் திருத்த வேண்டும். ஆசாரிய அனுஷ்டானங்கள் லேவியருக்கு மாத்திரம் உரியவை. உபா. 10. 8; எண். 3. 5–8. யூதாக் கோத்திரத்தாருயிருந்த உசியாவென்ற அரசன் ஆசாரியத் தொழில்புரிந்து அதிகமாய்த் தண்டிக்கப்பட்டான். 12–ம் வாக்கியம் கிளைவாக்கியம். இவ்வாக்கியத்து நியாயம் 11–ம் வாக்கியத்தில் தொடங்கியது. மூலத்தைக் கூர்ந்து வாசித்தால், "வேருெரு கோத்திரத்தில் உதித்தவராயிற்றே" என்றர்த்தப்படுகிறதாகக் காண்கிறது. வேருெரு கோத்திரத்தைப் பற்றி அடுத்த வாக்கியத்தை வாசித்துத் தெளியுங்கள்.

14. **நம்முடைய கர்த்தர்**. எம்பெருமானெனிற் சிறக்கும். **யூதாக் கோத்திரத்தில்**—ககரம் இரட்டிக்கவேண்டும். புதிய ஏற்பாட்டிலே இயேசுவுக்கு "நம்முடைய கர்த்தர்" என்கிற பட்டம் தனியாய்ச் சூட்டப்படுகிறது இதுதான் முதல்தடவை. தற்காலம் இது திருச்சபையிலே நாடோடிய தொடர்மொழியாயிருக்கிறது. பவுலப்போஸ்தலன் நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து என்கிறது சாதாரணம். **தோன்றினுர்**—இது வழக்கமாய்ச் சூரியோதயத்துக்கும் (மல். 4. 2; லூக். 12. 54; 2 பேது. 1. 19.). செடி முளைத்தலுக்கும் (சக. 3. 8; 6. 12. மு.) வழங்கியது. யூதாக் கோத்திரத்துக்கு ஆதி. 49. 10; ஏசா. 11. 1; லூக். 3. 33 காண்க. வெளி. 5. 5-இலே "யூதாக்கோத்திரத்தின் சிங்கம்" எனச் சொல்லியிருக்கிறது. **மிகவும் பிரசித்தமாயிருக்கிறது. அந்தக் கோத்திரத்தைக் குறித்து. அந்தக் கோத்திர விஷயமாய்** எனத் திருத்தவும். **ஆசாரியத்துவத்தைப்பற்றி ஆசாரியர்களைப்பற்றி** எனத் திருத்தவும். **பரிஷ்காரமாயிருக்கிறது** என்ருலுமே போதும்.

15–17. இந்த வாக்கியமும், 16, 17-ம் வாக்கியங்களும் ஒரே வினைமுற்றுக்கொண்டு முடியவேண்டும்; அவ்வாறு முடிந்தால்தான்

பொருளும் நியாயப்போக்கும் நன்கு விளங்கும். அதைப் பின்வரு மாறு காண்க: (15) அன்றியும், மெல்கிசேதேக்குக்கு ஒப்பாய் இன் னொருவர் எழும்பி, (16) மாமிச சம்பந்தமான கட்டளையின் சட்டப்படி யல்ல, முடிவில்லாத ஜீவியத்துக்குரிய சக்தியின்படி ஆசாரியராஞ ரென்பது இன்னும் அதிக பரிஷ்காரமாயிருக்கிறது; (17) "நீர் மெல் கிசேதேக்கின் முறைமையின்படி என்றென்றைக்கும் ஆசாரியரா யிருக்கிறீர்" என்றவனைக் குறித்துச் சாட்சி பகர்ந்திருக்கிறதே.

**மாமிச சம்பந்தமான.** பிரிதிவி சம்பந்தமான. பவுல் அப்போஸ் தலன் குறிப்பிடுகிற தேக இச்சைகளாகிய மாமிசமன்று; சரீரத்துக் குரிய புறம்பான சடங்காசாரங்கள் குறிக்கப்படுகின்றன. **முடிவில் லாத.** அழியாத—என்றும் மொழிபெயர்க்கலாம். அப். 3. 15. கிரிஸ்து நித்ய ஆசாரியராயிருக்கிறார்.

**அதிக பரிஷ்காரமாயிருக்கிறது.** எனெனில், (1) மெல்கிசேதேக்கு லேவிக்கோத்திரத்தைச் சேர்ந்தவரன்று; (2) கடவுளாலேயே அபி ஷேகம் பெற்றவர்; (3) ராஜ ஆசாரியர்; (4) ஆரோனின் முறை மைக்கு மிஞ்சின அந்தஸ்துள்ளவர். நமது ஞானசாரியரான கிரிஸ்து ஆரோனின் முறைமையிலே தோன்றாமல், இந்த அரச ஆசாரியரான மெல்கிசேதேக்கின் முறைமையிலே தோன்றினார். அவர் கேவலம் நவமான புருஷோத்தமர்; சட்டத்துக்குரிய ஆசாரியனல்ல, ஞான ஆசாரியர்; சடங்காசாரியரல்ல, ராஜ ஆசாரியர்; தற்கால ஆசாரிய ரல்ல, நித்ய ஆசாரியர்.

18, 19. இவ்விரண்டு வாக்கியங்களையும் பின்வருமாறு மாற்றுவதவ சியம்: (சட்டமானது ஒன்றையும் பூரணப்படுத்தவில்லை); ஆதலால் முந்தின கட்டளையானது பலவீனமும் பயனற்றதுமானதுபற்றி அது ஒழிக்கப்பட்டு, அதற்குப் பதிலாக நம்மைக் கடவுளிடம் அணுகச் செய்கிற அதிலும் நல்லதான ஓர் கோரிக்கை உண்டாயிருக்கிறது. **பூரணப்படுத்தவில்லை** — சட்டம் மூன்று வகைப்படும்: ஒழுங்குச் சட்டம், சடங்குச்சட்டம், நீதிச்சட்டம். முன்னைய இரண்டையும் இஸ்ரவேலர் இயன்றவரையும் நிறைவேற்றிவந்தார்கள். நீதிச்சட்டத் துக்குமாத்திரம் முழுத்திருப்தி செய்ய முடியவில்லை. சட்டமானது, உதாரணமாக, திருடக்கூடாதென்றாலும், ஒருவனைத் திருடாதிருக்கச்

செய்ய முடியாது. ஒருவேளை கை திருடாவிடினும், மனம் திருடும். எம்பெருமான் கண்விபசாரத்தைக் குறித்து உபதேசித்தாரே! சட்டத்திஞலே ஒருவன் பூரண பரிசுத்தம் அடையான்; அதற்குத் தடுக்கிற குணமுண்டே தவிர, திருப்புகிற குணம் கிடையாது. இவ்விஷயத்தில் நிருபாசிரியரும் பவுலப்போஸ்தலனும் ஏக அபிப்பிராயமுடையவர்கள். பூரணமடைய அவுஷதம் பல சட்டங்களல்ல, அன்பே. அன்பே பிரதானம், அதுவே வெகுமானம். **பலவீனமும் பயனற்றதும்**—மேற்காட்டியபிரகாரம் சட்டத்துக்குச் சக்தியுமில்லை, பயனுமில்லை. கேவலம் சக்தியற்றது. ராஜ்ய சமஸ்தான சட்டதிட்டங்களிஞலே, துரோகிகள் தண்டிக்கப்படுகிருர்களே தவிர, யோக்கியர்களாகிறதைக் காணேம். குணத்தை மாற்ற குருவேண்டும். சட்டம் நிஷ்பயனுய்ப் போகிறது. சட்டத்தின் தொழில் உபாத்தித் தொழில். சிறுவர்களைப் பாடசாலைக்குக் கொண்டுபோகிற தாதி போன்றது; ஓர் உதவியாள்மட்டும். கலா. 3. 23, 24; 4. 9 காண்க. சட்டதிட்டங்களைப் பூர்த்தியாய்க் கைக்கொள்ளமாட்டாதவர்கள் பூரணப்பரிசுத்தராக என்ன செய்யலாமென்று ஏங்கிக் கிடந்தார்கள். **ஒழிக்கப்பட்டு**—பயனற்ற சட்டம் மாற்றப்பட்டதன்று; முற்றிலும் நீக்கப்பட்டது. முன்னிருந்த சடங்கானுஷ்டானங்கள் மாத்திரமல்ல, ஒழுங்குச் சட்டங்கள் எல்லாம் ஒழிந்தன. நீதிச் சட்டங்கள் பரஸ்பர அன்பிஞலே ஆழ்ந்த பொருளுள்ளவையாயின. கடவுளிடத்தில் அன்பும், அயலானிடத்தில் அன்புமே பிரதான சட்டமாயிற்று. இந்த அன்புக்குக் கடவுளே கர்த்தர்; அவர் வெளிப்படுத்திய அன்பிலிருந்து இந்தப் புது அன்பு பிறக்கிறது. இதுதான் சுவிசேஷம், அல்லது நற்செய்தி. எம்பெருமான் பரலோகத்திலிருந்து பூலோகத்துக்குக் கொண்டுவந்த தேவாமிர்தம். அரும்பெரும் சக்தியுள்ளது. சட்டதிட்டத்துக்கெல்லாம் மேலானது. சர்வ சக்தியுள்ளது. அது தனக்குத்தானே சட்டம். அன்பின் வழியதுயிர்நிலை. **கோரிக்கை**—இயேசுவின் உயிர்த்தெழுதலால் வருகிற நம்பிக்கை. கடவுளை அணுகச்செய்கிற கோரிக்கை எம்பெருமாஞல் நமக்கருளப்படுகிறது. ரோ. 3. 21; எபே. 2. 13-15 காண்க. சட்டமானது பற்பல சடங்குகளை உலகத்திற் கைக்கொள்ளச் செய்தது; சுவிசேஷத்தின் கோரிக்கையோ

பக்தர்களைத் திரைக்குள்ளே செலுத்தி கடவுள் சந்நிதானத்தில் நிறுத்து கிறது. முந்தியது பூலோகத்துக்குரியது; 1 தீமோ. 1. 18; 5. 24 காண்க. பிந்தியது பரலோகத்துக்குரியது. இங்குக் கோரிக்கை சுவிசேஷத்துக்குப் பரியாயப்பதமாகிறது. சட்டத்தின் பலவீனம் அதி. 9. 6. 9-இலே விரித்துரைத்திருக்கிறது.

**7.** 20-22.

20 அன்றியும், அவர்கள் ஆணையில்லாமல் ஆசாரியராக் கப்படுகிறார்கள்; இவரோ: நீர் மெல்கிசேதேக்கின் முறைமையின்படி என்றென்றைக்கும் ஆசாரியராயிருக் கிறீர் என்று கர்த்தர் ஆணையிட்டார், மனம் மாறாமலும் இருப்பார் என்று தம்முடனே சொன்னவராலே ஆணை
21 யோடே ஆசாரியரானார்.—ஆனதால் இயேசுவானவர் ஆணையின்படியே ஆசாரியராக்கப்பட்டது எவ்வளவு
22 விசேஷித்த காரியமோ,—அவ்வளவு விசேஷித்த உடன் படிக்கைக்குப் பிணையாளியானார்.

20, 21. இனி ஆறும் சிறப்புக் கூறத் தொடங்குகிறார். இது கடவுள் இட்ட ஆணையைப்பற்றியது. வாக்கியத்தை: அவர்கள் ஆணை யின்றி ஆசாரியராக்கப்பட; இவரோ, "கர்த்தர் ஆணையிட்டார், மனமும் மாறார், நீர் சதாகாலமும் ஆசாரியர்" என்று அவரைக் குறித்து உரைத்தவராலே ஆணையுடன் ஆசாரியரானார். போதகர்கள் அபிஷேகம் பெறுகையில் சத்தியம் பண்ணவிடினும், அதற்கு ஒரு வாறு நிகரான பல உறுதிவாக்குரைக்கிறார்கள். அதி. 6. 17 காண்க.

**22.** ஆனதால், இயேசு ஆணையின்றி ஆசாரியராக்கப்படாதது எவ் வளவோ, அவ்வளவும் விசேஷித்த ஓர் உடன்படிக்கைக்காரர் உத்தர வாதியானார். உடன்படிக்கைக்குப் பதிலாக மரண சாதனமென்றும் சொல்லலாம். கடவுள் மனிதரோடு செய்துகொண்ட உடன்படிக்கை இரண்டு: ஒன்று கிரியை உடன்படிக்கை; மற்றொன்று கிருபை உடன்படிக்கை. முந்தியது லேவியர் முறைமைச்சட்டமும் ஆசா ரங்களும்; பிந்தியது நித்ய ஆசாரியராகிய எம்பெருமான் மூலமாய்ச் செய்த நற்செய்தி உடன்படிக்கை. அது ஒரு வகுப்பாருக்குமாத்திரம்; இது சர்வ மானிடருக்கும் உரியது. அதற்கு இதுவே சிறந்தது. கிரிஸ்து இவ்வுலகில் உதித்ததே அவ்வுடன்படிக்கைக்கு அறிகுறி.

அவரது ஆசாரியத்துவம் அதாவது அவர் உதிரஞ்சிந்தி, மரித்து, உயிர்த்து, பரமேறி, பிதாவினிடம் சென்றது அவ்வுடன்படிக்கையின் பூர்த்தி. அங்கே அவர் அரசனும் ஆசாரியனுமாய் வீற்றிருக்கிறார். மனிதனுக்கன்று, உடன்படிக்கைக்கே உத்தரவாதி. இனியன்று, இப்பொழுதே. இது பக்தருக்கு என்ன பாக்கியம், என்ன சிலாக்கியம்! திவ்ய வாக்கு ஆணையால் உறுதி செய்யப்படுகிறது.

7. 23-25.

23 அன்றியும், அவர்கள் மரணத்தினிமித்தம் நிலைத்திருக்கக் கூடாதவர்களானபடியால், ஆசாரியராக்கப்படு
24 கிறவர்கள் அநேகராயிருக்கிறார்கள். — இவரோ என்றென்றைக்கும் நிலைத்திருக்கிறபடியினாலே, மாறிப்போகாத ஆசாரியத்துவ முள்ளவராயிருக்கிறார். —
25 மேலும், தமது மூலமாய் தேவனிடத்தில் சேருகிறவர்களுக்காக வேண்டுதல் செய்யும்படிக்கு அவர் எப்பொழுதும் உயிரோடிருக்கிறவராகையால் அவர்களை முற்றமுடிய இரட்சிக்க வல்லவராயுமிருக்கிறார்.

23. **கூடாதவர்களானபடியால், கூடாமையால்—நிலைத்திருக்க,** நீடித்திருக்க என்று திருத்தவும். ஆசாரியர் இயல்பாய் மரணத்துக்கிரையாகிற காரணத்தால், அனேகம்பேரை அடுத்தடுத்து அபிஷேகம் பண்ணவேண்டியிருந்தது. அதனால் ஆசாரியர் மாறிமாறி வந்தார்கள். ஒருவன்போல இன்னொருவனில்லை. குணவிகற்பங்களும், திறமை விகற்பங்களும் ஏராளமாயிருந்தன. ஆசாரிய உத்தியோகம் ஒரே இயல்பாக நடக்கவில்லை. **அனேகராயிருக்கிறார்கள்.** ஈற்றிலே ஏ என்கிற தேற்ற இடைச்சொல்லைக் கூட்டிக்கொள்க. தற்காலத் திருச்சபையிலும் மரணத்தினாலும், வியாதியினாலும், துர்நடத்தையினாலும், வேறு சில சங்கடங்களினாலும் சபைப்போதகர் அடிக்கடி மாற்றப்படுகிறார்கள். அருமையான சிலர் 50, 60 வருஷம் சபையை மேற்கிலே நடத்தி அதன் அன்பையும் நம்பிக்கையையும் நெடுநாள் அநுபவித்து வருகிறார்கள். இந்தியாவில் அவ்வாறு நடக்கக்காணோம். சபையிலே பலவிதமான பேர்களுண்டு. ஒரு வகுப்பாருக்குப் பிரியமானது, இன்னொரு வகுப்பாருக்கு வெறுப்பாயிருக்கிறது. இதனால் சில சமயங்களிலே போதகர் இரண்டாட்டுக்கடாச் சண்டையிலே புகுந்த

நரிபோலத் தவிக்க நேரிடுகிறது. சபையிலே எம்பெருமானின் ஆவியும் சிந்தையும் நிலைத்திருந்தால்மட்டும், அது சீராயிருந்து செழிக்கும். உண்மையான தெய்வபக்தியும், பரதுக்கஞ் சகியாத அன்பும் பச்சாத்தாபமும் நிறைந்தவர்களே போதகராக அபிஷேகம் பெறவேண்டும். எண். 20. 28; எசே. 22. 29, 30.

24. **இவரோ.** மெல்கிசேதேக்கு முறைமையில் வந்த எம்பெருமானே. **மாறிப்போகாத** அவரது ஆசாரியத்துவம் சதாகாலமும் மாறாத வண்ணமாயிருக்கிறது. அவர் உயிர்த்தெழுந்து பரமேறி, உன்னத பரிசுத்த ஸ்தலத்தில் வீற்றிருக்கத் தொடங்கின நேரம்முதல் ஏறக்குறைய ஈராயிர வருஷகாலமான இந்நாள்பரியந்தம் திருச்சபைக்கு மாறாத ஒரே ஆசாரியராயிருக்கிறார். அவர் உத்தியோகம் இன்னொருவருக்குச் செல்லாது. இன்னும் தமது கரத்தில் பாவவிமோசன உதிரப்பாத்திரத்தை ஏந்தியவரான நமது பிணையாளியாயிருக்கிறார். அவர் அன்பு குன்றவில்லை; அவருடைய இரக்கம் குறையவில்லை; அவருடைய ஆத்மவாஞ்சை குளிரவில்லை; அவர் திருக்கண்கள் மங்கவில்லை; அவர் செவிகள் எப்போதும் திறந்தவண்ணமே யிருக்கின்றன; தமது பக்தர்பேர்களைத் தமது ஜீவபுஸ்தகத்திற் பதியவைத்திருக்கிறார். மெல்கிசேதேக்கு செய்த காரியங்களெல்லாம் விடப்படுகிறது. இருவருக்கும் பொதுவான முக்கிய விஷயமாகிய **நித்ய ஆசாரியத்துவம்** ஒன்றையே நிருபாசிரியர் இங்கு உறுதிசெய்கிறார். இதிலிருந்து பின்வருகிற சத்தியம் ஸ்திரப்படுத்தப்படுகிறது. **ஏழாம் சிறப்பு** இந்த நித்ய ஆசாரியத்துவத்தோடு முடிகிறது.

25. **மேலும்.** ஆதலால் என மாற்றவும். தமது—கடவுளிடம் சேருகிறவர்களுக்கு "என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவண்டை சேரான்." **தமது மூலமாய்**—கிறிஸ்து மார்க்கத்துக்கும் மற்றெல்லா மார்க்கங்களுக்குமுள்ள முக்கிய பேதங்களில் இது ஒன்று. எம்பெருமான் மூலமாகமாத்திரம் மனிதர் கடவுளை அறியக்கூடும். கடவுளைப் பற்றிய இதர விஷயங்களெல்லாம் அநுமான விஷயங்கள்; பெறப்படுகிற நியாயங்கள். எம்பெருமானோ அதிகாரத்தோடு உரைக்கிறார். அறிந்தும் அநுபவித்தும், கண்ணுற்கண்ட சாட்சியாகவும் விளம்புகிறார். இவ்வாறு எந்த மகாத்மாவும் உரைத்ததில்லை. எப்போதாகிலும் கட

வுள் தனக்குரைத்ததாகக் கூறினல், அது நமது மனச்சாட்சிக்கும் பொருந்தாது, சுத்த அபத்தமாயுமிருக்கும். கடவுளை மறைக்குந் திரையைத் திறந்தவர் எம்பெருமான் ஒருவரே. இதை யொப்புக் கொள்ளுகிறதுதான் நமது இந்துநேசருக்குக் கஷ்டமாயிருக்கிறது. ஆகிலும் அவர்கள் சாதுக்கள் எல்லாரும் "கடவுளை ஒருவனும் ஒருக் காலும் கண்டதேயில்லை" என்று வாக்காலும் நடக்கையாலும் புகலு கிறார்கள். **வேண்டுதல் செய்கிற. பரிந்து பேசுகிற**—என மாற்ற வேண்டும். நமக்காக தேவசந்நிதானத்தில் நிற்கிறார் என்றும் சொல்ல லாம். அதி. 9. 24 காண்க. **இப்பொழுதும்** மூ. சதாகாலமும். முன்சொன்ன **நித்ய ஆசாரியத்துவம்**—அதன் முக்கிய தொழில் இங்கு விளக்கியிருக்கிறது. **முற்றமுடிய முற்றுமுடிய**—எனத் திருத்த வும். **இரட்சிக்க வல்லவர்**—எம்பெருமானின் விடுவிக்குஞ் சக்தி அரைகுறையானதன்று; இந்த வாக்கிலே கிறிஸ்தவர்களுக்கு எத்தனை ஆறுதலுண்டு! நமிடத்தில் இரட்சண்ய கிரியை பூரணப்படும்வரை யும் அவர் நமக்குதவிசெய்கிறார். நாம் மரிக்குமளவும் அவருடைய அருளும், ஆதரித்துப் பரிந்துபேசுதலும், பக்கபலம் தருதலும் நிலைத் திருக்கும். நாம் துன்பத்திலும் சோதனையிலும் சோர்ந்துப்போவா னேன்?

**7.** 26–28.

26 பரிசுத்தரும், குற்றமற்றவரும், மாசில்லாதவரும், பாவிகளுக்கு விலகினவரும், வானங்களிலும் உயர்ந்த வருமாயிருக்கிற இவ்விதமான பிரதான ஆசாரியரே
27 நமக்கு ஏற்றவராயிருக்கிறார்.—அவர் பிரதான ஆசாரி யர்களைப்போல முன்பு சொந்தப் பாவங்களுக்காகவும், பின்பு ஜனங்களுடைய பாவங்களுக்காகவும் நாடோறும் பலியிட வேண்டுவதில்லை; ஏனெனில் தம்மைத்தாமே பலியிட்டதினாலே இதை ஒரேதரம் செய்து முடித்
28 தார்.—நியாயப்பிரமாணமானது பெலவீனமுள்ள மனு ஷர்களைப் பிரதான ஆசாரியராக ஏற்படுத்துகிறது; நியாயப்பிரமாணத்திற்குப் பின்பு உண்டான ஆணை யோடே விளங்கிய வசனமோ என்றென்றைக்கும் பூரணரான குமாரனை ஏற்படுத்துகிறது.

இவ்விதமாய் மெல்கிசேதேக் காசாரியத்துவமானது லேவிய ஆசாரியத்துவத்துக்கு ஏழு விஷயங்களிலே மிக்க சிறந்ததாயிருக்கிறதை உறுதிப்படுத்தின நிருபாசிரியர், இனிவரும் மூன்று வசனங்களிலே எம்பெருமானின் உத்தம லட்சணங்களைத் தொகுத்துரைக்கிறார். இதுகளைப் பின்வரும் அத்தியாயங்களிலே நேர்த்தியாய் விரித்துரைக்கிறார். இந்த லட்சணங்கள் உலகினில் எழுந்தருளிய வேறெந்த மகாத்மாவுக்குண்டு?

26. **பரிசுத்தரும்.** இது அத்தனை திருத்தமான வார்த்தையல்ல. இதன் சாதாரண பொருள் அதிக **சுத்தம்**. தூய்மை என்கிற தமிழ்ச் சொல் மிக்கச் சிறந்தது. பரிசுத்தரும் என்பதற்குத் தூயரும் என்றர்த்தம் பண்ணலாம். இங்குக் கடவுள்விஷயத்தில் பரிசுத்தர் என்பதைக் கவனிக்கவேண்டும். லேவி. 20. 26; 21. 1; சங். 16. 10; அப். 2. 27 காண்க. "கடவுளின் பரிசுத்தர்" என்பது அவர் பட்டப்பேர் (மாற். 1. 24). **குற்றமற்றவர்**—கபடில்லாதவர் எனின் தகும். இது மனிதரிடத்தில் காட்டிய குணம். **மாசில்லாதவர்** — மாசு, கறை அற்றவர். ஏசா. 53. 9. லேவிய ஆசாரியருக்குரிய பாவப் பிணிகளற்றவர். அதி. 4. 15; 9. 14; 1 பேது. 1. 19; 2 கொரி. 5. 21 காண்க. **பாவிகளுக்கு விலகினவரும், பாவிகளிலிருந்து விலக்கப்பட்டவரும்** எனத் திருத்துக. பாவவிமோசன தினத்தில் பிரதான ஆசாரியன் தன்னைச் சுத்திகரிக்கவேண்டிய ஆசாரங்களைப் பற்றி லேவி. 21. 10. 15 காண்க. ஸ்நானுனுஷ்டானங்களிலும் யாதொரு பழுது மிருக்கப்படாது. வேறு முறைமைகளையும் கண்டிப்பாய் அநுசரித்தல் வேண்டும். எம்பெருமானோ இம்மாதிரிச் சுசி மாத்திரமல்ல, நீதிக்குரிய யாதொரு குறைகறையுமற்றவர். பாவிகளாலே தீட்டுப்படக் கூடாதவராகவே ஜீவித்தவர். **வானங்களிலும் உயர்ந்தவரும்**—எல்லா வானத்துக்கும் உயர்ந்தவர். கடவுள் சந்நிதி எல்லா வானத்துக்கும் உயர்ந்ததென்பது எபிரேயரின் ஐதீகம். அதற்கு மிஞ்சின பதவியில்லை எ-று. எபே. 4. 10. **ஏற்றவராயிருக்கிறர். தகுதியானவர்** — எனத் திருத்தவேண்டும். இங்கு எம்பெருமானுக்குக் கூறியிருக்கிற இப்பஞ்சலட்சணம் சமஸ்த போதகன்மாருக்கு மிருக்க வேண்டும்.

27. இந்த வசனத்தையும் முந்தினதோடு அடைமொழியாக்கிக் கொள்ளவேண்டும். **அவர்—போல.** **அந்தப் பிரதான**ரு. **ஆசாரிய**ரைப்போல என மாற்றவும். **முன்பு.** முதல். **சொந்த** தன் **சொந்த. நாடோறும்** — இதற்குரைகூறல் வியாக்கியானிகளுக்கு மெத்த கஷ்டம். பிரதான ஆசாரியன் நாள்தோறுமல்ல, வருஷத்துக் கொருமுறை தான் பாவவிமோசன பலி செலுத்தினன். இங்கே நாடோறும் செலுத் துகிறதாகச் சொல்லியிருக்கிறது. ஒருவேளை சொற்பிழையாயிருக்க லாம். **நாடோறும்** என்னும் பதத்துக்குமுன் பாவவிமோசன என்ப தைத் தொகுத்தால் பொருள் சரியாகிவிடுகிறது. ஒருவேளை இந்தப் பதம் நிருபாசிரியர் மனதிலிருந்திருக்கலாம்; அன்றி, இது எபிரேய ருக்கு நன்ருய்த் தெரிந்த விஷயமாயிற்றே. இன்னுமோருரை செய்ய லாம். தினசரி பலிகளிலடங்கிய பாவவிமோசனத்துக்காக என்றும் சொல்லலாம். **பலியிட்டதினலே**—பலியிட்டபோழுது எனத் திருத்த வும். **ஒரேதரம்.** **ஒரேதரத்தில்** அல்லது **ஒரேதடவையில்** — இப் பொழுது இவ்வாக்கியத்தை ஆரும் லட்சண அடைமொழியாக்க முயல்வோம்: (வானங்களிலும் உயர்ந்தவரும்), **அந்தப் பிரதான ஆசாரியரைப்போல** முதல் **தம் சொந்தப் பாவங்களுக்காகவும், பின்பு ஜனங்கள் பாவங்களுக்காகவும் பலிசேலுத்தவேண்டிய அவசியமின்றி, தம்மைத்தாமே பலியிட்டபோழுது ஒரேதரத்தில் அவ்வாறு சேய்து முடித்தவருமாயிருக்**கிற இவ்விதமான ரு. எ–று.

இந்த முக்கியமான வாக்கியத்தால், (i) குருமார் ஆசாரியருமல்லர், பிரதான ஆசாரியருமல்லர்; (ii) எம்பெருமான் தாமே தம்மைப் பலி செலுத்தினதினலே வேறு பலிகள் அவசியமே இல்லை; (iii) சில சபைகளிலே அப்பத்தை (ஹோஸ்ட்) உயர்த்தி, பிரார்த்தித்துப் போலிப்பலி செலுத்தல் பிசகு; (iv) பாவவிமோசனம் ஆல்ற்றார் என்கிற பீடத்தினின்றும் அறிவித்தலும் பிசகு. சில சபைகளில் இதைக் கொஞ்சம் மாற்றியிருக்கிறது.

28. இது கருத்துரை. **சட்டமானது துறைபாடுள்ள மனிதரைப் பிரதான ஆசாரியராகவும், சட்டத்திற்குப் பின்புண்டான ஆணையின் வார்த்தையோ என்றேன்றும் பூரணராக்கப்பட்ட குமாரனை ஏற் படுத்தின**—இங்குச் சட்டத்துக்கும் ஆணைவார்த்தைக்கும், மனிதருக்

கும் தெய்வகுமாரனுக்கும், அபூரணருக்கும் பூரணருக்கும், அநித்திய ருக்கும் நித்தியருக்குமுள்ள பெரும் பேதங்கள் எடுத்துரைக்கப்படுகின் றன. **குறைபாடு**—பொதுவாக மானிடருக்குரிய குறைபாடுகளும், தனித்தனியாய் ஒவ்வொருவருக்குமுரிய பாவபாதகங்களும் அடங்கி யது. **பூரணர்**—மேலே அதி. 2. 10; 5. 9 காண்க. அனுதி குமாரனே நமக்குப் பிரதான ஆசாரியர். இதனாலே பூர்வ லேவிய ஆசாரியத்துவம் சுத்தமாய் ஒழிதல் காண்க.



# 8. அதிகாரம்.

## அதிகார விஷயம்.

இரண்டு ஆசாரியத்துவங்களையும் ஒத்துக் காண்பித்த நிருபாசிரியர், இதிலே இரண்டு உடன்படிக்கைகளையும் பக்கம் பக்கமாய் வைத்துப் பேதம் காட்டுகிறார். உண்மையான ஆலயத்திற் பிரதான ஆசாரிய ராகிய கிரிஸ்துவைத் தமது நிருபவாசகரின் முன்வைத்து (1-6), பழைய உடன்படிக்கையாளரின் சொற்கேளாமையைக்குறித்துச் சின மடைந்த கடவுள் எரேமியா தீர்க்கதரிசியின் மூலமாய் ஒரு புது உடன்படிக்கையை வாக்குசெய்து (7-9) பழையதிலும் மூன்றுவிஷ யத்திற் சிறந்ததென ரூபிக்கிறார் (10-13): (i) அதன் சட்டம் இருதயத் தில் எழுதப்படவேண்டும்; (ii) அது சகலருக்கும் பொதுவாயிருக் கிறது; (iii) அது மன்னிக்கும் உடன்படிக்கை. முதல் உடன் படிக்கை **பழையது** என்கிறதினாலேயே நீக்கப்படவேண்டியதாகிறது.

8. 1-6.

1 **மே**ற்சொல்லியவைகளின் முக்கியமான பொரு ளென்னவெனில்: பரலோகத்திலுள்ள மகத்துவ ஆச னத்தின் வலதுபாரிசத்திலே உட்கார்ந்திருக்கிறவரு
2 மாய்,—பரிசுத்த ஸ்தலத்திலும், மனுஷரால் அல்ல, கர்த்தரால் ஸ்தாபிக்கப்பட்ட மெய்யான கூடாரத்திலும் ஆசாரிய ஊழியஞ் செய்கிறவருமாயிருக்கிற பிரதான ஆசாரியர் நமக்கு உண்டு.

ஒவ்வொரு பிரதான ஆசாரியனும் காணிக்கைகளை யும் பலிகளையும் செலுத்தும்படி நியமிக்கப்படுகிறான்; ஆதலால் செலுத்தும்படிக்கு ஏதோ ஒன்று இவருக்கும் 4 அவசியம் வேண்டியதாயிருக்கிறது.—பூமியிலே அவர் இருப்பாரானால் ஆசாரியராயிருக்கமாட்டார்; ஏனெனில், நியாயப்பிரமாணத்தின்படி காணிக்கைகளைச் 5 செலுத்துகிற ஆசாரியர்கள் இருக்கிறார்களே;—இவர்கள் செய்யும் ஆராதனை பரலோகத்திலுள்ளவைகளின் சாயலுக்கும் நிழலுக்கும் ஒத்திருக்கிறது; அப்படியே, மோசே கூடாரத்தை உண்டுபண்ணப் போகையில்: மலையிலே உனக்குக் காண்பிக்கப்பட்ட மாதிரியின் படியே நீ எல்லாவற்றையும் செய்ய எச்சரிக்கையாயிரு 6 என்று தேவன் அவனுக்குக் கட்டளையிட்டார்.—இவரோ விசேஷித்த வாக்குத்தத்தங்களின்பேரில் ஸ்தாபிக்கப்பட்ட விசேஷித்த உடன்படிக்கைக்கு எப்படி மத்தியஸ்தராயிருக்கிறாரோ, அப்படியே முக்கியமான ஆசாரிய ஊழியத்தையும் பெற்றிருக்கிறார்.

## அரும்பத விளக்கம்.

1, 2. **மேற்சொல்லியவைகளின்,** மூ. **இப்பொழுது, நாம் சொல்லுகிறவைகளில் முக்கியமான விஷயம் இதுவே:** எனத் திருத்தவும். இதிலும் இரண்டாம் வாக்கியத்திலும் எம்பெருமானிற் சிறந்த உத்தியோகத்தைச் சுருக்கியுரைக்கிறார். அதாவது: பரிசுத்த ஸ்தலத்திலும், மனிதனல்ல, கர்த்தர் தாமே அடித்த மெய்க்கூடாரத்திலும் ஊழியஞ் செய்கிறவராய், வானங்களிலே உன்னத ஆசனத்தின் வலப்பக்கத்தில் உட்கார்ந்த இவ்விதமான பிரதான ஆசாரியர் ஒருவர் நமக்குண்டு.

இத்தன்மையரான பிரதமகுரு நமக்காகப் பரலோக ஆலயத்தில் மகத்துவமாய் திருப்பணி இயற்றிவருகிறார். வேறு ஆசாரியன் வேண்டியதில்லை. பரிசுத்த ஸ்தலமே **மெய்க்கூடாரம்.** உலகத்திலும், வனாந்தரத்திலும் அடித்ததும், பிறகு சாலொமோன் சிங்கார அலங்காரமாகக் கட்டினதுமாகிய ஆலயமன்று. கடவுளின் திருச்சந்நிதியாகிய உண்மையும் நித்யமுமான ஆலயமே இங்கு குறிக்கப்படுகிறது. ஒவ்வொரு போதகனும் இவ்வாறே மெய்யான குருவாயிருக்க வேண்டும். மனிதர் கட்டியிருக்கும் ஆலயத்தில் மாத்திரமல்ல, இர

கசியமும் பரிசுத்தமுமான கடவுள் சமுகத்திலும் சபையாருக்காக மன்ருடி வருகிறவனு யிருக்கவேண்டும். பூமிக்குரிய கூடாரம் நிழல் போலும், பக்தருக்குரிய கூடாரம் பொருள்போலும். அதி. 9. 24 காண்க. **மனிதனல்ல**—ஆதிக்கூடாரம் உண்டுபண்ணி அடித்தவர் மோசே. இந்த வார்த்தைகளிலே எத்தனை ஆழ்ந்த இரகசியங்கள் உண்டு! நாம் ஆலயத்திலிருக்கையில் வாஸ்தவமான யோகநிலையில் இருக்கவேண்டும். அங்கிருப்பதெல்லாம், அங்குச் செய்து சொல்லி, பாடப்படுகிறதெல்லாம் தேவசந்நிதியில் நடக்கிற மெய்ப்பொருளின் நிழலென்று நிதானித்து, மனதைப் பரவசப்படுத்தவேண்டும். பரத்தி லிருக்கிறவைகளை மனதாற் கண்டு, அங்கிருந்து ஒலிக்கிற செய்தி யைக் காதாரக்கேட்டு, அகமகிழ ஆவல்கொண்டிருக்கவேண்டும்.

3. **ஒவ்வொரு—நியமிக்கப்படுகிறன்.** பிரதான ஆசாரியரின் சாமானிய தொழிலை இங்குக் கூறுகிருர். ஸ்தோத்திரக் குறியாகக் காணிக்கைகளையும், பாவங்களுக்காகப் பலிகளையும் செலுத்துகிறது சாதாரணம். இந்திய கோவில்களிலும் இந்நாள்வரையும் இவ்வாறு நடக்கிறது. இவை நன்றிக்கும் பாவ உணர்ச்சிக்கும் அறிகுறிகள். இந்தச் சாதாரண கடமையை இரட்சகரும் நிறைவேற்ற வேண்டு மென்று கூறுகிருர்: **ஆதலால் ழு. ஆதலால், இவரும் ஏதோ ஒன்று செலுத்துவது அவசியமாயிருக்கிறது** எனத் திருத்தவும். அஃதென்ன? அவருடைய ஒரே பலியின் உதிரமே. இதை இங்குக் குறிப்பாய் மட்டும் சொல்லுகிறவர், இனி அதி. 9. 12; 10. 5-7, 11, 12-இலே இந்த அதிபூர்வ விஷயத்தைத் தெளிவாய் விரித்துரைக்கிருர். அவ் வாறே பவுலும் எபே. 5. 2-இலே "கிறிஸ்து நமக்காகத் தம்மைக் கடவுளுக்கு சுகந்த வாசனையான காணிக்கையாகவும் பலியாகவும் ஒப்புக்கொடுத்தார்" என்கிருர்.

4. **பூமியிலே — ஆனல். இப்பொழுதவர் இன்னும் பூமியில் இருப்பாரானல்** என மாற்றலாம். எம்பெருமானின் ஆலயம் சுவர்க் கத்திலே, பூமியிலே அவர் சேவிக்கத்தக்க ஸ்தலம் கிடையாது. **ஆசா ரியாக—ஆசாரியாகவே**—எனத் திருத்தவும். ஏனெனில், (i) அவர் லேவிக்கோத்திரத்தைச் சேராமல், யூதாக்கோத்திரத்தைச் சேர்ந்தவர் (எண். 16. 40.). ஆசாரியரல்லவெனின், பிரதான ஆசாரியராய்

எவ்வாறிருக்கக்கூடும்? **ஆசாரியர்கள்**—இது முக்கியமான பிரதிகளில் இல்லை. **செலுத்துகிறவர்கள்** என மாற்றிக்கொள்ளலாம். இந்த நிகழ்காலத்தால், எருசலேம் அழிக்கப்படுமுன் இந்நிருபம் எழுதப் பட்டதென்பது விசதமாகிறது. அடுத்த வாக்கியத்தில் இது அதிகத் தெளிவாயிருக்கிறது. அந்நகரம் அழிக்கப்பட்டிருந்தால், அதையே ஒரு ஸ்திரமான நியாயமாக எடுத்துக்கூறி, அதோடே லேவிய ஆசாரி யத்துவம் நிர்மூலமாக்கப்பட்டதென்று தர்க்கித்திருப்பாரே.

5. **இவர்கள்.** பூமிக்குரிய ஆசாரியர்கள். **செய்யுமாராதனை.** இதை நீக்கி, **பரலோகத்திலுள்ளவைகளின் மாதிரியும் நிழலுமானதைச் சேவிக்கிறர்கள்** எனத் திருத்துக. அதி. 10. 1; கொலோ. 2. 17 காண்க. வாஸ்தவத்தில் ஆசாரியர்கள் ஆண்டவனையல்ல, கூடார ஆலயத்தைத்தான் சேவிக்கிறார்கள். இந்த ஆலயம் பரம ஆலயத்தின் அடையாளமேயன்றி, அதுவே அன்று. 1 நாளா. 28. 11. **பரலோகத்திலுள்ளவைகளின்**—அதாவது, பரம ஆலயத்தின். **அப்படியே**—அதுபோலவே, அவ்வாறே என மாற்றலாம். **உண்டுபண்ணப்போகையில்**—செய்யப்போகிறபொழுது. **செய்ய** ...—செய்யென்று கடவுளால் எச்சரிக்கப்பட்டார். மோசே கட்டுவித்த கூடாரத்துக்குச் சரியான மெய்க்கூடாரமொன்று சுவர்க்கத்திலிருக்கிறதாகவும், அது சீனாய் மலையிலே மோசே காணும்படித் தொங்கவிடப்பட்டதாகவும் எபிரேயர் நம்பினார்களாம். பழைய ஏற்பாட்டில் கண்டிருக்கிற அனந்தம் விஷயங்களை யூதர் சொல்லர்த்தஞ் செய்துகொள்ளுகிறது சாதாரணம். ஆயினும், கடவுள் கனவிலோ, நனவிலோ, தரிசனத்திலோ, மனோபாவனையிலோ, யோகநிஷ்டையிலோ எவ்வாறோ ஒருவிதமாய்க் கூடாரங் கட்டவேண்டிய மாதிரியைத் தம் தாசன் மோசேக்குத் தெரிவித்திருக்கவேண்டும். இதற்குச் சந்தேகமில்லை.

இத்தேசத்து ஹிந்து ஆலயங்களும் யூத ஆலயமும் முக்கிய லட்சணங்களில் மாத்திரமல்ல, அனேக நுட்பமான விஷயங்களிலும் ஒத்திருக்கிறது ஆச்சரியந்தான். ஆலயங்களின் தளமாதிரி (plan) ஏகதேசம் ஒன்றே. வெளிப்புறமும், தடாகமும், பலிபீடமும், த்வஜஸ்தம்பமும், உள்புறமும், மூலஸ்தானமும், பிரசாதமும், பலிகளும், காணிக்கைகளும், ஆசாரியரும், சங்கீத வாத்தியமும், தூபவர்க்கமும்,

அணையாவிளக்கும், மற்றுமனேக லட்சணங்களும் இரண்டுக்கும் பொதுவாக விருக்கின்றன. இந்த அற்புதமான ஒற்றுமை எவ்வாறுண்டாயிற்றென்பது இன்னும் யாருக்கும் சீராய் விளங்கவில்லை. எபிரேய எழுத்துவடிவும் சம்ஸ்கிருத எழுத்துவடிவும் பெரும்பாலும் ஒன்று போல் இருக்கின்றன. பூர்வத்தில் சம்ஸ்கிருதமும் எபிரேய் பாஷையைப்போல வலதிலிருந்து இடதுநோக்கி எழுதப்பட்டது. ஒருவேளை அதிபூர்வத்தில் இருவகுப்பாரும்—அதாவது எபிரேயரும் ஆரியரும் ஒரே இடத்தில் வசித்த ஒரே வமிசத்தாராயிருக்கலாம். ஆகிலும், எபிரேயர் ஆரியருக்குப் பூர்வமானவர் என்றெண்ண இடமுண்டு.

கடவுளிடத்தில் அந்நியோந்நியமாயிருக்கிற பக்தர்கள் அவரிடமிருந்து அனேக அருஞ்சத்தியங்களை அறியப் பெறுவார்கள். கடவுள் தாமே அவர்களுக்குக் காலாகாலத்தில் வெளிப்படுத்துவார். கடவுளைத் தியானிப்பவன் சுவர்க்கத்தைக் கண்டவன். எம்பெருமானைப் பற்றியவன் கடவுளைக் கண்டவன். அவர் காட்சிபெற்றவன் ஆனந்தமுற்றவன்.

6. இலக்கணவிஷயமாக இந்த வாக்கியம் கடினமானது. விசேஷித்த—சிறந்த, உயர்ந்த. வாக்குத்தத்தங்கள். வாக்குறுதிகள்பேரில் என மாற்றலாம். 2 கொரி. 9. 6; 1 தெச. 4. 7; பிலி. 3. 9; லூக். 24. 47 காண்க. பரத்துக்குரிய ஞானார்த்தமான வாக்குறுதிகள். ரோ. 9. 4; 1 தீமோ. 2. 5 காண்க. எப்படி—எவ்வாறு எனத் திருத்தலாம்; நடைக்காக. அப்படியே. அவ்வாறே. முக்கியமான ஆசாரிய ஊழியத்தையும், மாட்சிமையான ஊழியத்தையும் எனத் திருத்தலாம். இந்த அளவுநடை இந்நிருபத்துக்குரியது. எத்தனை உயர்ந்ததோ அத்தனை மி. எவ்வாறோ அவ்வாறே மி. அதி. 1. 4; 3. 3; 7. 22 காண்க. கிறிஸ்துமார்க்கம் பொருளும் யூதமார்க்கம் நிழலும் என்பதைத் திருஷ்டாந்தப்படுத்துகிறதே நிருபாசிரியரின் முழுநோக்கம். சிறுவர் முன்பு சித்திரங்கள்வழியாய்க் கற்றுக்கொண்டு, பிறகு அதுகளைவிட்டுப் புஸ்தகங்களைமாத்திரம் வாசித்தறிகிறதுபோல, யூதர்கள், சட்டம், சடங்குகளோடாரம்பித்து, பின்பு அவைகளை நிறுத்தி அவற்றின் மெய்ப்பொருளாகிய மேசியாவைப் பற்றிக்கொள்வதே அந்த நோக்கம். டீன் பாரர் வியாக்கியானி யூத ஏற்பாட்டைச் சாரத்துக்கும், புழுமுட்டைக்கும்; கிறிஸ்துவின் சுவிசேஷத்தை முறையே கட்டிடத்துக்கும் வண்

ஞாரப்பூச்சிக்கும் ஒப்பிடுகிறார். **மத்தியஸ்தர்.** கடவுளுக்கும் மனிதனுக்கும் செய்யப்படுகிற உடன்படிக்கைக்கு மத்தியஸ்தர் அவசியம். பழைய உடன்படிக்கைக்கு மோசே மத்தியஸ்தர்; பிர்தான ஆசாரியரான எம்பெருமான் புதியதுக்கு மத்தியஸ்தர். (கலா. 3. 19.)

8. 7-13.

7 *அந்த முதலாம் உடன்படிக்கை பிழையில்லாதிருந்ததானால், இரண்டாம் உடன்படிக்கைக்கு இடம் தேட 8 வேண்டுவதில்லையே.—அவர்களைக் குற்றப்படுத்தி, அவர்களை நோக்கி: இதோ; கர்த்தர் சொல்லுகிறதென்னவெனில்: இஸ்ரவேல் குடும்பத்தோடும் யூதா குடும்பத்தோடும் நான் புது உடன்படிக்கையை ஏற்படுத்துங் 9 காலம் வருகிறது.—அவர்களுடைய பிதாக்களை எகிப்து தேசத்திலிருந்து கொண்டுவரும்படிக்கு நான் அவர்களுடைய கையைப் பிடித்தநாளிலே அவர்களோடு பண்ணின உடன்படிக்கையைப்போல இது இருப்பதில்லை; அந்த உடன்படிக்கையிலே அவர்கள் நிலைநிற்கவில்லையே, நானும் அவர்களைப் புறக்கணித்தேன் என்று 10 கர்த்தர் சொல்லுகிறார்.—அந்த நாட்களுக்குப் பின்பு நான் இஸ்ரவேல் குடும்பத்தாரோடே பண்ணும் உடன்படிக்கையாவது: என்னுடைய பிரமாணங்களை அவர்களுடைய மனதிலே வைத்து, அவர்களுடைய இருதயங்களில் அவைகளை எழுதுவேன்; நான் அவர்கள் தேவனாயிருப்பேன், அவர்கள் என் ஜனமாயிருப்பார்கள்.— 11 அப்பொழுது சிறியவன் முதற்கொண்டு பெரியவன் வரைக்கும் எல்லாரும் என்னை அறிவார்கள்; ஆகையால், கர்த்தரை அறிந்துகொள் என்று ஒருவன் தன் அயலானுக்கும், ஒருவன் தன் சகோதரனுக்கும் போதிக்க 12 வேண்டுவதில்லை.—ஏனெனில் நான் அவர்கள் அநியாயங்களைக் கிருபையாய் மன்னித்து, அவர்கள் பாவங்களையும் அக்கிரமங்களையும் இனி நினையாமலிருப்பேன் என்று கர்த்தர் சொல்லுகிறார்.*

13 *புது உடன்படிக்கை என்று அவர் சொல்லுகிறதினாலே முந்தினதைப் பழமையாக்கினார்; பழமையானதும் நாள்பட்டதுமாயிருக்கிறது உருவழிந்துபோகக் காலம் சமீபித்திருக்கிறது.*

## இரண்டு உடன்படிக்கைகளின் தாரதம்மியங்கள்.

## • எரேமியாவின் சாட்சி.

7. **பிழையில்லாதிருந்ததானால்.** குற்றமற்றிருந்ததாயின் என மாற்றலாம். ஒரே மூலவார்த்தையை இங்குப் **பிழை**யென்றும், அடுத்த வாக்கியத்திற் குற்றமென்றும் மொழிபெயர்த்திருக்கிறது என்ன பிசகு! அதி. 7. 18-இல் கூறியிருக்கிறபடி "பலவீனமும்," "பயனற்றதும்," "பூமிக்குரியதும்" ஆகிய உடன்படிக்கை. பவுல் அப்போஸ்தலன் கூட இவ்விரண்டு உடன்படிக்கைகளையும் ஒத்துக்காட்டுகிறார். அவர் நியாயப்பிரமாணமென்கிற **சட்டத்தையும் சுவிசேஷத்தையும்** எதிரில் வைத்து, ஒன்று எழுத்து, மற்றொன்று ஆவி, ஒன்று அடிமைத்தனம், மற்றொன்று சுவாதீனம்; ஒன்று ஆசாரங்கள், மற்றொன்று விசுவாசம்; ஒன்று கட்டளை, மற்றொன்று வாக்குறுதி; ஒன்று பயமுறுத்தல், மற்றொன்று பரிதபித்தல் என்றிவ்வாறு பேதங்காட்டிச் சுவிசேஷத்தின் மேன்மையையும் மகிமையையும் எடுத்துரைக்கிறார். நிருபாசிரியராகிய அப்பொல்லோ என்பவர் அதே இரண்டையும் இன்னொரு வகையாய் விளக்குகின்றார். அவர் கருத்தில்: ஒன்று லேவிய ஆசாரியத்துவம், மற்றொன்று மெல்கிசேதேக் காசாரியத்துவம்; ஒன்று சடங்காசாரம், மற்றொன்று நெஞ்சாசாரம்; ஒன்று அநித்தியமானது, மற்றொன்று நித்தியமானது; ஒன்று அடையாளம், மற்றொன்று பொருள்.—என்றிவைகளைமாத்திரம் முக்கியப்படுத்துகிறார். இந்தக் காரணங்களினாலே புது உடன்படிக்கை அவசியமாயிற்று. **இரண்டாம். இரண்டாவதான ஓர்** எனத் திருத்துக.

8. அவர்களை — **நோக்கி. அவர்** அவர்களைக் **குற்றப்படுத்தி:** என்று திருத்தினால் மூலத்துக்குச் சரியாயிருக்கும். **அவர்**—எரேமியாவின் மூலமாய்க் கடவுள் தாமே. **அவர்களை**—முதல் **உடன்படிக்**கையிற் சேர்ந்த யூதர்களை. இங்கு எரேமியாவின் வாக்கு **31. 31–34** எடுத்துரைக்கப்படுகிறது. இதோ, ஞ. 12–ம் வாக்கியத்தின் கடைசியிலே என்று **கர்த்தர் உரைக்கிறார் என்கிறார்**—இந்தக் கடைசி வினைமுற்று 8–ம் வாக்கியத்தில் "அவர்" என்னும் எழுவாய்க்கு முடிபு என்றறிக. **குடும்பம்**—மூலத்தின்படி **வீட்டார்** என்றிருத்தல்வேண்டும். **ஏற்படுத்**

துங்காலம் — ஏற்படுத்தும் நாட்கள். மூலத்தில் அறுக்கும் என்கிற பதம் வழங்கியிருக்கிறது. உடன்படிக்கையை உறுதிப்படுத்த ஆடு முதலான பிராணிகள் அறுக்கப்படுகிறதுண்டு. செய்து முடிக்கும் என்றும் சொல்லலாம், இனி இப்புது உடன்படிக்கைக்கு முகாந்தரம் கூறப்படுகிறது.

9. அவர்களுடைய. அவர்கள். எகிப்துதேசத்திலிருந்து. எகிப்தி லிருந்து கொண்டுவரும்படிக்கு இட்டுக்கொண்டுவர அல்லது வெளியே கொண்டுவரும்படி எனத் திருத்தவும். அவர்களுடைய. அவர்கள்—உடன்படிக்கையை—இல்லை. உடன்படிக்கை போன்ற தல்ல இது என மாற்றுக. அந்த. என். நிலைநிற்கவில்லையே. முன் கண்டவாறு, இஸ்ரவேல் கடவுள் சொல்லைக் கேட்கவில்லை. அதனால் அவ்வுடன்படிக்கை ரத்துசெய்யப்பட்டது. நியா. 2. 20, 21; 2 இரா. 17. 15–18 காண்க. ஓசியா 1. 9-இலே, "நீங்கள் என் ஜனமல்ல, நான் உங்கள் கடவுளாயிரேன்" என்கிறார். புறக்கணித்தேன்—அதா வது, தள்ளிவிட்டேன்.

10. குடும்பத்தாரோடு. முன்போல, வீட்டாரோடு. என்னுடைய. என். அவர்களுடைய அவர்கள். மனதிலேவைத்து. மனதிற்குள்ளே வைத்து அல்லது போட்டு. அவர்களுடைய. அவர்கள். நான் அவர் களுக்கு ஓர் கடவுளாயிருப்பேன், அவர்கள் எனக்கு ஓர் ஜனமா யிருப்பார்கள் என மாற்றலாம். சக. 8. 8; ஓசி. 2. 23; இதன் நிறைவேறலுக்கு 1 பேது. 2. 9, 10; 2 கொரி. 6. 16–18 காண்க.

இதிலே புது உடன்படிக்கையின் முதற்சிறப்பு காட்டியிருக்கிறது மனதிற் போடுகிறது உள்ளான சட்டத்துக்கடையாளம். கல்லிலல்ல, சதையில் எழுதப்படுகிற சட்டம் அல்லது உடன்படிக்கை. எசே. 36. 26–29 காண்க. புறம்பான சட்ட ஆசாரத்துக்கும், உள்ளான மனச்சாட்சியின் குரலுக்குமுள்ள பெரும்பேதம் இங்கு வற்புறுத்தப் படுகிறது. அதாவது, சட்டதிட்டத்துக்கும் ஆவி லட்சணத்துக்கு முள்ள வித்தியாசம்.

11. இதிலுள்ள வாக்கியங்கள் அவசியமின்றி இடம் மாற்றியிருக் கின்றன. பின்வருமாறு மாற்றினால் மூலத்துக்குச் சரிவரும்: அப் பொழுது, கர்த்தரை அறிந்துகொள் என்று ஒருவன் தன் உடனூரா

னுக்கும், ஒருவன் தன் சகோதரனுக்கும் போதியாதிருப்பான்; ஏனெனில், சிறியவன்முதல் பெரியவன்வரையும், எல்லாரும் என்னை அறிந்திருப்பார்கள். இது புது உடன்படிக்கையின் இரண்டாஞ் சிறப்பு. கடவுள் ஞானம் எல்லாருக்கும் பொதுவாயிருக்கும். தற்காலத்திலும், முற்காலத்திலும் ஆசாரியர்க் குலத்துக்குமாத்திரம் அந்த அறிவு உரியதாயிராது. சூத்திரர் வேதம் ஓதக்கூடாதென்கிற கட்டுப்பாடு ஒழிந்துவிடும். திருச்சபையிலே, எல்லாரும் கடவுளை அறிய வேண்டும்; அவர் திருவாக்கைப் பாராயணம் பண்ணவேண்டும்; அவர் அன்பை ருசிக்கவேண்டும். "உன் பிள்ளைகள் எல்லாரும் கர்த்தராலே போதிக்கப்படுவார்கள்" (ஏசா. 54. 13.). எம்பெருமானின் தொண்டர் யாவரும் தெரிந்தெடுத்த தலைமுறையும், ராஜ ஆசாரியரும், பரிசுத்த ஜனமும், அருமையான சபையாருமாயிருப்பார்கள். பரிசுத்தஆவியே அவர்களை அபிஷேகஞ்செய்து, சகலத்தையும் அவர்களுக்கு உபதேசிப்பார் (1 யோ. 2. 27.). **சிறியவன்** மு. ஆதி. 19. 11; அப். 8. 10, மு காண்க.

12. இனி உடன்படிக்கையின் மூன்றஞ் சிறப்புக் கூறப்படுகிறது. **அநியாயங்களைக் கிருபையாய் மன்னித்து. அக்கிரமங்களில் அவர்களுக்கு இரக்கமாயிருந்து** எனத் திருத்தவேண்டும். பழைய உடன்படிக்கையின் பாவவிமோசன பலிகள் பயனற்றவையாய்ப் போயின; ஆத்ம திருப்தியும், மன சாந்தியும் கிடைத்ததில்லை. 1 சாமு. 15. 22; சங். 40. 6; 50. 5–10; 51. 16; மீகா. 6. 6, 7; ஏசா. 1. 11; ஓசி. 6. 6; ஆமோ. 5. 21, 22, மு காண்க. அவர்கள் மு. **அவர்கள் பாவங்களை இனி நினைத்திரேன்** எனத் திருத்தவேண்டும் இங்கே "என்று கர்த்தர் உரைக்கிறார் என்கிறார்" என்னும் வார்த்தைகளைச் சேர்த்து முடிக்கவேண்டும். கடவுள் நம்முடைய பாவங்கள் விஷயத்தில் இரக்கமும் மறதியுமுள்ளவர். இது சுவிசேஷத்தின் சிறப்பு. புதிய உடன்படிக்கையின் அமைப்பு. எம்பெருமான் தம்மைச் செலுத்தின பலியின் தீர்ப்பு.

13. நிருபாசிரியரின் முடிவுரை இங்குக் கூறியது. இவ்விரு உடன்படிக்கைகளைப்பற்றிய நியாயம் இதிலே முடிவுபெறுகிறது. **புது உடன்படிக்கை**—புதிய (உடன்படிக்கை) **முந்தியதை**—அதாவது,

முதலாவதை. பழமை. பழையது—எனத் திருத்தலாம். இது உலகத்திலும் வழக்கம். ஒன்று புதிதாயிருக்கினும், அதினும் புதியதொன்று வரின், முந்தியது பழையதாகிவிடுகிறது. பழமையானதும் ழி. பழையதாகிறதும் விருத்தாப்பியம் மேலிடுகிறதுமானது அழிந்து போதலுக்குச் சமீபமாயிருக்கிறது—என்று திருத்தலாம். 2 இரா. 22. 19–இலே சாபமும் அழிவும் இசைந்திருப்பதைக் காணலாம்.



# 9. அதிகாரம்.

## அதிகார விஷயம்.

இந்த அத்தியாயத்திலும் அடுத்ததின் முதல் பதினெட்டு வசனங்களிலும் நிருபாசிரியர் லேவியர் ஊழியத்தின் ஆசாரங்களுக்கும் திருக்குமாரனின் திருப்பணிவிடை ஆசாரங்களுக்குமுள்ள வித்தியாசத்தை விளக்குகிறார். ஆலயத்தையும் (1–5), பலிமுதலியவற்றையும் (6, 7), லேவிய ஆசாரியரின் பயனற்ற ஊழியத்தையும், (9–10), எம்பெருமானின் ஆலயத்தோடும் (11), பலிமுதலியவற்றோடும் (12) ஒத்துக்காட்டி, அவரது ஊழியத்தின் மகத்துவத்தை நன்கு விளக்குகிறார் (13, 14). அதிகாரத்தின் மற்ற பாகத்தில் (15–28) கிறிஸ்து பாவத்துக்குச் செலுத்தின ஏகபலியின் பூரணத்தையும் இன்றியமையாத லட்சணத்தையும் விரித்துரைக்கிறார். முக்கியமான இந்த நிருபபாகத்தில், எம்பெருமானே சட்டத்தின் முடிவென்பதை ஸ்திரப்படுத்தி, அவருடைய யாகத்தால் முந்திய பலிகள் யாவும் முடிவுபெற்றனவென்றும், பிரதான ஆசாரியனின் வருஷாந்தப் பரிசுத்த பிரவேசத்தைப்போல் எம்பெருமான் கிருபாசனத்திற் சேர்தல் இடைவிட்டதும், குறைபாடுள்ளதுமாயிராமல், பூரணமும், நித்யமும், இடையறாததுமா யிருக்கிறதென்றும் போதிக்கிறார்.

9. 1-5.

1 அன்றியும், முதலாம் உடன்படிக்கையானது ஆராதனைக்கேற்ற முறைமைகளும் பூமிக்குரிய பரிசுத்த 2 ஸ்தலமும் உடையதாயிருந்தது.—எப்படியெனில், ஒரு

கூடாரம் உண்டாக்கப்பட்டிருந்தது; அதின் முந்தின பாகத்தில் குத்துவிளக்கும், மேஜையும், தேவசமுகத் தப்பங்களும் இருந்தன; அது பரிசுத்த ஸ்தலமென்னப்
3 படும்.—இரண்டாந் திரைக்குள்ளே மகா பரிசுத்த ஸ்தல
4 மென்னப்பட்ட கூடாரம் இருந்தது.—அதிலே பொன்ஞற்செய்த தூபகலசமும், முழுவதும் பொற்றகடு பொதிந்திருக்கப்பட்ட உடன்படிக்கைப் பெட்டியும் இருந்தன; அந்தப் பெட்டியிலே மன்னு வைக்கப்பட்ட பொற்பாத்திரமும், ஆரோனுடைய தளிர்த்த கோலும், உடன்படிக்கையின் கற்பலகைகளும் இருந்தன. —
5 அதற்கு மேலே மகிமையுள்ள கேருபீன்கள் வைக்கப்பட்டுக் கிருபாசனத்தை நிழலிட்டிருந்தன; இவைகளைக்குறித்து விவரமாய்ப்பேச இப்பொழுது சமயமில்லை.

1. **அன்றியும் மு. இப்பொழுது, முதலாம் உடன்படிக்கைக்கும் திவ்ய ஆராதனைக்குரிய முறைமைகளும், இவ்வுலகத்துக்குரியதாயினும் ஓர் பரிசுத்த ஸ்தலமும் உண்டாயிருந்தன.** மேற்படி ஆசாரங்களைக் குறித்து நிருபாசிரியர் மற்ற இடங்களிலே நிகழ்காலத்தில் உரைத்தாலும், இங்கு அவைகள் புதிய உடன்படிக்கையினுலே ஒழிந்து போனதை உறுதிப்படுத்துகிருர். **இவ்வுலகத்துச்குரிய**—இதுபோன்ற பொருளை தீத்து 2. 22—இலே காணலாம். யூத ஆலயமானது காணப்பட்டதும் அநித்தியமுமானமையால், கிரிஸ்துவின் ஆலயம் அதரிசனமும், நித்யமும், பாத்துக்குரியதுமானது.

2. இப்பொழுது, 2. 5—இலே ஆலயத்தையும், 6. 10—இலே அதன் ஆராதனைகளும் வர்ணிக்கிருர். **உண்டாக்கப்பட்டிருந்தது. ஏற்படுத்தப்பட்டிருந்தது**—எனத் திருத்துக. **அதின் முந்தின பாகத்தில், அதன் முகப்பிலே**—எனத் திருத்தவும். **தேவசமுகத் தப்பங்களும்**—பிரசாதமும் எனின் ஹிந்துக்கள் இலேசாய்க் கிரகித்துக்கொள்வார்கள்; ஆனல் சொல்லர்த்தமாக; **பிரதிஷ்டை அப்பங்களென** மாற்றலாம். லேவி. 24. 5—9. நிருபாசிரியர் தம்மனதில் வனாந்தரத்துக் கூடாரத்தை வைத்திருக்கிருர். சாலோமோன் கட்டின ஆலயத்தில் கிருபாசனமும், உடன்படிக்கைப் பெட்டியும், கிடையா. பாம்ப்பி என்ற ரோம சக்கரவர்த்தி மகாப் பரிசுத்த ஸ்தலத்திற்குள்



நுழைந்தும் அது வெறுமையாயிருக்கக் கண்டான். இதனுல்தான் அப்பொல்லோ இந்த ஆலயத்தையல்ல, கூடாரத்தையே வர்ணிக் கிருர். யாத். 25. 23–39; 37. 10–24 காண்க. சாலோமோனின் ஆலயத்தில் 10 விளக்குகள் இருந்தன. 1 இரா. 7. 49.

3. **திரைக்குள்ளே.** திரைக்கப்பால் அல்லது பின்புறத்தில் எனத் திருத்தலாம். முந்தியது சாதாரண பரிசுத்த ஸ்தலம். இது மகாப் பரிசுத்த ஸ்தலம். இரண்டு திரைகளிருந்தன. சாலோமோன் ஆல யத்தில் இதற்கு உரையறை என்று பெயர் (oracle).

4. **பொன்னுற் செய்த,** பொன்—அல்லது தங்கத்—என்ருலுமே போதும். பொன்மோதிரம், பொன்கடியாரம் என்கிருேமேதவிர

பொன்னாற்செய்த என்கிறதில்லை. பிரதான ஆசாரியன் பாவவிமோசன தினத்தில் தங்கத் தூபகலசத்தோடு பிரவேசித்தானேயன்றி, அங்கே அது எப்போதும் வைத்திருக்கவில்லை. நிருபாசிரியர் ஒரு வேளை ஞாபகப்பிசகாய் இவ்வாறு உரைத்திருப்பார். எண். 17. 6–10. காண்க. கற்பலகைகள்—பத்துக் கற்பனைகள் வெட்டியிருந்த கற்கள்—இவை இரண்டு; ஒன்றிலே கடவுளுக்குரியன நான்கும், மற்றதிலே மனிதருக்குரிய ஆறும் பதிந்திருந்தன. கடவுள் மனிதனுக்கருளிய சிலாசாதனங்கள் என்னலாம். இதுகளெல்லாம் அப்பெட்டிக்குள்ளிருந்தனவென்று பொதுவாய்மட்டும் சொல்லலாம். சில உள்ளேயும், சில அண்டையிலுமிருந்தன. இத்தனைப் பொருள்கள் தேவாலயத்திலிருந்தன என்பதைமாத்திரம் நிருபாசிரியர் நிருபவாசகருக்கு ஞாபகப்படுத்துகிறார்.

போதிந்திருக்கப்பட்ட. அடித்த—என்பதே தகுந்த தமிழ்வார்த்தை. வைக்கப்பட்ட—இதுவும் தமிழன்று; வைத்திருந்த எனத் திருத்தவும். போற்பாத்திரமும்—இது சரியான மொழிபெயர்ப்பு. அதிலே ஒரு ஓமர் (படி) மன்னா இருந்தது. ஆரோ—கோலும். ஆரோனின் அரும்பிட்டகோலும் எனத் திருத்துக.

5. அதற்கு. உடன்படிக்கைப் பெட்டிக்கு. மேலே. மேலாக—எனின் பொருள் சிறக்கும். மகிமையுள்ள—இது சரியன்று; மகிமையின் எனத் திருத்தவும்; அதாவது மகத்துவ முகிலைச்சேர்ந்த கேருபீன்கள். இந்த உருவங்கள் சிருஷ்டிகளிலே மிக்கச் சிறந்தவையாக எண்ணப்பட்டன. சிறகு விரித்தவை; அச்சிறகுகளுக் கிடையிலே திவ்யஜோதி பிரகாசித்தது. 1 சாமு. 4. 22; 2 இரா. 19. 15; ஆகாய், 2. 7–9; எசே. 10. 4 காண்க. வைக்கப்பட்டு—இதை நீக்கவேண்டும். கிருபாசனம் - தேவாலயத்துத் திருப்பொருள்களிலெல்லாம் மிக்க மேன்மையானது. பொருளென்கிறோம் பொதுவாக: அதுவோ பொருளுமன்று உருவுமன்று. கேருபீன்கள் சிறகுகளுக் கிடையிலும் பரிசுத்த பெட்டியின்மேலும் பிரகாசித்த ஓர் பிரகாசம். இது எவ்வாறுண்டாயிற்றென்கிறதை நாம் விசாரிக்கப் புகுதல் கூடாத காரியம். அம்மாதிரிப் பிரகாசமொன்று நான் பாரிஸ்நகரத்தில் நெப்போலியன் சக்கரவர்த்தியின் சிங்காரமான கல்லறையிற் கண்டேன்.



ஆனாலது உயரத்தில் மறைவாயிருந்த சில பலகணிவழியாய்ப் பிரவேசித் திலங்கியது. இதுவோ திவ்ய அமைதியாயிருக்கவேண்டும். இயல்பான சாதனங்களைக்கொண்டு அற்புதமாய் ஜொலித்த மங்கவொளியாயிருக்கலாம். கிருபாசனத்துக்கு எபிரேய மூலப்பதம் மூடி என்று பொருள்படும். இவைகளை—இல்லை. இன்னுங் கொஞ்சம் விவரமாயெழுதியிருந்தால் நன்றுதான். ஆகிலும் நிருபாசிரியர் இதை நிறுத்தி இயேசுவின் பரிசுத்த ஸ்தலத்தை வர்ணிக்க அவசரப்படுகிறார். அது தானே அக்காலத்து எபிரேயக் கிறிஸ்தவர்களுக்கு இன்றியமையாதது.

9. 6-10.

6 இவைகள் இவ்விதமாய் ஆயத்தமாக்கப்பட்டிருக்க, ஆசாரியர்கள் ஆராதனை முறைமைகளை நிறைவேற்றும்படிக்கு முதலாங் கூடாரத்திலே நித்தமும் பிரவேசிப்பார்கள்.—7 இரண்டாங் கூடாரத்திலே பிரதான ஆசாரியன்மாத்திரம் வருஷத்திற்கு ஒருதரம் இரத்தத்தோடே பிரவேசித்து, அந்த இரத்தத்தைத் தனக்காகவும் ஜனங்க

8 ளுடைய தப்பிதங்களுக்காகவும் செலுத்துவான்.—அதி னலே, முதலாங் கூடாரம் நிற்குமளவும் பரிசுத்த ஸ்தலத் திற்குப் போகிற மார்க்கம் இன்னும் வெளிப்படவில்லை யென்று பரிசுத்த ஆவியானவர் தெரியப்படுத்தியிருக்கி 9 றார்.—அந்தக் கூடாரம் இக்காலத்திற்கு உதவுகிற ஒப் பனையாயிருக்கிறது; அதற்கேற்றபடியே செலுத்தப் பட்டுவருகிற காணிக்கைகளும் பலிகளும் ஆராதனை செய்கிறவனுடைய மனச்சாட்சியைப் பூரணப்படுத்தக் 10 கூடாதவைகளாம்.—இவைகள் சீர்திருத்தல் உண்டா கும் காலம்வரைக்கும் நடந்தேறும்படி கட்டளையிடப் பட்ட போஜன பானங்களும், பலவித ஸ்நானங்களும், சரீரத்திற்கேற்ற சடங்குகளுமேயல்லாமல் வேறல்ல.

6. **இவைகள்.** மேற்சொல்லிய திருப்பணிகள் முதலியன. **ஆசாரியர்கள் முதற் கூடாரத்திற்குள் நித்தமும் பிரவேசித்து, ஆரா தனை முறைமைகளை நிறைவேற்றிவருகிறர்கள்** — என மாற்றலாம். **நித்தமும்**—எப்பொழுதும், இடைவிடாமல். இங்குச் சாதாரணமான ஆசாரியர்த் தொழில்கள் கூறப்படுகின்றன. **ஆராதனை முறைமை களை.** மூலத்தில் **ஊழியங்களை**—என்றிருக்கிறது. அவையாவன: பலிசெலுத்தல், தூபங்காட்டல், தீபமேற்றல் முதலியன. இவற்றுக் காக இருமுறை பரிசுத்த ஸ்தலத்துக்குள் பிரவேசிக்கவேண்டும். இத் தனைத்தரம் புகலாமென்பதற்குச் சட்டம் கிடையாது.

7. இப்பொழுது பிரதான ஆசாரியனின் தொழிலைக் கூறுகிறார். **கூடாரத்திலே. கூடாரத்திலோ**—எனத் திருத்தவும். இந்த இரண்டாங் கூடாரந்தான் மகாப் பரிசுத்த ஸ்தலம். தேவாலயத்தில் திருஸ்தலங்கள் ஒழுங்குப்படுத்தியிருந்தன. அந்நியர்ப் பிராகாரத்தில் யாரும் போக லாம், அந்நியர்கள் உட்பட; இரண்டாம் பிராகாரத்தில் யூதர்மாத்திரம் புகலாம்; மூன்றாவதில் புருஷர்மட்டும்; பரிசுத்த ஸ்தலத்தில் விசேஷ ஆடை அணிந்த ஆசாரியர்மட்டும்; மூலஸ்தானமாகிய மகாப் பரிசுத்த ஸ்தலத்திற்குள் பிரதான ஆசாரியன்மட்டும், அதுவும் வருஷத்துக் கொரேமுறை. இதற்கும் ஹிந்து ஆலயங்கட்குமுள்ள சம்பந்தத்தை மேலே விவரித்திருக்கிறேன்.

**வருஷத்திற் கொருதரம்.** ஏழாம் மாதத்துப் பத்தாம் தேதியாகிய பாவவிமோசன தினத்தில். அத்தினத்தில் அவன் மூன்று நாலுமுறை

புகலாம்: (1) தூபக்கலசத்துடன்; (2) தன் பாவத்துக்குப் பலியிட்ட எருதின் இரத்தத்துடன்; (3) ஜனங்கள் பாவத்துக்காகப் பலியிட்ட ஆட்டுக்கடாவின் இரத்தத்துடன்; (4) தூபக்கலசத்தை எடுத்துப் போக. **தப்பிதங்களுக்காக.** தவறுகளுக்காக—அதிகத் தகுதியானது. சொல்லர்த்தபிரகாரம் **அறியாமைகளுக்காக.**

8. **மார்க்கம்.** வழி; நேராகக் கூடாரத்துக்குள்ளிடம் செல்லும் வழி. "நானே வழியும், சத்தியமும், ஜீவனுமாயிருக்கிறேன்" என்று வெளிப்படுத்தினவர் வருமளவும் அவ்வழி தெரியாமலிருந்தது (யோ. 14. 6); அதி. 10. 19, 20 காண்க. **முதலாம் கூடாரம்**—இதன் மூலமாகத் தான் இரண்டாம் கூடாரம் பிரவேசிக்கக்கூடும். இந்நிருபம் எழுதிச் சில வருஷங்களுக்குப் பின்பு இந்த ஆலயத்தின் இருபாகங்களும் கொளுத்திவிடப்பட்டன. அதற்கு முன்னமே, எம்பெருமான் சிலுவையில் தொங்கும்பொழுது இரண்டையும் பிரித்த திரை உச்சித் தொடங்கி அடிவரையும் இரண்டாய்க் கிழிந்துவிட்டது மிக்க பொருளுள்ளது. (மத். 27. (15.)

**பரிசுத்த ஆவியானவர்.** இந்நிருபத்திலே ஆவியானவர் இரட்சண்ய கிரியையிலே பங்குடையவராகக் கூறியிருக்கிறது இதுதான் முதல்தடவை. மகாப்பரிசுத்த ஸ்தலத்துக்குச் செல்லும் மார்க்கத்தைத் தெரியப்படுத்துகிறவர் பரிசுத்தஆவியே என்பதின் விசேஷத்தைக் கவனியுங்கள்.

9. **அந்தக் கூடாரம் தற்காலத்துக்கேற்ற ஓர் உவமை** என மாற்றவேண்டும். எருசலேமின் அழிவையும் தேவாலயத்தின் அழிவையும் எம்பெருமான் தமது இரண்டாம் வருகையாகக் கூறிவந்தார். ஆலயமானது கொளுத்தப்பட்டபொழுது, பழைய உடன்படிக்கையும் அதன் சடங்காசார முறைமைகள் யாவும் தெய்வச்செயலாலே திடீரென நிறுத்தப்பட்டன; புதிய உடன்படிக்கை நிறைவேற இடமுண்டாயிற்று. இங்குத் தற்காலம் என்கிறது கிறிஸ்தவராகாத யூதர் நிலைமையைக் குறிக்கின்றது. அந்த வெளிக்கூடாரம் நின்றவரையும் பக்தர் கடவுள் சமுகமாகிய பரிசுத்த ஸ்தலம் அணுகார் என்றவாறு. **அதற்கேற்றபடியே.** அவ்வாறே. **ஆராதனை—கூடாதவைகளாம். மனச்சாட்சி விஷயமாய் ஆராதிக்கிறவனைப் பூரணப்படுத்த முடியாதவை**

கள்—எனத் திருத்தவும். ஆலயத்தண்டை போய்க் காணிக்கை முதலி யன செலுத்தினவர்கள் ஆவிக்குரிய யாதொரு நற்பயனுமடையாமல், கடன் தீர்ந்தது, கோவிற்பழி தொலைந்தது என்று எண்ணிக்கொண்டு போய்விட்டார்கள். தங்கள் மனச்சாட்சி திருப்தியடையவில்லை; பாவ த்தைப்பற்றிய் வெறுப்புப் பிறக்கவில்லை; கடவுளினிடம் நன்றியும் அன்பும் உதிக்கவில்லை. பாவநிவிர்த்தி மட்டும் கர்த்தர் மலையை ஏறி அவ ரது பரிசுத்த ஸ்தானத்தில் நிற்க முடியுமென்கிற வாக்கு தினைத்துணை யும் அவர்கள் விஷயத்தில் நிறைவேறவில்லை. இதுவே அவர்கள் தினசரி அனுபவம். அவர்கள் வெளிக்கூடாரத்துக்குள் முதலாய்ப் பிர வேசிக்க உத்தரவு பெறவில்லை. ஹிந்து ஆலயங்களிலும் இவ்வாறே பக்தி விர்த்திக்கும் சன்மார்க்க விர்த்திக்கும் ஏதுகரம் உண்டாகாமல், துன்மார்க்கத்துக்கும் அக்கிரமத்துக்குமே அந்த ஸ்தலங்கள் அநுகூலப் படுகின்றன. பரிசுத்த ஸ்தலத்திற் பிரவேசிக்கச்செய்கிற மெய்ம் மார்க்கமொன்று ஹிந்துக்களும் இன்றியமையாதது.

**சீர்திருத்தல்.** ஷூத்தர்காலத்தில் உண்டான சீர்திருத்தலன்று. எரேமியா தீர்க்கதரிசி உரைத்த சீர்திருத்தல் காலம் (எரே. 8. 7–12). அதாவது, புதிய உடன்படிக்கையின் யுகம். அக்காலத்துப் பாரமான நுகம் நீக்கி, லேசும் லகுவுமான எம்பெருமானின் நுகம் வந்த காலம். மேல்வாக்கியத்திற் கூறிய "காணிக்கைகளும் பலிகளும்" இவ்விடத் தில் விவரித்திருக்கிறது. அவை "போஜன பானங்கள், பலவித ஸ்நானங்கள்; அவை அனைத்தும் சரீரத்துக்கேற்ற சடங்குகள்மாத்திரம்; மனதைத் தீண்டாதவை. **சரீரத்துக்குரிய சடங்குகளாகிய போஜன பானங்களும்** மி **வேறல்ல** என முடிக்கலாம்.

நம்முடைய ஆராதனைகளிலே சடங்குகளும், ஒழுங்குகளும், மணியடித்தலும், உற்சவங்களும், அங்கிகளும், வஸ்திரங்களும், பலி பீடங்களும், படங்களும், மத்தியானத்தில் மெழுகுவர்த்திகளும், புஷ்ப ஜோடிப்பும், தூபவர்க்கமும், குரு கிழக்கு நோக்குவதுமாகிய ஆசாரங் கள் அதிகரித்து முக்கியமடைந்தால், சபையிலே உண்மையான பக்தி யும், சன்மார்க்கமும் குறைந்துவிட ஏதுவுண்டாகும். குருமார் மிக்க ஜாக்கிரதையா யிருக்கவேண்டும். சாமானிய மனுஷர் ஐம்புல நுகர்ச் சிக்கு மேம்பட்டவர்களல்ல. படிப்படியாய்ச் சத்தியத்தை விட்டுச்

சடங்காசார்த்துக்கும், பக்தியை விட்டு பற்பல பயனற்ற செயல்களுக்கும் நழுகி விழப்பட்டவர்கள். இதுநிற்க, ஆராதனை ஒழுங்கையும் அதற்குரிய முறைமைகளையும் விடப்படாது. எதுவாயினும் ஆராதனை, யாவராயினும் குரு, என்றும் பக்தர் நடக்கலாகாது. எதையும் தூக்கி, நோக்கி, நிறுத்தி, செயல்வேண்டும்.

**9.** 11–14.

11 கிறிஸ்துவானவர் வரப்போகிற நன்மைகளுக்குரிய பிரதான ஆசாரியராய் வெளிப்பட்டு, கையினால் செய்யப்பட்டதாகிய இந்தச் சிருஷ்டி சம்பந்தமான கூடாரத்தின் வழியாக அல்ல, பெரிதும் உத்தமுமான கூடாரத்
12 தின் வழியாகவும்,—வெள்ளாட்டுக்கடா, இளங்காளை இவைகளுடைய இரத்தத்தினாலே அல்ல, தம்முடைய சொந்த இரத்தத்தினாலும் ஒரேதரம் மகா பரிசுத்த ஸ்தலத்திலே பிரவேசித்து, நித்திய மீட்பை உண்டு
13 பண்ணினார்.—அதெப்படியெனில், காளை வெள்ளாட்டுக்கடா இவைகளின் இரத்தமும், தீட்டுப்பட்டவர்கள் மேல் தெளிக்கப்பட்ட கடாரியின் சாம்பலும், சரீர
14 சுத்தியுண்டாகும்படி பரிசுத்தப்படுத்துமானால்,—நித்திய ஆவியினாலே தம்மைத்தாமே பழுதற்ற பலியாக தேவனுக்கு ஒப்புக்கொடுத்த கிறிஸ்துவினுடைய இரத்தம் ஜீவனுள்ள தேவனுக்கு ஊழியஞ்செய்வதற்கு உங்கள் மனச்சாட்சியைச் செத்த கிரியைகளறச் சுத்திகரிப்பது எவ்வளவு நிச்சயம்!

**கிறிஸ்துவினால்மாத்திரம் கிருபாசனத்தைச் சேருகிறோம்.**

11. **கிறிஸ்துவானவர்.** கிறிஸ்துவோ. **வரப்போகிற**—அல்லது **வந்திருக்கிற நன்மைகளுக்குரிய. நன்மைகள்**—சட்டமாகிய நிழலுக்குப் பதில் சுவிசேஷமாகிய பொருள். ஒரே வார்த்தையிலே "கிருபாசனம்" பாவமன்னிப்பு, மனச்சாட்சித் திருப்தி, பரம அமைதி, பரிசுத்தஆவியின் வரம், தூய்மையாதல், பாவத்தை வெறுக்குஞ் சக்தி, நன்மைசெய்யும் சிந்தை, உலகத்தோடு போராட்டம்—இவைகளும் இவை முதலானவைகளும் கிருபாசனத்தைச் சேர்ந்தவர்களுக்குக் கிடைக்கும் "நன்மைகள்." **செய்யப்பட்டதாகிய. செய்யப்படாத**—**அதாவது**—எனத் திருத்தவும். **இந்த**—அல்ல. **இந்தச் சிருஷ்டிப்**

யைச் சேராத எனத் திருத்தவேண்டும். **உத்தமமான. அதிபூரணமுமான**—இங்குப் பரம கிருபாசனத்தை விவரிக்கிறார். வாக். 24; அதி. 4. 14 காண்க. இந்தக் கூடாரம் ஒருவேளை எம்பெருமான் அவதரிக்கையில் எடுத்த உடலையும் (அதி. 10. 20; யோ. 1. 14; 2. 19; கொலோ. 2. 9; 2 கொரி. 5. 1); அதி. 8. 2-ல் குறித்திருக்கிற பரலோகத்திலிருக்கும் பரிசுத்தவான்களின் கூட்டத்தையும் குறிக்கும். இப்பொழுது மகிமையடைந்திருக்கிற அவருடைய சூட்சம உடலைக் குறித்து "அதிபூரண கூடாரம்" என்கிறாரென்பது என் அபிப்பிராயம். இரண்டும் கையாற் செய்யப்படாதவையே. இது எம்பெருமான் கிருபாசனத்தைப் பிரவேசித்த முதற்சாதனம். இனி இரண்டாவது:

12. **இரத்தத்தினாலே.** இரத்தத்தின் மூலமாய் என்று திருத்தவும். இரத்தமானது பிரதான ஆசாரியன் மகாப் பரிசுத்த ஸ்தலத்திற் பிரவேசிக்கத்தக்க பாத்தியம் அல்லது உரிமை உண்டாக்கினதுபோல, எம்பெருமான் தமது சொந்த உதிரத்துடன் பரம கிருபாசனத்திற்குள் பிரவேசித்தார். **இரத்தத்தினாலும்**—இரத்தத்தின் மூலமாயும். அதி. 13. 20; வெளி. 5. 6. **ஓரேதரம்**—இது பிசகு. **ஓரேதரத்தில்** எனத் திருத்துக. **பிரவேசி.** இதை வினைமுற்றாகவும், **உண்டு பண்ணினார்**—இதை வினையெச்சமாகவும் மாற்றவேண்டும். அதாவது, **நித்திய மீட்பைப்பெற்று ஓரேதரத்தில் மகாப்பரிசுத்த ஸ்தலத்திற்குள் பிரவேசித்தார்**—என்று மொழிபெயர்த்தால்தான் பொருள் விளங்கும். நித்திய மீட்பென்கிறது (i) பாவமன்னிப்பும் (எபே. 1. 7), (ii) பாவ ஜீவியத்திலிருந்து (1 பேது. 1. 18, 19), தேவசேவகத்துக்கு மீட்கப்படுதலும். (வெளி. 5. 9.)

**மீட்பு.** அடகு வைத்திருக்கிறதைக் கொடுக்கவேண்டியதைக் கொடுத்துப் பெற்றுக்கொள்ளுதல். பூர்வீகத்தில் அடிமைகளை இவ்வாறு மீட்கிறது சகஜம். இப்பதம் உருவகமாய் வழங்கியிருக்கிறது. மானிடரைத் தங்கள் அடிமைத்தனத்திலிருந்து ரட்சகர் விடுவிக்கிறார் தன் சித்தத்துக் கடிமையானவன் தெய்வசித்தத்துக்கு அடிமையாகிறான். நாம் ஒன்று மறக்கலாகாது. கடவுள் அதரிசனமானவராகையால், அவரைப்பற்றிய சகலமும் உவமைகளினாலே மாத்திரம் விவரிக்கப்பட வேண்டியதாயிருக்கிறது.

இந்த மீட்கும் பொருள் யாருக்கு—செலுத்தப்பட்டதென்பது திருச்சபையிலே வித்வான்களால் இந்நாள்வரையும் கேட்கப்படுகிற கேள்வி. சிலர் கடவுளுக்கு—என்றும், சிலர் சாத்தானுக்கென்றும் துணிந்திருக்கிறார்கள். எம்பெருமான் நமக்குப் பதிலாக மரணம் சகித்தார் என்பதற்குச் சத்திய வேதத்தில் யாதொரு ஆதாரமும் கிடையாது. மீட்பு, பலி, பாவவிமோசனம், பிணை, முதலான பதங்களெல்லாம் உவமை அலங்காரமாய் உபயோகிக்கப்பட் டிருக்கின்றன. கிறிஸ்து இவ்வுலகத்தி லவதரித்து அளவற்ற தெய்வ அன்பை மானிடருக்கு வெளிப்படுத்தினார். உலகம் அவரது தர்மத்தையும் தூய்மையையும் பொறுக்கமாட்டாமல் அவரைக் கொன்றது. அவர் அந்த அக்கிரமத்துக் கிடங்கொடுத்ததே அற்புதம்! அதுவே மானிடருக்கு ஈடேற்றமாகிறது. மானிடர் மனதை உருக்கி, அது பாவத்தை வெறுத்து, கடவுளை நேசிக்கச் செய்கிறது. உத்தம நீதிமானை உலகம் கொல்லுமென்று எம்பெருமானுக்கு 500 வருஷம் முந்தியிருந்த சாக்கிரேட்டிஸ் என்ற ஒரு சாதுசிரோமணி விளம்பினார். இது எந்நாளும் பொய்க்கிறதில்லை.

13. லேவியர் சட்டத்துக்குரிய இரண்டு முக்கியமான பலிகளையும் சடங்குகளையும் தெரிந்தெடுத்துப் பேசுகிறார் (லேவி. 16.). இவற்றோடு எண். 19. 1. 22—இலே சொல்லியிருக்கிற ஜல சுத்திகரிப்பையும் சேர்த்துரைக்கிறார். சரீர சுத்தி, மாமிச சுத்தி என மாற்றலாம். தீட்டு—பிணம் முதலானதுகளைத் தொட்டதினாலுண்டாகிய அசுசி. யூதர்கள் இதுவிஷயத்தில் மகாக் கண்டிப்புள்ளவர்கள். பிராமணர்கள் முதலியவர்களும் அப்படியே நடந்துகொள்ளுகிறார்கள்.

14. **நித்திய ஆவியினாலே.** திரியேக புருஷரில் ஒருவரான பரிசுத்தஆவியினாலே. இந்த அரும் ரகசியத்தை நம்மால் கிரகிக்க முடியாது. கிறிஸ்து "ஆவியினாலே உயிர்ப்பிக்கப்பட்டார். (1 பேது. 3. 18); "கடவுள் அவருக்குத் தமது ஆவியை அளவில்லாமல் கொடுத்திருக்கிறார்" (யோவா. 3. 34); "கர்த்தருடைய ஆவி அவர்பேரில் இருந்தார்" (லூக். 4. 18); "கடவுளின் ஆவியால்" பிசாசுகளைத் துரத்தினார் (மத். 12–28). சில பிரதிகளில் "நித்திய" என்பதற்குப் பதிலாக

"பரிசுத்த" என்றெழுதியிருக்கிறது. பாரர் வியாக்கியானி தம்மு டைய சொந்த ஆவியினுலே என்றும் உரைசெய்யலாமென்கிருர். லேவிய பலிகளில் பிராணிகள் சுயேச்சையின்றிக் கொல்லுண்டன; எம்பெருமானே சுயேச்சையாய்த் தம்மைத் தியாகஞ்செய்தார். அதா வது, தமது சொந்த ஆவியினுலே என்ருலும், பரிசுத்தஆவியினுலே என்கிறதே உசிதமாகத் தோன்றுகிறது. **பழுதற்ற**—இது நியாயந் தான். பலியிடப்பட்ட பிராணிகள் பழுதற்றவை; இது சட்டமுறை. அவ்வாறே நமதாண்டவரும் பாவரஹிதராயிருந்தார்; சரீரத்தில் மாத்திர மல்ல, தமது நெஞ்சிலும் பாவக்கூறை குறையற்றவர். 1 பேது. 1. 19 காண்க. **தேவனுக்கு** — கடவுளுக்கு, **செத்த கிரியைகளற**— அதி. 6. 1 பார்க்கவும். அன்பற்ற கிரியைகள். அன்பின் வழிய துயிர்நிலை என்ருர் திருவள்ளுவர். அன்பு நெஞ்சிற் பிறந்து, ஓர் திவ்ய ஊற்ருகிறது. அதினின்றும் உண்டாகும் செயல்கள், குணங் கள், சொற்கள் யாவும் உயிருள்ளவை. ஏனையவை யாவும் செத்தவை. பலிகள் தீட்டை நீக்கினதுபோல, கிரிஸ்துவின் இரத்தம் இருதயத் தீட்டைக் கழுவுகின்றது. கழுவிச் சுத்திகரித்து, வெறும் சடங்குகளை அநுசரிக்கவாவது, கூடாரத்தைத் தொழவாவது, மாமிசத்துக்குரிய ஆசாரங்களைக் கைக்கொள்ளவாவதல்ல, ஜீவனுள்ள கடவுளைச் சேவிக் கச்செய்கிறது. ரோம. 6. 13 காண்க.

9. 15-17.

15 ஆகையால் முதலாம் உடன்படிக்கையின் காலத் திலே நடந்த அக்கிரமங்களை நிவிர்த்தி செய்யும்பொரு ட்டு அவர் மரணமடைந்து, அழைக்கப்பட்டவர்கள் வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட நித்திய சுதந்தரத்தை அடைந்துகொள்வதற்காக, புது உடன்படிக்கையின் மத்தியஸ்தராயிருக்கிருர்.

16 ஏனென்ருல், எங்கே மரணசாதன முண்டோ, அங்கே அந்தச் சாதனத்தை எழுதினவனுடைய மரண

17 மும் உண்டாகவேண்டும். — எப்படியெனில், மரண முண்டானபின்பே மரணசாதனம் உறுதிப்படும்; அதை எழுதினவன் உயிரோடிருக்கையில் அதற்குப் பலனில் லேயே.

## எம்பெருமான் மரணம் இன்றியமையாததும் சக்தியுள்ளதும். (15—28).

15. **ஆகையால். இந்தக் காரணத்தினுலே**—என விரிக்கலாம். கிரிஸ்துவின் மரணத்துக்கு முகாந்தரம் கூறுகிறது. முதலாம் உடன் படிக்கைக்காலத்தில் உண்டான மீறுதல்களை நிவிர்த்தி செய்யும்பொருட்டு ஓர் மரணம் சம்பவித்திருக்க, அழைக்கப்பட்டவர்கள் வாக்குப் பெற்ற நித்திய சுதந்தரத்தைப் பெறும்படி, அவர் புதிய உடன்படிக் கையின் மத்தியஸ்தராயிருக்கிறூர். வாக்கியத்தை இவ்வாறு திருத்தி வாசித்தால் பொருள் கொஞ்சம் விளங்கும். இது கடினமான வாக்கியம். இதன் கருத்தைக்குறித்து அதிக வழக்குண்டாயிருக்கிறது. இங்கு மரணமென்றது இரட்சகர் மரணந்தான். முதல் உடன்படிக் கையின் காலத்தில் செலுத்தப்பட்ட மிருகஜீவன்களின் மரணங்கள் எம்பெருமான் மரணத்துக்கு முன்அடையாளமா யிருந்தன. இங்கு அறிகுறி மரணமும் ஆண்டவர் மரணமும் குறித்ததொன்றே—அதாவது, மீட்பு. இரட்சகரின் மரணம் முக்காலத்துப் பக்தருக்கும் பலிக்கின்றது. தற்காலத்திலிருக்கிற நாம் முன்னே நடந்த இரட்சகர் மரணத்தை நினைத்துப் பிழைக்கிறேம்; முற்காலத்திலிருந்தவர் பின்னே வரவிருந்த மேசியாவின் மரணத்தை விசுவாசித்துப் பிழைத்தார்கள்.

**அழைக்கப்பட்டவர்கள்.** முற்காலத்துப் பக்தரும், குணப்பட்ட யூதர்களும், கிரிஸ்தவர்களான அந்நியருமே. **புது உடன்படிக்கைக்கு**—மத்தியஸ்தரானூர். மோசே பழைய உடன்படிக்கை மத்தியஸ்தராயிருந்ததுபோல. மோசேயும் பலியிட்டார்; இயேசுவும் பலியிட்டார். ஆகிலும் ஓர் வித்தியாசம்: மோசே மற்ற ஜீவன்களைச் செலுத்தினூர்; இயேசுவோ தம்மைத்தாமே செலுத்தினூர். இரண்டுக்கும் மரணம் அவசியம். இந்தச் சத்தியம் உலகப் பிரசித்தமானது. கஷ்டமின்றி ஒருபயனும் கிட்டாது. "தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும் கல்வி." மரணத்திலிருந்துதான் உயிர் பிறக்கும். விளா பூமியில் விழுந்தழுகிச் செத்தால்தான், புதுச்செடி முளைக்கும். உலகத்துக் குயிர் வேண்டுமாயின், மீட்பர் ஒருவர் மரிக்கவேண்டும். தற்காலத்துப் பிரமாண்ட யுத்தத்திலே, செத்துக்கிடக்கும் தர்மத்துக் குயிர்பிறக்கக்

கோடானுகோடி உயிர்கள் இந்த மூன்று வருஷக்காலமாய் மாண்டு வருகின்றன. கடைசியில், தர்மம் உயிர்த்துத் தலைஎடுக்கும். இரட்சகர் மரித்ததால், பக்தனே, நீ பிழைக்கிறாய். உனக்குள் அன்பு உயிர்த்தெழுந்து உன்னைக் கடவுள் சேவகனாக்கிற்று. அவருக்கென்று பிழைத்துழைப்பாயாக.

16. முன்குறித்த மரணத்துக்கு நியாயங் கூறுகிறார். அதனால், வாக்கியத்தை ஏனென்றால் — என்றாரம்பிக்கிறார். **மரணசாதனம்** இது புதுத் தொடர்மொழி. ஒருவன் சாகுமுன் தன் சொத்து, சாமான்களைக்குறித்து ஒரு பத்திரமெழுதுகிறது வழக்கம். இது விசேஷமாகத் தனவான்கள் செய்கிற காரியம். ஹிந்துக்களுக்கு மரணசாதனம் உண்டாயிருக்கவில்லை எனத் தோன்றுகிறது. அதனாலே இங்கிலிஷ் வார்த்தையாகிய Will என்பதைத் தமிழிலே உயில் என வழங்கிவருகிறார்கள். இந்தச் சாதனத்துக்குக் குறைந்தது இரண்டு சாட்சிகளிருக்கவேண்டும். அதை ரெஜிஸ்டர் ஆபீசில் பதிவிக்கவும் வேண்டும். அந்தச் சாதனத்தின்படி மரித்தவன் சொத்துக்களை அவனால் ஏற்படுத்திய ஆசாமிகள் வசூல் செய்து, அவரவர்க்குப் பங்கிட்டுக் கொடுப்பார்கள். ஆயினும், அவன் இறந்தபின்புத்தான் அந்தச் சாதனம் செல்லும். **அங்கே— வேண்டும். அதைச் செய்தவன் மரணமும் அவசியம் நேரிடவேண்டும்** — எனத் திருத்துக. மூலத்தில் ஒரேவார்த்தை உடன்படிக்கைக்கும் மரணசாதனத்துக்கும் உபயோகித்திருக்கிறது. உடன்படிக்கைகளிலே மரணத்தின் முக்கியத்தைக் காண்பிக்கிறார். பழைய உடன்படிக்கையிலே மிருகஜீவன்கள் செத்தன; புதிய உடன்படிக்கையிலே எம்பெருமான் மரித்தார். இவற்றுக்கு மரணசாதனங்கள் யாவை? பழையதில் வாக்குச்செய்த கானான்நாடு, சந்ததிப்பெருக்கம், லௌகீக ஆசீர்வாதங்களாகிய அஷ்டபாக்கியங்கள், நீடிய ஆயுசு, பரம ஓய்வு, பாவவிமோசனம், பரிசுத்த மனம், சன்மார்க்க ஜீவியம், நித்யசமாதானம் முதலியன. புதிய உடன்படிக்கையிலே கிருபாசனத்துக்குள் செல்லுகிறதில் அடங்கிய சகல ஆசீர்வாதங்களும்—இதுகளெல்லாம் ரட்சகரின் மரணத்துக்குப் பின்பு கிடைத்தன. "நான் போனால்தான் பரிசுத்தஆவி வருவார்" என்று அவர் தாமே தமதடியாருக் குரைத்தார். "நான் போகிறது உங்களுக்கு நலம்."

17. **எப்படியெனில்** மு. இதை: **மரணத்துக்குப் பின்புதானே மரணசாதனம் பலிக்கும், அதைச் செய்தவன் உயிரோடிருக்கையில் அது பயன்படுமா?** என மொழிபெயர்க்கலாம். நிருபாசிரியரின் நியாயப்போக்காவது: உடன்படிக்கைக் கெவ்வாறோ, அவ்வாறே மரணசாதனத்துக்கும் மரணமே பயன்தரும் கருவி. உலகவழக்கை நீங்களே ஆண்டாராய்ந்து பாருங்கள் ஏ-று. பழைய உடன்படிக்கை புதியதைப்போல மரணசாதனமா யிருக்கவில்லை. நற்கருணையிலே ரட்சகர் தமது புதிய உடன்படிக்கையைக் குறித்துப் பேசுகிறார். அவர் மரித்தபின்புதான் பரிசுத்தஆவி யிறங்கினார். பேதுரு புது மனுஷனான்—புது ஞான சொத்துக்களைச் சுதந்தரித்தான்—எம்பெருமான் வைத்துப்போன மரணசாதனம் அவனிடத்திலும் அவன் சகோதரரிடத்திலும் பூர்த்தியாய்ப் பலித்தது.

9. 18-22.

18 அந்தப்படி, முதலாம் உடன்படிக்கையும் இரத்தமில்
19 லாமல் பிரதிஷ்டை பண்ணப்படவில்லை.— எப்படியெனில், மோசே, நியாயப்பிரமாணத்தின்படி, சகல ஜனங்களுக்கும் எல்லாக் கட்டளைகளையும் சொன்ன பின்பு, இளங்காளை வெள்ளாட்டுக்கடா இவைகளின் இரத்தத்தைத் தண்ணீரோடும், சிவப்பான ஆட்டுமயிரோடும், ஈசோப்போடுங்கூட எடுத்து, புஸ்தகத்தின்
20 மேலும் ஜனங்களெல்லார்மேலும் தெளித்து:—தேவன் உங்களுக்குக் கட்டளையிட்ட உடன்படிக்கையின் இரத்
21 தம் இதுவே என்று சொன்னான்.— இவ்விதமாக, கூடாரத்தின்மேலும் ஆராதனைக்குரிய சகல பணிமுட்டுக
22 ளின்மேலும் இரத்தத்தைத் தெளித்தான்.—நியாயப்பிரமாணத்தின்படி கொஞ்சங்குறைய எல்லாம் இரத்தத்தினாலே சுத்திகரிக்கப்படும்; இரத்தஞ் சிந்துதலில்லாமல் மன்னிப்பு உண்டாகாது.

18. **அந்தப்படியே** எனத் திருத்தலாம். **இரத்தமில்லாமல்—** அதாவது மரணமில்லாமல்; இரத்தஞ் சிந்துதலில்லாமல், இந்தச் சடங்கு ஹிந்துக்களின் பிராயச்சித்த ஆசாரங்களில் முக்கியமானது. ஆட்டுக்கடா வெட்டுகிறது எங்கும் சாமானியம். கல்கத்தாவில் காளிகாட்டென்கிற ஓரிடமுண்டு. ஆயிரமாயிரமான பங்காளிகள் நாளது

வனையும் அங்குள்ள காளிகோவிலுக்குப் போய் ஆடுகளறுத்துப் பலியிடுகிறது வழக்கம். தென்னிந்தியாவிலும், இந்த உதிரம் சிந்தல் ஏராளமாக நடக்கிறது. பெரியபாளையத்துக் காளிகோவிலுக்கு எல்லாஜாதிகளும் போய் ஆட்டுக்கடா பலியிட்டு வருகிறார்கள். இரத்தத்தோடு **பிரதிஷ்டை** செய்யப்பட்ட சடங்கைப் பின்வாக்கியத்திற் காண்க.

19. **எல்லாக் கட்டளைகளையும். ஒவ்வொரு கட்டளையையும்** என மாற்றுக. **நியாயப்பிரமாணத்தின்படி;** சட்டத்திற் கேற்க. யாத். 24. 5. 8. 12. 22; எண். 19. 6; லேவி. 14. 4-6 காண்க. **புஸ்தகத்தின்மேலும்.** புஸ்தகம் தெளிக்கப்பட்டது சொல்லப்படவில்லையாயினும், இது யூதருடைய பாரம்பரை ஐதீகமாம். புஸ்தகமென்றது மோசேக்கு வெளிப்படுத்தியவைகள் எழுதப்பட்ட சுவடி. (யாத். 22. 22, 23.)

20. தெளிக்கும்பொழுது மோசே மகாத்மா உரைத்த வார்த்தைகள்: கடவுள் உங்களுக்குக் கட்டளையிட்ட உடன்படிக்கையின் இரத்தம் இதுவே. இதற்கும் நற்கருணையை ஏற்படுத்துகையில் இரட்சகர் உரைத்த மொழிகளுக்குமுள்ள ஒற்றுமையைக் கவனியுங்கள் (மத். 26. 28). முக்கியமாக, "**இரத்தம் இதுவே**" என்னும் சொற்களை உற்றுக் கவனியுங்கள். "சிந்தி, செலுத்தி, தெளிக்கப்படுகிற இந்த உதிரமானது கடவுள் தீர்மானங்களின் சக்தியை விளக்குகிறது" என்று மோசே விளம்பியதுபோல்.

21. **பணிமுட்டுகளின்மேலும். பாத்திரங்கள்மேலும்.** கூடாரத்தையும் பாத்திரங்களையும் தெளித்த வரலாறு யாத்திரா ஆகமத்திற் காணோம். லேவி. 8. 30–இலும் 16. 14–இலும் பிற்பாடு அவ்வாறு நடந்ததாகச் சொல்லியிருக்கிறதால், நிருபாசிரியர் ஆரம்பத்திலும் அப்படியே தளிக்கப்பட்டதென்று பாரம்பரையாய் அறிந்திருக்கலாம். யூதர்களுக்குள்ளே வேதாகமங்கள் தவிர, பாரம்பரையாய் வந்த விஷயங்கள் அடங்கிய புஸ்தகங்கள் வேறு பலவிருந்தன.

22. இவ்வாக்கியத்தை: **சட்டத்தின்படியே, சகலமும் இரத்தத்தினாலே சுத்திகரிக்கப்படுகிறது; இரத்தஞ் சிந்துதலில்லாமல் மன்னிப்புக் கிடையாதென்று சொல்லத் துணிகிறேன்**—என மொழி

பெயர்க்கவேண்டும். சிலவற்றுக்கு இரத்தந் தெளித்தல் இல்லை (யாத். 19. 10; லேவி. 5. 11–13; 15. 5; 16. 26 மு காண்க. பலிபீடத் தண்டை உதிரம் ஊற்றப்பட்டது. (யாத். 29. 16 மு.)

9. 23-28.

23 ஆதலால், பரலோகத்தி லுள்ளவைகளுக்குச் சாய லானவைகள் இப்படிப்பட்ட பலிகளினாலே சுத்திகரிக் கப்பட வேண்டியதாயிருந்தது; பரலோகத்திலுள்ளவை களோ இவைகளிலும் விசேஷித்த பலிகளாலே சுத்தி 24 கரிக்கப்பட வேண்டியதாமே.—அந்தப்படி, மெய்யான பரிசுத்த ஸ்தலத்துக்கு அடையாளமான கையினால் செய்யப்பட்டதாயிருக்கிற பரிசுத்த ஸ்தலத்திலே கிறிஸ் துவானவர் பிரவேசியாமல், பரலோகத்திலே தானே இப்பொழுது நமக்காக தேவனுடைய சமுகத்தில் பிரத் 25 தியட்சமாகும்படி பிரவேசித்திருக்கிறார். — பிரதான ஆசாரியன் அந்நிய இரத்தத்தோடே வருஷந்தோறும் பரிசுத்த ஸ்தலத்துக்குள் பிரவேசிக்கிறதுபோல, அவர் அநேகந்தரம் தம்மைப் பலியிடும்படிக்குப் பிரவேசிக்க 26 வில்லை. — அப்படியிருந்தால், உலகமுண்டானது முதற்கொண்டு அவர் அநேகந்தரம் பாடுபடவேண்டிய தாயிருக்குமே; அப்படியல்ல, அவர் தம்மைத்தாமே பலியிடுகிறதினாலே பாவங்களை நீக்கும்பொருட்டாக இந்தக் கடைசிக்காலத்தில் ஒரேதரம் வெளிப்பட்டார்.— 27 அன்றியும், ஒரேதரம் மரிப்பதும், பின்பு நியாயத்தீர்ப் படைவதும், மனுஷருக்கு நியமிக்கப்பட்டிருக்கிறபடி 28 யே,—கிறிஸ்துவும் அநேகருடைய பாவங்களைச் சுமந்து தீர்க்கும்படிக்கு ஒரேதரம் பலியிடப்பட்டு, தமக்காகக் காத்துக்கொண்டிருக்கிறவர்களுக்கு இரட்சிப்பை அரு ளும்படி இரண்டாந்தரம் பாவமில்லாமல் தரிசன மாவார்.

23. **சாயலானவைகள்.** பிரதிகள், நிழல்போன்றன. கூடாரம், தேவாலயம், ஆசாரியர், ஆராதனைகள் முதலியன. சடங்காசார அசுசி கள், தீட்டுகள், பிணிகள் முதலியன. **இப்படிப்பட்ட பலிகளி னாலே**—மேற்சொல்லிய லேவிய பலிகள், காணிக்கைகள் முதலியன. **பரலோகத்திலுள்ளவைகள்** — பரமகூடாரம், கிருபாசனம், சுத்த

மனச்சாட்சி, பாவவிமோசனம் முதலானவை. விசேஷித்த—நல்ல தான, உயர்ந்த என்பதே கருத்து; முக்கியமன்று. பரலோகத்திலுள்ள வைகளும் கடவுட் பார்வையில் அசுசியானவையே. **பலிகளாலே—** பலி ஒன்றே; எம்பெருமான் செலுத்தியது; ஆனால் இங்கே பொது விலே பன்மையை உபயோகித்திருக்கிறார்.

24. இவ்வாக்கியத்தை: **மெய்யானதுக்கு மாதிரியானதும் கைக ளாற் செய்ததுமான பரிசுத்த ஸ்தலத்திற் கிறிஸ்து பிரவேசியாமல், நமக்காக இப்பொழுது கடவுள் முகத்திற் காணப்பட, பரலோகத் திற் குள்ளேயே பிரவேசித்திருக்கிறார்:** என மொழிபெயர்க்கவேண் டும். மெய்யான பரிசுத்த ஸ்தலம் பரத்திலிருக்கிறது; உருவகார்த்த மாய் அது கடவுள் முகம்; அதாவது, தெய்வஜோதி. இதுவும் உருவ கந்தான். கடவுளிடத்தினின்று வெளிவந்தவர் தமது கடனை நிறை வேற்றி மறுபடியும் மகிமைக்குள் பிரவேசித்தார். கடவுள் எங்கெங் கும் வியாபித்திருக்கிறபடியால், அவர் மகிமை விசேஷமாய் விளங்கு கிற இடமே பரலோகம். ஆனதுபற்றி, எம்பெருமான் கடவுளை முகமுகமாய்ப் பார்க்கிறார். மோசே அவரது மகிமையைமாத்திரம் கண்டார் (யாத். 40. 34. ஹ). பிரதான ஆசாரியன் இருண்ட மகாப் பரிசுத்த ஸ்தலத்தில் நடுநடுக்கத்துடன் நுழைந்து அங்கு இலங்கிய சுடரைக் கண்டான். இந்த உயர்ந்த உத்தியோகஸ்தனைவிட, மகாத்மா வான மோசேயைவிட, கிறிஸ்துவின் பக்தருக்குக் கிடைக்கிற சிலாக்கி யம் எத்தனை சிறந்தது! கடவுள் முகத்தையே காண்பார்கள். சிவன் காட்சிபெறச் சிவனடியார் என்னென்ன முயற்சி செய்கிறார்கள்; அந்தப் பொய்க்காட்சிக்காக! இருதயத்தில் தூயவர் இறைவனைக் காண்பார்கள் என்று இரட்சகர் உரைத்திருக்கிறார்.

25. **தம்மை அடிக்கடி (பலி)யிடும்படியுமல்ல; பிரதான ஆசாரி யன் தனதல்லாத இரத்தத்துடன் பரிசுத்த ஸ்தலத்துக்குள் வருஷந் தோறும் பிரவேசித்ததுபோல—**பாவவிமோசன தினத்திற் பிரதான ஆசாரியன் செய்த இந்த ஒரு காரியந்தான் யூதர்களின் சடங்காசாரங் கள் யாவற்றிலும் பயங்கரமும் கெம்பீரமுமானது. இதற்கு நிகரானது ஏனைய மார்க்கங்கள் எதிலும் கிடையாது. ஆகையால்தான் அப் பொல்லோ இரட்சகரின் பிரவேசத்தை இதனுடன் ஒப்பிட்டு, இரண்

டுக்குமுள்ள தாரதம்மியத்தை விளக்குகிறூர். இரண்டு உடன்படிக் கைகளுக்கும் இந்தப் பிரவேசந்தான் மையம்; சக்கரம் சுழல்கின்ற அச்சாணி. வருஷத்தில் இந்த ஒருநாள்தான் அவர்களுக்குத் திரு நாள்; மற்றதெல்லாம் வெறுநாள். அதைப் பூர்வ ஓய்வுநாள் என்பார் கள். அது ஒன்றே அவர்கள் உபவாசத்தினம் அதற்கு முந்தின தினத்தில் அடித்த 70 எருதுகளும் உலகத்தின் 70 ஜனத்தின் பாவ விமோசனத்துக்காகவாம். அன்றைக்கு சுவர்க்கத்து தூதர்கள் முத லாய் நடுநடுங்குவார்களாம். அன்றொரு தினத்தில்தான் சகல அக்கிர மங்களுக்கும் முழுமன்னிப்புக் கிடைக்கும். குற்றஞ் சாட்டுகிறவஞ கிய சாத்தான் அன்றொருநாள்மட்டும் குற்றஞ் சாட்டுவதில்லை. எவ்வா றெனின் அவன்பேருக்கு எழுத்தால் 364 நாள் என்றர்த்தமாம். வரு



ஷத்தில் இத்தொகைநாட்கள் போக, 365—ம் தினம் இத்தினமாம். அதற்கு முந்திய எழுதினமும் பிரதான ஆசாரியன் பிரத்தியேகமா யிருக்கவேண்டும். அதற்கு முந்திய இரவு முழுதும், அசுசியாகாதபடி, அவன் நித்திரை நீங்கி யிருத்தல்வேண்டும். மகாப் பரிசுத்த ஸ்தலத்தில் நுழைகிறது பேரபாயமானதால், அவன் வெளியே வருமளவும் ஜனங் கள் திகிலடைந்து ஏங்கியிருப்பார்கள். போக்காட்டின் கழுத்தில் கட்டியிருந்த சிவப்புச்சீலையின் தொங்கல் எருசலேமின் அழிவுக்கு முந்தி 40 வருஷமாக வெள்ளையாய் நிறமாறிவிட்டதாம். இந்தப் பயங்கர தினத்தைப்பற்றி யூதர்களுக்குள்ளே இதுபோன்ற இன்னும் அனந்த ஐதீகங்கள் வழங்கிவந்தன. **தனதல்லாத இரத்தம்**—ஆட்டின் இரத்தமும் எருதின் இரத்தமும். ஆபிரகாம் விருத்தசேதனம் அடைந் தது பாவ விமோசனநாளென்றும், அன்று கடவுள் விருத்தசேதன உடன்படிக்கையை நினைத்துக்கொள்ளுகிறாரென்றும் ரபிமார் நூல் கள் ஒன்றில் கூறியிருக்கிறது.

**அடிக்கடி.** எம்பெருமான் தம்மைப் பலிசெலுத்தினது ஒரேதரம். அவரது மரணத்தின் அருமை அத்தனை பெரிது! இதற்கு நியாயம் அடுத்த வாக்கியத்திற் காண்க.

**26. அப்படியிருந்ததானால். அவ்வாறயின். உலகமுண்டானது முதல்**—உலக அஸ்திபாரம்முதல். **அநேகந்தரம் பாடுபட** — இது முடியாத காரியம். மரித்தபின்பு மறுபடியும் மரிக்கக்கூடாது. ஒருவ னைக் கொன்றவனுக்கும் ஒரே தூக்கு, ஆயிரம்பேரைக் கொன்றவனுக் கும் ஒரே தூக்கு. இரட்சகரின் ஒரே மரணம் பூர்த்தியான விமோ சனம். அதன் மார்க்கமாக அவர் மகாப் பரிசுத்த ஸ்தலத்துக்குள் பிரவேசித்துவிட்டார். **பாவங்களை நீக்கும்படிக்கு, பாவத்தை ஒழித்துவிட**—எனத் திருத்தவேண்டும். வாக்கியத்திலிருக்கும் வார்த் தைக்கு உறுதி போதாது. இனிப் பாவத்துக்குச் சக்தி கிடையாது; அது ஒழிக்கப்பட்டது. அதன் பழியும் பலமும் ஒழிந்தன. **கடை சிக்காலத்தில், யுகாந்தத்திலே** — முதல் உடன்படிக்கைக்காலத்தின் முடிவிலே. மத். 13. 39. 40; 24. 3; 28. 20. **வெளிப்பட்டார்**— திரு அவதாரமானார். அதி. 1. 1; 1 கொரி. 10. 11; 1 தீமோ. 3. 16; 1 பேது. 1. 20.

27. **நியாயத்தீர்ப்படைவதும்.** தீர்ப்பு (வருவது)ம். இந்தப் போதனை கிறிஸ்துமார்க்கம் ஒன்றுக்கே உரியது. ஒவ்வொரு மனிதனுக்கும் தீர்ப்புக் கிடைக்குமென்பது சிறந்த சத்தியம். அப். 17. 31–இலே சொல்லியிருக்கிற பொதுவான தீர்ப்பன்று மரித்த உடனே வருகிற தீர்ப்பு. ஹிந்துக்கள் கர்மமும் பல உடலெடுக்கிறதுமாகிய ஒருவிதக் குருட்டுத்தீர்ப்பைப் போதிக்கிறார்கள். ஒவ்வொருவரும் மரித்தஉடனே தன் நல்வினை தீவினைக்குத் தக்க உடலெடுத்து, மறுபடியும் மரித்து, இன்னுமோர் உடலெடுத்து இவ்வாறு நித்யமாய் எத்தனையோ ஆயிரமாயிரமான உடலெடுப்பானென்று நினைக்கிறார்கள். அவ்வாறாயின் ஆதிகாலத்தில் முதல் முதல் மனிதனும் மிருகமாயும் பயிர் பூண்டாகவும் உடலெடுத்ததற்குக் காரணம் சொல்லவேண்டுமே. அன்றி, இக்கருமத்தின் பயன் யாது? நாமிருக்கும் உடலிலே முற்பிறப்பிற் செய்த நல்வினை தீவினை ஞாபகம் தினைத்துணையும் இல்லையே. இந்த உபதேசத்தை பகவத்கீதையிற் காண்க.

அனேகருடைய–எல்லாருடைய என்பதுதான் கருத்து. ஆகிலும்: இரட்சிக்கப்படுகிறவர்கள் சிலர்தாமே.

28. **சுமந்து தீர்க்கும்படி, சுமக்கும்படி**–எனத் திருத்துக. 1 பேது. 2. 24; அல்லது ஏசா. 53. 12. **காத்துக்கொண்டு** ஃ. **காத்திருக்கிறவர்களுக்கு** — அவருடைய வருகையை எதிர்பார்த்திருக்கிறவர்கள். **இரட்சிப்பை** — இரட்சிப்பு. **பாவமில்லாமல்** — யாதொரு பாவ சம்பந்தமின்றி. பாவமற்றவர் தாமாகிலும், முதல் வருகையில் பாவத்தைச் சிலுவையிற் சுமந்தாரே–அவ்வாறு ஒன்றும் சுமக்காமல், உலகத்துப் பாவபார மற்றவராய் எ–று. ஏசா. 53. 12; 2 கொரி. 5. 21 காண்க. மனிதனுக்குத் தீர்ப்புண்டானாலும், அவனிடம் வருகிற இரட்சகன் கையில், தீர்ப்பல்ல, இரட்சிப்புண்டு. இது என்ன உசிதமான அறிவிப்பு! **தரிசனமாவார்**—தோன்றுவார். எப்படித் தோன்றுவார்? காத்திருக்கும் பக்தனுக்கு பரிசுத்த ஸ்தலத்துக்குக் கொண்டுபோகும் இரட்சகனாகவே தோன்றுவார்.

மேற்படி அத்தியாயத்திலமைந்திருக்கும் தாரதம்மியங்களைப் பாரர் வியாக்கியானி பின்வருமாறு தொகுத்துரைக்கிறார்: ஆரோனின்

சந்ததியார் சாமானிய ஆசாரியர்; கிறிஸ்து, மெல்கிசேதேக்கைப் போல, ஆசாரியரும் அரசருமானவர். அவர்கள் சிறிதுகாலத்தவர்; அவரோ நித்ய ஆசாரியர். அவர்கள் நீண்ட சங்கிலியிலே வளையங்கள், முன்னோர் வைத்ததைப் பெற்று, வருஞ்சந்ததிக்கு வைத்து மறைந்தார்கள்; அவரோ, தனிமையாய் நிற்கிறார்; வமிச அட்டவணையு மில்லாதவர், பின்சந்ததியு மில்லாதவர்; அவர்கள் தற்கால ஏற்பாட்டினால் நியமிக்கப்பட்டார்கள்; அவரோ, நித்திய ஆணையினால் அபிஷேகம் பெற்றார். அவர்கள் பாவிகள், அவரோ பாவமற்றவர். அவர்கள் பலவீனர்; அவரோ சர்வசக்தர். அவர்கள் பலிகளுக்குச் சக்தி கிடையாது, அவர் செலுத்தின் பலியோ பூரணமானது. அவர்கள் பலிகள் நாள்தோறும் செலுத்தப்பட்டன; அவருடையதோ ஒரேதரத்தில் செலுத்திவிடப்பட்டது. அவைகள் வெளிப்புறத்தீட்டை நீக்கின; அவருடையதோ மனச்சாட்சியை அறச் சுத்திகரிப்பது. அவர்கள் ஆலயம் ஓர் பிரதியும், அவர்கள் ஆராதனை ஓர் நிழலுமாயிருந்தன; அவரதாலயமோ அப்பிரதிக்கு முதலும், அவரது சேவை அந்நிழலுக்குப் பொருளுமாயிருந்தது. அவர்கள் மரித்து ஒழிந்துபோனார்கள்; அவரோ நமக்காகப் பரிந்துபேச, கடவுள் வலப்பக்கம் வீற்றிருக்கிறார்; அவர்கள் உடன்படிக்கை ஒழியும்படி தீர்ப்புப்பெற்றது; விசேஷித்த வாக்குறுதியின்பேரில் ஸ்தாபிக்கப்பட்ட அவருடைய உடன்படிக்கையோ முடிவுபரியந்தம் நிலைத்திருக்கிறது. அவர்கள் பிரதான ஆசாரியன் வருஷத்துக் கொருமுறைமாத்திரம் ஆடுமாடுகளின் உதிரத்தோடு வெகு பயபக்தியாய் ஓர் சாதாரண அறைக்குள்ளே பிரவேசித்தான்; அவரோ, தமது பூரணமான பலியின் உதிரத்தோடு வானங்களின் வானத்துக்குள்ளே பிரவேசித்து, கடவுள் சமுகத்தில் இடைவிடாமலும் தாராளமாயும் அணுகத்தக்க ஸ்வாதீனத்தை எல்லாருக்கும் அருளியிருக்கிறார். இவ்வாறாயின், புதியதும், சிறந்ததும், பூர்த்தியானதுமான ஏற்பாட்டைக் கிறிஸ்து நமக்குச் சம்பாதித்திருக்க, அற்பமான லேவிய ஏற்பாடென்னும் நிழலை இன்னும் ஆவலாய் உற்றுப்பார்க்கிறது என்ன பாவம், என்ன மதியீனம்! அவருடைய ரத்தம் பூர்வ ஏற்பாட்டின் உதிரத்தைப்போலிராமல் மிக்கப் பயன்

பெற்றதாயிருக்க, பாவமில்லாத தேவகுமாரனாகிய அவர் நமக்காகத் தனிமையாகவும் ஒரே பலியாகவும் தம்மைச் செலுத்தி, பாவத்தையும் மரணத்தையும் வென்ற நித்திய ஜயவீரராய் நம்முடைய இரட்சிப்புக்கென்று இரண்டாந்தரம் வரவிருக்கிறாரே!



## 10. அதிகாரம்.

### அதிகார விஷயம்.

இவ்வதிகார ஆரம்பத்திலே நிருபாசிரியர் மேற்சொல்லிய விஷயங்களைத் தொகுத்தும் நன்கு விளக்கியும் உரைக்கிறார்: (1) கிறிஸ்துவின் ஒரேபலி அனேகமான லேவிய பலிகளோடு ஒப்பிட்டுக் காட்டியது (1–10); அவர் முடித்த யாகசேவையின் பரிபூரண லட்சணம் (11–18); சிறந்த புத்திகள் (19–25); கண்டிப்பான எச்சரிப்புகள் (26–31); உற்சாக வார்த்தைகள். (32–39)

10. 1-4.

1 இப்படியிருக்க, நியாயப்பிரமாணமானது வரப்போகிற நன்மைகளின் பொருளாயிராமல், அவைகளின் நிழலாய்மாத்திரம் இருக்கிறபடியால், வருஷந்தோறும் இடைவிடாமல் செலுத்தப்பட்டுவருகிற ஒரேவிதமான பலிகளினாலே அவைகளைச் செலுத்த வருகிறவர்களை
2 ஒருக்காலும் பூரணப்படுத்தமாட்டாது.–பூரணப்படுத்துமானால், ஆராதனை செய்கிறவர்கள் ஒருதரம் சுத்தமாக்கப்பட்டபின்பு, இன்னும் பாவங்களுண்டென்று உணர்த்தும் மனச்சாட்சி அவர்களுக்கு இல்லாதிருப்பதினால், அந்தப் பலிகளைச் செலுத்துகிறது நிறுத்தப்படுமல்லவா?–
3 அப்படி நிறுத்தப்படாதபடியால், பாவங்கள் உண்டென்று அவைகளினாலே வருஷந்தோறும் நினைவுகூரு
4 தல் உண்டாயிருக்கிறது.—அல்லாமலும், காளை வெள்ளாட்டுக்கடா இவைகளுடைய இரத்தம் பாவங்களை நிவிர்த்தி செய்யமாட்டாதே.

1. **நியாயப்பிரமாணமானது.** அல்லது, **சட்டமானது** அதாவது, லேவிய உடன்படிக்கை அல்லது ஏற்பாடு. **வரப்போகிற நன்மை**

கள். வரவிருந்த கிரிஸ்துவின் அருட்பிரசாதங்கள். போருளாயிரா மல். **அச்சுருவாயிராமல்** எனத் திருத்தலாம். **ஓரேவிதமான பலிகள்**—இது தினந்தோறும் செலுத்தப்பட்ட பலிகளையும், வருஷந்தோறும் பிரதான ஆசாரியனால் செலுத்தப்பட்ட அதி முக்கியமான பலியையும் குறிக்கும். இதுகளனைத்தும் ஒரேவிதமானவை. வேற்றுமை கிடையாது. சட்டமானது • பூரணப்படுத்தமாட்டாதென முடிக்க வேண்டும். **அவைகளைச் செலுத்துகிறவர்களை.** இதை: **சமீபிக்கிற வர்களை** எனத் திருத்தவேண்டும். அதாவது, பலிமிருகங்களுடன் பீடத்தண்டை வருகிறவர்களை எ—று. பாவஞ்செய்து, செய்து குருவினிடம் அறிக்கையிட்டு மன்னிப்புப்பெற்றதாக வாக்குக்கேட்டு மறுபடியும் போய் முன்போலப் பாவச்சேற்றிலே அமிழ்ந்துபோகிற கிரிஸ்தவர்களைப்போல, யூதர்கள் பல பலிசெலுத்தியும் யாதொரு குணமாறுதலும் அடையாமல் சீர்கெட்டிருந்தார்கள். சட்டம் நிழலாகவும், சுவிசேஷம் சிலையாகவும், கிரிஸ்து சுவர்க்கத்திலிருக்கும் மெய்ப்பொருளாகவும் பாவித்திருக்கிறது.

2. அந்தப் பலி செலுத்த நிறுத்தப்படாமையினாலே அப்பலிகளின் அபூரணம் திருஷ்டாந்தமாகிற தென்கிறார். **பூரணப்படுத்துமானால்.** இவ்வார்த்தைகள் மொழிபெயர்ப்பல்ல, பொருள் பெயர்ப்பெனல் வேண்டும். **அன்றேனின்** எனத் திருத்தவேண்டும். **ஆராதனை செய்கிற வர்கள்.** ஆராதிக்கிறவர்கள் எனச் சுருக்கலாம். **இன்னும் பாவங்கள் உண்டென்று உணர்த்தும்:** இதுவும் பொருள் பெயர்ப்பு அல்லது பொழிப்புரை. இதை: **இன்னும் பாவங்களைப்பற்றிய உணர்ச்சி** எனத் திருத்தலாம். அதாவது, பாவச்செயலைக்குறித்து உண்டாகும் மனக்குடைச்சல்—பலி பூரணமானால், இந்தக் குடைச்சலிராது. இராதாயின், இனிப் பலிகள் ஏன்? பாவஞ்செய்யும் குணம் நீங்கியிருக்குமே—அவர்களுக்கு இல்லாதிருப்பதினால். முதல் வார்த்தை நீங்க வேண்டும். **அந்தப் பலிகளைச் செலுத்துகிறது. அப்பலி செலுத்தல் நிறுத்தப்பட்டிருக்குமல்லவா?** எனத் திருத்துக. பலிகளினால் பரிசுத்தமாக்கப்பட்டால், இன்னும் பலியிடுவானேன் என்பதே இவ்வாக்கியத்தின் கருத்து.

3. **அப்படி நிறுத்தப்படாதபடியால்.** இவ்வார்த்தைகள் மூலத்தி லில்லை; தெளிவுக்காக வருவிக்கப்பட்டன. வாக்கியத்தை: **ஆனால் அப்பலிகளினாலே வருஷந்தோறும் பாவங்களைப்பற்றிய ஞாபகம் வருகிறது.** எண். 5. 15. பீலோ என்கிறவரும் பலிகளினாலே "பாவத் தின் மறதியற்று, அதன் ஞாபகம்தான் உண்டாகிறது" என்கிறார். ஆகிலும், மனஸ்தாபத்தோடும் விசுவாசத்தோடும் செலுத்தப்பட்ட பலி கள் இனி வரும் பாவவிமோசனத்துக்கு அறிகுறிகளாயின.

4. அல்லாமலும், மூ. **ஏனென்றால். எருது, ஆடு–இவற்றின்இர த்தம் பாவங்களை நீக்கவே முடியாது** என்று திருத்தலாம். இது அதி முக்கியமான சத்தியம். இப்பலிகள் அறிகுறிகளேயன்றி, தம்மில் தாமே யாதொரு பாவ நிவிர்த்திச்சக்தியும் அற்றவைகள். இது பழைய ஏற்பாட்டுக்காலத்திலிருந்த எல்லாப்பக்தருக்கும் பூர்த்தியாய்த் தெரிந்தவிஷயம். இதற்குத் திருஷ்டாந்தமாக 1 சாமு. 15. 22; ஏசா. 1. 11–17; எரே. 6. 20; 7. 21–23; ஆமோ. 5. 21–24; மீகா. 6. 6–8; தீத். 40. 6–8 (அடுத்த வாக்கியத்தில் எடுத்துரைத்திரு க்கிறது); சங். 50, 51 வாசித்துப்பாருங்கள். நிருபாசிரியர் நூதனமாய் ஒன்றுஞ் சாதிக்கவில்லை. உள்ளபடி உண்மையைத் தெற்றென விள க்குகிறார். ஓசி. 6. 6–ஐ எம்பெருமான் அடிக்கடி எடுத்துக் கூறி னதுண்டு; அதிலே பலிகளைப்பற்றிய உண்மையான உபதேசம் அமைந்திருக்கிறது. சரிதை, கிரியைகளினாலே ஞானமெய்தல் அரிது. ஊத்தைபோனாலும் அகப்பேய், உள்வினை தீராதே என்று தமிழ்ப் பக் தரும் ஸ்நானானுஷ்டானங்களின் அசக்தியைப்பற்றிப் பிரலாபித் திருக்கிறார்கள். பரிசுத்தமில்லாத பலி பயனற்றது. புறத்தைப்பற்றிய சடங்குகளினாலே, உள்ளான பரிசுத்தம் உண்டாகாது. இச்செயல் களைவிட, கொர்நேலியுவைப்போல, கடவுளுக்குப் பயந்து, சன்மார்க்க மாய் ஜீவித்து, நன்மைசெய்கிறது அவருக்குப் பிரீதி; இது முதற்படி; இதிலிருந்து இன்றியமையாத இரண்டாம்படியாகிய இரட்சகனை அண்டிக்கொள்வார்கள்.

10. 5-10.

5 ஆகையால் அவர் உலகத்தில் பிரவேசிக்கும்போது: பலியையும் காணிக்கையையும் நீர் விரும்பவில்லை, ஒரு

6 சரீரத்தை எனக்கு ஆயத்தம் பண்ணினீர்;—சர்வாங்க தகன பலிகளும், பாவநிவாரண பலிகளும் உமக்குப் பிரி
7 யமானதல்ல என்றீர்.—அப்பொழுது நான்: தேவனே, உம்முடைய சித்தத்தின்படி செய்ய, இதோ, வருகிறேன்; புஸ்தகச்சுருளில் என்னைக்குறித்து எழுதியிருக்
8 கிறது என்று சொன்னேன் என்றார்.—நியாயப்பிரமாணத்தின்படி செலுத்தப்பட்டுவருகிற பலிகளைக்குறித்து மேற்சொல்லியபடி: பலியையும், காணிக்கையையும், சர்வாங்க தகனபலிகளையும், பாவநிவாரண பலிகளையும் நீர் விரும்பவில்லை, அவைகள் உமக்குப் பிரியமானதல்ல
9 என்று சொன்னபின்பு:—தேவனே உம்முடைய சித்தத்தின்படி செய்ய, இதோ, வருகிறேன் என்று சொன்னார். இரண்டாவதை நிலைநிறுத்துவதற்கு முதலாவதை
10 நீக்கிப்போடுகிறார்.—இயேசுகிறிஸ்துவினுடைய சரீரம் ஒரேதரம் பலியிடப்பட்டதினாலே, அந்தச் சித்தத்தின்படி நாம் பரிசுத்தமாக்கப்பட்டிருக்கிறோம்.

5. இதுமுதல் மூன்று வாக்கியங்களிலே சங். 40. 6–8 எடுத்துரைக்கிறார். அவர் உலகத்திற் **பிரவேசிக்கும்**பொழுது என்கிற வார்த்தைகள் அதற்கு முகவுரை. இந்தச் சங்கீதம் முழுவதும் திரு அவதாரச் சங்கீதமாகப் பழைய ஏற்பாட்டுக்காலத்தில் அங்கீகரிக்கப்பட்டது. அந்த ஐதீகத்தையே ஆதாரமாக நிருபாசிரியர் வைத்துக்கொள்ளுகிறார். இது அநாதிக் குமாரனைப்பற்றிய தீர்க்கதரிசனம். இரண்டொரு வசனங்கள் அக்காலத்தைக் குறித்தன என்பதனால் யாதொரு பழுதுமில்லை; சர்வ தீர்க்கதரிசனங்களும் தற்காலமும் எதிர்காலமும் கலந்தவை என்பது சகஜம். அநாதி ஆலோசனைகளில் செய்கிற தீர்மானங்கள் இங்கு தீர்க்கதரிசியால் வெளிப்படுத்தப்படுகின்றன.

**பலியையும் — விரும்பவில்லை.** பழைய உடன்படிக்கையின் அசக்திக்கு இதுவே அத்தாட்சி. மேற்குறித்த வாக்கியங்களைக் காண்க. இரத்தப்பலியும், இரத்தமற்ற பலியும்—இருவிதச் செலுத்தலும். ஆதி காலத்திலேயே ஆபேல் முதலாவதையும் காயீன் இரண்டாவதையும் செலுத்தினார்கள். **ஒரு சரீரத்தை எனக்கு ஆயத்தம்பண்ணினீர்;** இது கடினமான வாக்கியம். இதற்கு உரையெழுதல் லேசன்று. எபிரேய மூலத்தில், "ஆனால் எனக்குச் செவிகளைத் தோண்டியிருக்கிறீர்"

என்று கூறியிருக்கிறது. கிரேக்கிலே மொழிபெயர்த்த 70 யூதப் பண்டிதர், வாக்கியத்திலிருக்கிறபடி திருப்பியிருக்கிறார்கள். தக்க முகாந்தரமின்றி அவ்வாறு செய்யார்கள். திருத்தின இங்கிலிஷ் பைபிலிலும் அவ்வாறே மொழிபெயர்த்திருக்கிறது. **செவிகளுக்குப்** பதில் **சரீரமும், ஆயத்தத்துக்குப்** பதில் **தோண்டலும்** எபிரேயமூலத்தில் எழுதியிருக்கிறது. சிலர் இது பார்த்தெழுதினவனது பிசகென்றும் (அக்காலத்தில் அச்சுக்கிடையாது), வேறு சிலர் 70 பேர் தநதும் என்னும் வியாக்கியானத்திலிருந்தபடி மொழிபெயர்த்தார்களென்றும் சொல்லுகிறார்கள்; ஒருவனை அடிமையாக எடுத்துக்கொண்டால், அவனைக் காது குத்துகிறது வழக்கம். யாத். 21. 6; உபா. 15. 17 காண்க. அதனால், "நான் உமக்கு(காதுகுத்தின) அடிமையாய்விடுகிறேன்" எனப் பொருள்படும்; அல்லது, "நான் உம்மைக் கேட்டுக் கீழ்ப்படியச்செய்தீர்" என்றும் அர்த்தமாகும். எசா. 48. 8; 50. 5 காண்க. கருத்து யாதெனின், நீர் விரும்பாதவை **பலிகள்;** விரும்பியது கீழ்ப்படிதல்; சொற்கேட்டல். ஆயத்தம்பண்ணின சரீரத்துக்கு. பிலி. 2. 7; வெளி. 18. 13; ரோம. 7. 4 வாசித்துப் பார்க்கவும்.

6. **சர்வாங்க தகனபலி.** முழு உடலும் எரிக்கப்பட்ட பலி; சர்வாங்கம் = சர்வ + அங்கம். தகித்தல் = எரித்தல். முழுதுமெரித்த பலிகளிலும். பாவநிவாரண. பாவநிவிர்த்தி. மூலத்தில் நிவாரணமென்ற மொழி இல்லை. ஆக என்னு மிடைச்சொல் மாத்திரமுண்டு. **பாவத்துக்கான பலிகளிலும்** என்பது சரியான மொழிபெயர்ப்பு. **பிரியமானதல்ல. பிரீதியில்லை** எனத் திருத்தலாம். 1 கொரி. 13. 3–இலே பவுலப்போஸ்தலன் உரைக்கிறபடி நான் என் தேகத்தைச் சுட்டெரித்தாலும் எனக் கன்பிராதாயின் பயன் யாது? எ–று. சுயப்பிரதிஷ்டையில்லாத உடற்பலி விருதா.

7. இது குமாரனின் மறுமொழி. **தேவனே.** இது மூலத்திலில்லை. **இதோ வந்திருக்கிறேன்** என மாற்றவும், பின்வருவதை உள் வாக்கியமாகச் செய்க: (புஸ்தகச்சுருளில் என்னைக்குறித் தெழுதியிருக்கிறது). **புஸ்தகம்** என்கிறது, சட்டப்புஸ்தகம் (அக்காலத்திலிருந்த வேதம் அவ்வளவே), அல்லது கடவுளின் அநாதித் தீர்மானங்களாயிருக்கும், சங். 139. 16–ல் நிருபாசிரியர் பழைய ஏற்பாடு முழுவதையும் தம்மன

தில் வைத்திருக்கலாம். லூக். 24. 26, 27. "வேதவாக்கியங்கள் எல்லாவற்றிலும் தம்மைகுறித்துச் சொல்லியவைகளை அவர்களுக்கு விவரித்துக் காண்பித்தார்." யூதர்கள் தங்கள் நூல்களை நீண்ட தோலில் எழுதிச் சுருள் சுருளாய் வைத்திருப்பார்கள். இத்தேசத்தில் ஓலையிலெழுதிச் சுவடி சுவடியாய்க் கட்டியிருக்கிறது. சித்தத்தின்படி செய்ய. சித்தத்தைச் செய்ய அல்லது இயற்ற எனத் திருத்தலாம். இது மூலத்துக்குத் தக்கதும் அதிக உறுதியுமானது. 40-ம் சங்கீதத்தில் "மகிழ்கிறேன்" என்று சேர்த்திருக்கிறது. நிருபாசிரியர் இதை விட்டுவிட்டார். வார்த்தை வார்த்தையாக எடுத்துரைக்க வேண்டுமென்பது அவர் கருத்தல்ல. முக்கிய கருத்திருந்தால் அவருக்கும் மற்ற நூலாசிரியருக்கும் திருப்திகரமாயிருந்தது.

8. நியாயப்பிரமாணத்தின்படி. (சட்டத்தின் பிரகாரம் செலுத்தப்படுகிற): இதை உள்வாக்கியமாக்குக. மற்றவைகளை மேற்கண்டவாறு திருத்துக.

9. தேவனே. இதை விட்டுவிடவும். 7-ம் வாக். காண்க. வருகிறேன். முன்போல, "வந்திருக்கிறேன்" என மாற்றவும். தக்ஷணை கீழ்ப்படிதலைக் காட்டுகிறது. இரண்டாவதை ஏ. நிலைநிறுத்துவதற்கு நிலைநிறுத்த. முதலாவது. பலிகள், காணிக்கைகள் முதலானவை இரண்டாவது. கடவுள் சித்தத்தைச் செய்தல்.

10. சரீரம். முன்னே சரீரம் ஆயத்தப் படுத்தினதற்கேற்க. ரோம. 12. 1 பாருங்கள். வ. 5 காண்க; ஒரேதரம். ஒரேதரத்தில், அல்லது ஒரேதரமாக. பலியிடப்பட்டதினாலே. பலியிடப்பட்டதின் மூலமாய் எனத் திருத்தவும். அந்தச் சித்தத்தின்படியே. அந்தச் சித்தத்தினாலே என மாற்றவும். பரிசுத்தமாக்கப்பட்டிருக்கிறோம். இது நாளாவர்த்தியில் நடந்துவருகிற ஒரு விர்த்தியன்று. தக்ஷணம் கடவுள் சேவைக்குப் பிரதிஷ்டை செய்யப்படுகிறதைக் குறிக்கின்றது. யோ. 17. 19;1 தெச. 4. 3 ஒத்துக்காண்க. நீங்கள் பரிசுத்தமாகிறதே கடவுளின் சித்தம். இரட்சண்ணியத்துக்குரிய சகலமும் அந்தச் சித்தத்தில் அமைந்திருக்கிறது. பவுல் அப்போஸ்தலன் பலமுறை உபயோகிக்கிறதும், இந்நிருபத்திலெங்கும் உபயோகிக்கப் படாததுமான

"கிறிஸ்துவுக்குள்" என்கிற பதமும் இதே பொருளமைந்தது. கடவுள் சித்தம் கிறிஸ்துவுக்குள்ளே பூர்த்தியாய் நிலைத்திருக்கிறது எ-று.

10. 11-18.

11 அன்றியும், எந்த ஆசாரியனும் நாடோறும் ஆராதனை செய்கிறவனாயும், பாவங்களை ஒருக்காலும் நிவிர்த்திசெய்யக்கூடாத ஒரேவித பலிகளை அநேகந்தரம் 12 செலுத்திவருகிறவனாயும் நிற்பான்.—இவரோ, பாவங்களுக்காக ஒரே பலியைச் செலுத்தி, என்றென்றைக்கும் தேவனுடைய வலது பாரிசத்தில் உட்கார்ந்து,— 13 இனித் தம்முடைய சத்துருக்களைத் தமது பாதபடியாக்கிப் போடும்வரைக்கும் காத்துக்கொண்டிருக்கிறார்.— 14 ஏனெனில் பரிசுத்தமாக்கப்படுகிறவர்களை ஒரே பலியினாலே இவர் என்றென்றைக்கும் பூரணப்படுத்தியிருக்கிறார்.

15 இதைக்குறித்துப் பரிசுத்த ஆவியானவரும் நமக்குச் 16 சாட்சி சொல்லுகிறார், எப்படியெனில்:—அந்த நாட்களுக்குப் பின்பு நான் அவர்களோடே பண்ணும் உடன்படிக்கையாவது: நான் என்னுடைய பிரமாணங்களை அவர்களுடைய இருதயங்களில் வைத்து, அவைகளை அவர்களுடைய மனதில் எழுதுவேன் என்று கர்த்தர் 17 சொல்லுகிறாரென்பதை உரைத்தபின்பு,— அவர்களுடைய பாவங்களையும் அவர்களுடைய அக்கிரமங்களையும் நான் இனி நினைப்பதில்லை என்பதைச் சொல் 18 லுகிறார். — இவைகள் மன்னிக்கப்பட்டதுண்டானால், இனிப் பாவத்தினிமித்தம் பலி செலுத்தப்படுவதில்லையே.

11. **எந்த ஆசாரியனும்.** ஒவ்வொரு எனத் திருத்தவும். சில பிரதிகளிலே **பிரதான** ஆசாரியன் என்றிருக்கிறது. **அநேகந்தரம்.** எண். 28. 3; அதி. 7. 27 ஒத்துக்காண்க. **நிற்பான்.** உட்காருவான் அன்று. கிறிஸ்து ஒருவர்மாத்திரம் வானவர்களுக்கெல்லாம் மேலாகச் சென்று உட்கார்ந்திருக்கிறார்.

**12, 13. இவரோ.** எம்பெருமானோ. **தேவனுடைய வலதுபாரிசத்தில்.** கடவுள் வலப்பக்கத்தில். அதி. 8. 1; 1. 13. **என்றென்றைக்கும்**—இதைப் பலிக்காவது, உட்கார்ந்திருத்தலுக்காவது வினையுரியாய்

வைத்துக்கொள்ளலாம். இரண்டாம் உபயோகிப்பே எனக்கு உசிதமாகத் தோன்றுகிறது. பாதபடி. மேல் உரை காண்க. சங். 110. 1; 1 கொரி. 15–25. காத்துக்கொண்டிருக்கிறார். அரசன் அன்று கொல்லும், தெய்வம் நின்று கொல்லும். மிக்க பொறுமையாய்க் காத்துக்கொண்டிருக்கிறார்; இப்போது மூன்று வருஷக்காலமாய் நடக்கிற பயங்கரமான யுத்தத்தை எம்பெருமான் ஏன் நிறுத்தவில்லை என்று அவசரப்பட்டுக் கேட்போருக்கு இதுவே விடை.

14. பரிசுத்தமாக்கப்படுகிறவர்களை. இது முன்சொன்ன பிரதிஷ்டையன்று. கொஞ்சம் கொஞ்சமாய், இருதயத் தூய்மையடைந்து வருகிற இரகசியமான விர்த்தி. அதி. 2. 11; அப். 2. 47 காண்க. பூரணப்படுத்தியிருக்கிறார். அதி. 7. 11, 25 பார்க்கவும்.

15. பரிசுத்த ஆவியானவரும் வேதவாக்கியங்கள் பரிசுத்தஆவியினால் ஏவி யெழுதப்பட்டவை என்று பழைய ஏற்பாட்டுக் காலத்திற்போலவே புதிய ஏற்பாட்டுக்காலத்திலும் உறுதியாய் நம்பப்பட்டது. 2 பேது. 1. 21. "பரிசுத்த மனுஷர்கள் பரிசுத்தஆவியினாலே ஏவப்பட்டுப் பேசினார்கள்." சாட்சி சொல்லுகிறார். சாட்சி பகருகிறார்.—

16. உடன்படிக்கையாவது. எரே. 31. 33, 34 எடுத்துரைக்கப்படுகிறது. அதி. 8. 10–12 ஒத்துக்காண்க. என்னுடைய—என். பிரமாணங்களை. சட்டங்களை. அவர்களுடைய. அவர்கள் அவர்களுடைய. அவர்கள். என்பதை. என்று.

17. அவர்களுடைய. அவர்கள். இது இருதரம் திருத்தப்படவேண்டும். வேற்றுமை உருபுகள் அனவசியம். தமிழ் நடைக்கு ஒவ்வா. நினைப்பதில்லை. என் ஞாபகத்தில் வையேன், அல்லது மறந்துவிடுவேன் எனின் அதிக திருத்தமாயிருக்கும். பாவத்தை மறந்துவிடல் பல உருவகங்களால் காட்டியிருக்கிறது. ஏசா. 44. 22; 38. 17; எரே. 1. 20; சங். 103. 12; மீகா. 7. 19. மு. காண்க.

18. இவ்வாக்கியத்தில் நியாயத்தொடர்ச்சியை நிருபாசிரியர் முடித்துரைக்கிறார். இதை வெற்றிபெற்ற வீரனைப்போல் கூறுகிறார். ஆதலால், இவைகளுக்கு மன்னிப்புண்டானால், இனிப் பாவத்துக்குப் பலி செலுத்தவேண்டியது மில்லையே எ—று. இதனால் நிருபாசிரியர் முதல் வாக்கியத்தில், 'கடவுள் இந்த யுகாந்தத்தில் குமாரன் மூலமாக நமக்குரைக்கிறார் என்ற வார்த்தைகளைத் திருஷ்டாந்தப்படுத்தி

விட்டாரென்பது திண்ணம். முதல் உடன்படிக்கைக்கு இரண்டாவது மத்தியஸ்தர் விஷயமாயும் (7. 1–25), ஆசாரியத்துவ விஷயமாயும் (7. 25–9. 12), கூடாரம், பலிகள் விஷயமாயும் (9. 13–10. 18) மிக்கச் சிறந்தது. ஆகையால், சுவிசேஷ யுகத்தில் கிறிஸ்துவின் பக்தர்கள் பலிகளிடவேண்டிய அவசியமில்லை; யூதர்களின் அனந்தமான சடங்காசாரங்களைக் கைக்கொள்ள வேண்டியதுமில்லை. கிறிஸ்துவின் மரணமாகிய பலி ஒன்றுமே சர்வதிருப்தி செய்து, பூரணப்படுத்துகின்றது.

10. 19-25.

19 ஆகையால், சகோதரரே, நாம் பரிசுத்த ஸ்தலத்தில் பிரவேசிப்பதற்கு இயேசுவானவர் தமது மாம்சமாகிய திரையின் வழியாய்ப் புதிதும் ஜீவனுமான மார்க்கத்தை
20 நமக்கு உண்டுபண்ணினபடியால்,—அந்த மார்க்கத்தின் வழியாய்ப் பிரவேசிப்பதற்கு அவருடைய இரத்தத்தினாலே நமக்குத் தைரியம் உண்டாயிருக்கிறபடியினா
21 லும், — தேவனுடைய வீட்டின்மேல் அதிகாரியான மகா ஆசாரியர் நமக்கு ஒருவர் இருக்கிறபடியினாலும்,—
22 துர்மனச்சாட்சி நீங்கத் தெளிக்கப்பட்ட இருதயமுள்ளவர்களாயும் சுத்த ஜலத்தால் கழுவப்பட்ட சரீரமுள்ளவர்களாயும், உண்மையுள்ள இருதயத்தோடும் விசுவாசத்
23 தின் பூரண நிச்சயத்தோடும் சேரக்கடவோம்.—அல்லாமலும், நம்முடைய நம்பிக்கையை அறிக்கையிடுகிறதில் அசைவில்லாமல் உறுதியாயிருக்கக்கடவோம்; வாக்குத்தத்தம் பண்ணினவர் உண்மையுள்ளவராயிருக்கிறாரே.—
24 மேலும், அன்புக்கும் நற்கிரியைகளுக்கும் நாம் ஏவப்
25 படும்படி ஒருவரையொருவர் கவனித்து;—சபை கூடிவருதலைச் சிலர் விட்டுவிடுகிறதுபோல நாமும் விட்டுவிடாமல், ஒருவருக்கொருவர் புத்திசொல்லக்கடவோம்; நாளானது சமீபித்து வருகிறதை எவ்வளவாய்ப் பார்க்கிறீர்களோ அவ்வளவாய்ப் புத்திசொல்லவேண்டும்.

## கிறிஸ்தவர்களின் நம்பிக்கையையும் அன்யோன்னியத்தையும் பற்றிய போதனை. (19–25)

19, 20. சகோதரரே. இது கிறிஸ்துமார்க்கத்துக்குரிய ஓர் மங்கல வார்த்தை—ஆனால் இது அடிக்கடி துர் உபயோகத்துக் கிடமாகிறது.

தகுந்த மரியாதை செய்ய மனமில்லாதவர்கள் ஓர் ஏழைக் கிறிஸ்தவனை, "சகோதரனாகிய"—என்றழைப்பார்கள். இரண்டு அங்கிலேய குருமார் எப்போதும் ஒருவரை ஒருவர் பேர்சொல்லி அழைத்துவந்தும், சிறிது வழக்கு வாக்குவாதம் உண்டானவுடனே, "பிரிய சகோதரரே" என்று கடிதம் ஆரம்பித்தார்கள்! **பரிசுத்த ஸ்தலத்தில்**—திவ்ய சமுகமாகிய கிருபாசனம். **பிரவேசிப்பதற்கு. பிரவேசிக்க** எனச் சுருக்கவும். இந்த ஐக்கிய மொழிபெயர்ப்பிலே வார்த்தைகளையும் தொடர் மொழிகளையும் அனாவசியமாக நீட்டியிருக்கிறது. **இயேசுவானவர். இயேசு** எனத் திருத்துக. **மாம்சமாகிய திரை**—இது நேர்த்தியான வார்த்தை. எம்பெருமான் திரு அவதாரஞ்செய்தது திரையை நீக்கினதுக் கொப்பிட்டிருக்கிறது. பாடுபட்ட அவரது மனுஷீகத்தின் மூலமாய் அவர் மகிமைக்குள் பிரவேசித்தார். அதி. 6. 19; 3; மத். 27. 51. **புதிதும்**. சொற்பிரகாரம், புதிதாய்க் கொல்லுண்ட **ஜீவனும் உயிருள்ளது—புதிதும் ஜீவனுமான** தென்பதில் தமிழ்நடை நன்றன்று. இது ஓர் அணி—கொல்லுண்டும் உயிருள்ளதுதான்—அதாவது, நமது இரட்சகர்தாம். "நானே வழியும், சத்தியமும், ஜீவனுமானவர்." **உண்டுபண்ணினபடியால். பிரதிஷ்டை செய்திருக்கிறதால்** எனத் திருத்தவும். அதி. 9. 18. **அந்த மார்க்கத்திற்—பிரவேசிப்பதற்கு**. அதிலே **பிரவேசிக்க** எனச் சுருக்கவும். **தைரியம்**. இந்தச் சந்தோஷமான மனதிடத்தைக்குறித்து எபே. 2. 18; 3. 12 காண்க. **உண்டாயிருக்கிறபடியினாலும்**. இது முதற்காரணம்.

21, 22. **மகா ஆசாரியர்**. பிரதான ஆசாரியனைவிட எத்தனையும் மேலான ஆசாரியர், சக. 6. 11–13 காண்க. **தேவனுடைய வீட்டின் மேல். கடவுள் வீட்டுக்கு** எனத் திருத்தவும். **அதிகாரி** என்கிற பதம் மூலத்திலில்லை—பொருளுக்காக வருவிக்கப்பட்டது. ஆகிலும், **கடவுள் வீட்டுக்கோர் மகா ஆசாரியர்** (லேவி. 26. 10) என்னும்பொழுதே அதிகாரம் அமைந்திருக்கிறபடியால், இதை விட்டுவிட்டாலும் பிசகில்லை. **நமக்குண்டாயிருக்கிறபடியினாலும்:** இது இரண்டாம் காரணம். அதி. 3. 6; 1 தீமோ. 3. 15 காண்க. கிருபாசனத்தைச் சேர்வோருக்கு இருக்கவேண்டிய நான்கு லட்சணங்களாவன: (1) **தெளிக்கப்பட்ட இருதயங்கள்**. இயேசுவின் இரத்தந் தெளிக்கப்பட்ட. இது

உருவகம்; அதி. 9. 14; 12. 24; 2 பேது. 1. 2. யூத ஆசாரியர் சரீர அசிசு நீங்க இரத்தந் தெளிக்கப்படுவார்கள் (யாத். 29. 21; லேவி. 8. 30 காண்க). (ii) **சுத்த ஜலத்தாற் கழுவப்பட்ட சரீரங்களோடும்**—பூர்வ ஆசாரியரைப்போல (யாத். 30. 20) ஆசாரியர்களாகிய சமஸ்த கிறிஸ்தவர்களும் (வெளி. 1. 5, 6) இயேசுவின் உதிரம் தெளிக்கப்பட்டு, ஞானஸ்நான தீர்த்தத்திலே கழுவப்படவேண்டும் (எபே. 5. 26; தீத். 3. 5; 1 பேது. 3. 21). **சுத்தஜலம்.** நான் உங்கள்மேல் சுத்த ஜலம் தெளிப்பேன். நீங்கள் சுத்தமாவீர்கள் (யாத். 36. 25). (iii) **உண்மையுள்ள இருதயத்தோடும்.** (iv) **விசுவாசத்தின் பூரண நிச்சயத்தோடும்**-**பூரண விசுவாசத்தோடும்** எனச் சுருக்குக. இந்நான்கு லட்சணங்களோடும் நாம் கிருபாசனத்திற்குள் சேர்வோமாக. இந்நான்கில் இரண்டு தொண்டருக்குரியன: உண்மையும் விசுவாசமும்; இரண்டு கடவுளுக்குரியன: அவரருளும் உள்ளான பரிசுத்தமும் புறம்பான ஸ்நானமும். **உண்மையான.** இரண்டுபட்டதல்ல; கடவுள் "ஒருவருக்கே" தன்னைத் தத்தஞ் செய்துகொண்ட மனம். சிலர் **தெளிக்கப்பட்ட** இருதயத்தில் நற்கருணையைக் கிரகிக்கிறார்கள். இது உங்களுக்காகச் **சிந்தப்பட்ட** என் இரத்தம் என்றார் இயேசு.

23. **அல்லாமலும்.** மூலத்திலில்லை. **நம்பிக்கையை.** முன்போல, **கோரிக்கையை. அறிக்கையிடுகிறதில். அறிக்கைசெய்வதில்,** அல்லது, **அறிக்கைப்பாட்டில்** எனத் திருத்தலாம். **அசைவில்லாமல்.** அசைவற்ற **உறுதியாயிருப்போமாக. வாக்குத்தத்தம்பண்ணினவர்—இருக்கிறரே.** இதை: **வாக்குச்செய்தவர் உண்மையுள்ளவராயிற்றே** எனத் திருத்துக. அதி. 6. 13; 11. 11; 12–26 காண்க. அக்காலத்து யூதர்கள் பல துன்பங்களுக்குட்பட்டு இயேசுவின் வருகையை வெகுநாளாய் எதிர்பார்த்திருந்தமையால் அவர்களை நிருபாசிரியர் உற்சாகப்படுத்துகிறார். அவர்கள் விசுவாசமும் கோரிக்கையும் மிகவும் தளர்ச்சியடைந்துபோயின.

24. **ஏவப்படும்படி.** தூண்டப்படும்படி. **நற்கிரியை.** சத்செயல்—அதாவது அன்பிலும் சத்காரியங்களிலும் ஒருவரையொருவர் மிஞ்சி நடக்கத் தூண்டிக்கொள்ள வேண்டுமென்பது கருத்து. கிறிஸ்தவர்கள் இவ்விரண்டிலும் ஒருவரையொருவர் மிஞ்சாமல், துற்குணத்தின் செய்கையிலும், பொருளாசையிலும், பொறாமையிலும், புறங்கூறலி

லும் ஒருவனையொருவர் மிஞ்சப்பார்க்கிறார்கள். தெருச்சண்டை கண்ணுக்குக் குளிர்ச்சி என்றதுபோல, ஒரு சகோதரன் கெடுதல் இன்னொரு சகோதரனுக்கு ஆனந்தமாயிருக்கிறது. இந்த வாக்கியத் தோடு பவுல் அப்போஸ்தலனின் திரிபுண்யங்களும் இங்கு எண்ணி யிருக்கிறது: (i) விசுவாசம் (வாக். 22); (ii) கோரிக்கை (வாக். 23); (iii) அன்பு (வாக். 24); ஒரே ஆவியானவர் வேத ஆசிரியர்களை ஏவி னதற்கு வேறு சாட்சியும் வேண்டுமோ?

25. **சபை கூடிவருதலை—விடாமல்.** **சிலரது வழக்கத்துக்கேற்க** நாமும் சபை **கூடிவருதலை** விட்டுவிடவும் மூலத்துக்குச் சரியாயிருக் கும். ஆதிதொடங்கிச் சபை கூடி ஆராதனை செய்வதற்கு இதுவே ஆதாரம்; அப். 2. 42—பஹிரங்க ஆராதனை பங்கமானால், அந்த ரங்க பக்தியும் பங்கமாயிற்று. ஆனதுபற்றி அப்பொல்லோ யூதக்கிறிஸ் தவர்களைக் கண்டிருக்கிறார். **ஒருவருக்கொருவர்—வேண்டும்.** இதை **நாளானது அடுத்துவருகிறதை நீங்கள் காண்கிறபடியால் இன்னும் அதிகமதிகமாய் (ஒருவருக்கொருவர்) புத்தி புகன்று வருவோமாக** எனத் திருத்தவும். **நாளானது.** கிறிஸ்தவர்கள் எதிர்பார்த்த **கடைசிநாள்** (1 கொரி. 3. 13). எம்பெருமான் தமது பெரிய பிரசங்கத்தில் (மத். 24) குறிப்பித்தது எருசலேம் அழிவாகிய பழைய உடன்படிக்கையின் ஒழிவு என்பதை அவர்கள் சிந்திக்கவில்லை. டெலிட்ச் என்ற ஒரு ஜர்மன் வியாக்கியானி அதுதான் கடைசிப் பெருந்தினம், நாள்களின் நாள், சமஸ்த நாட்களுக்கும் முடிவுநாள், எல்லா நாட்களுக்கும் தீர்ப்பு நாள், காலம் நித்யமாக மாறும்நாள்; சபை இந்த யுகத்திற் கோரும் ராத்திரியை முடித்தொழிக்கும்நாள் என்கிறார்.

10. 26-31.

26 சத்தியத்தை அறியும் அறிவை அடைந்தபின்பு நாம் மனப்பூர்வமாய்ப் பாவஞ்செய்கிறவர்களாயிருந்தால், பா வங்களினிமித்தம் செலுத்தத்தக்க வேறொரு பலி இனி
27 யிராமல்,—நியாயத்தீர்ப்பு வருமென்று பயத்தோடே எதிர்பார்க்குதலும், விரோதிகளைப் பட்சிக்கும் கோபாக்
28 கினியுமே இருக்கும்.—மோசேயினுடைய பிரமாணத் தைத் தள்ளுகிறவன் இரக்கம்பெறாமல் இரண்டு மூன்று
29 சாட்சிகளின் வாக்கினாலே சாகிறானே;—தேவனுடைய

குமாரனைக் காலின்கீழ் மிதித்து, தன்னைப் பரிசுத்தஞ் செய்த உடன்படிக்கையின் இரத்தத்தை அசுத்தமென் றெண்ணி, கிருபையின் ஆவியை நிந்திக்கிறவன் எவ் வளவு கொடிதான ஆக்கினைக்குப் பாத்திரவானாயிருப்

30 பான் என்பதை யோசித்துப்பாருங்கள்.—பழிவாங்கு தல் எனக்குரியது, நானே பதிற்செய்வேன் என்று கர்த்தர் சொல்லுகிறார் என்றும், கர்த்தர் தம்முடைய ஜனங்களை நியாயந்தீர்ப்பார் என்றும் சொன்னவர் இன்

31 னாரென்று அறிவோம். — ஜீவனுள்ள தேவனுடைய கைகளில் விழுகிறது பயங்கரமாயிருக்குமே.

**சத்தியத்தைவிட்டு (வேண்டுமென்று) விலகுவோர்க்குப் பயங்கரமான எச்சரிப்பு. (26-31)**

26. இது மகா முக்கியமான வாக்கியம்—பல தப்பறைகளுக்கு இடங்கொடுக்கத்தக்கது. ஆகிலும் இதைக் கூர்ந்து வாசித்தால் அதி லடங்கிய உண்மை விளங்கும். **சத்தியத்தை—பின்பு. சத்தியத்தின் அறிவை அடைந்தபின்பு** எனத் திருத்தினால் பொருள் எளிதில் விளங் கும். கிரிஸ்து உலகத்தில் அவதரித்த சரித்திரத்தைப்பற்றிய புறம் பான அறிவல்ல—சத்தியத்தின் அறிவு இங்குக் கூறியது—இரட்சிப்பின் பாக்கியத்தையும் சக்தியையும் இருதயத்தில் உணரப்பெற்று, நடத்தை யில் அநுபவித்துவருகிற அறிவு; இரட்சிப்புத்தான் எல்லாவற்றுக்கும் மேலான சத்தியம்; அதன் அறிவென்பது அநுபோக அறிவு. **நாம் மனப்பூர்வமாய் அல்லது சித்தப்பூர்வமாய்.** வேண்டுமென்று, தீர்மா னத்தோடு; அறியாமையினாலாவது, பலவீனத்தினாலாவது, தப்புப் போதனையினாலாவது பாவத்தில் விழுகிறதன்று. அதி. 5. 2 காண்க மனப்பூர்வமாய்ப் பாவஞ்செய்கிறதையே ஜீவிய பிரமாணமாக வைத்து, கடவுளை எதிர்த்து, ஆயுசு முழுவதும் அக்கிரமத்திலும் அசுத்தத்திலும் உழன்றுவருவது. எண். 15. 30; சங். 19. 13; அதி. 6. 4-9; 12. 16, 17 காண்க. இப்படிப் பாவஞ் **செய்துவந்தால் பாவங்களி னிமித்தம்—இராமல்.** பாவங்களுக்காக இன்னொரு பலி இராமல் எனத் திருத்தவும். செலுத்தப்பட்ட பலி, ஒரே பலி, பூரண பலி, இந்தத் துணிகரமான பாவத்தை நிவிர்த்திசெய்யாது. ஒருவன் செத்தபின்பு கொடுக்கிற மருந்து உபயோகப்படுமா? அதுபோல பாவத்தில் முழுத்

தீர்மானத்துடன் முழுகிவருபவனுக்கு இயேசுவின் பலி பலிக்காது. அவன் மனந்ததும்பச் சக்தியற்றுக் கிடக்கிறான். எம்பெருமான் உரைத்தபிரகாரம், பரிசுத்தஆவிக்கு விரோதமாய்த் தேவதூஷணஞ் செய்கிறவர்களுக்குப் பாவமன்னிப்பே கிடையாது. கிறிஸ்துவை அங்கீகரிப்பதிலன்றி வேறொன்றிலும் இரட்சிப்பில்லை.

27. **நியாயத்தீர்ப்பு —எதிர்பார்க்குதலும்.** பின்னென்றிருக்குமென்றால், **நியாயத்தீர்ப்பை பயத்துடன் எதிர்பார்த்தலும்.** துன்மார்க்கருக்குத் தீர்ப்பு அவசியம் வருமென்கிற எண்ணமுண்டு (ரோம. 2. 5). **விரோதிகளைப் பட்சிக்கும் கோபாக்கினையுமே இருக்கும். எதிரிகளை விழுங்கிவிடும் அக்கினி மகோாமுமே இருக்கும்** எனத் திருத்துக. **எதிரிகளை.** அதாவது, கடவுளை எதிர்த்து நடக்கிறவர்கள்; கடவுள் என்றால் நன்மை; நன்மையை வெறுத்து விரோதிப்பவர்கள். கடவுள் கிருபைக்குக் கங்குகரை இல்லாவிடினும், மருள விழுந்தவன் தனக்குத் தானே ஒரு எல்லையை வைத்துக்கொள்ளுகிறான். 25-ம் வாக்கியத்திலே குறித்திருக்கிற "தினம்" அவனுக்குத் தீர்ப்புநாளாயிருக்கிறது. **விழுங்கிவிடும்.** கடுந்தீக்கு இக்குணமுண்டு. ஒன்றை ஒரு நொடிக்குள்ளே சாம்பலாக்கி விடுகிறபடியால், விழுங்கிவிடுகிறதெனக் கூறலாமே. ஏசா. 26. 11; கொலோ. 2. 14; 2 தெச. 1. 8 காண்க.

கடவுள் செய்த ஏற்பாட்டைத் தள்ளி, மேசியாவைக் கொலைசெய்த யூத மதாசாரத்தை அவர் அக்கினி ஒரு க்ஷணத்திலே அழித்துவிட்டது.

28. மேற்கண்ட தாட்டாந்தத்துக்குத் தகுந்த நியாயம் இவ்விரண்டு வாக்கியங்களில் காட்டியிருக்கிறது. **மோசேயின்** என்றாலுமே போதும். இது சிறிதிலிருந்து பெரிதை ஸ்திரப்படுத்துகிற ஓர் யூத நியாயம். யூக்லிட் என்கிற கோணசாஸ்திரத்திலும் இது சகஜம். **பிரமாணத்தை** விசேஷமாக: விக்கிரகாராதனை (உபா. 17. 2–7). **தள்ளுகிறவன், அவலமாக்கின ஒருவன்** எனத் திருத்தலாம். இரக்கம்பெறுயல். இதைப் **பரிதாபமில்லாமல்** என மாற்றி, **சாசிறலே** என்பதற்கு முன்னே வைக்கவேண்டும்; பூர்வசட்டத்தை நிறைவேற்றுகிறதில் பரிதாபமென்கிறதே கிடையாது. எழுத்து கொல்லுகின்றது. 2 கொரி. 3. 6. **இரண்டு மூன்று சாட்சிகளுக்கு.** யோவா. 8. 17; 2 கொரி. 13. 1 காண்க.

29. சிறுபாவத்தை எடுத்துக்காட்டினவர், இப்பொழுது பெரிய பாவத்தைக் கூறப் புகிறூர். **தேவனுடைய.** கடவுளின். **காலின்கீழ்**— இது பெரிய அவமானம்—திருச்சபைச் சரித்திரத்தில் ஒரு போப்பு ஒரு சக்கரவர்த்தியை அவ்வாறு தன் காற்கீழ் அவன் கழுத்தை வைத்து மிதித்ததாகச் சொல்லியிருக்கிறது. கோவணத்துக்கு மிஞ்சின தரித்திரமில்லை, தலைக்கு மிஞ்சின ஆக்கினை இல்லை என்பதுபோல, காற்கீழ் மிதித்தலுக்கு மிஞ்சின மரணக்கேடில்லை. சித்தப்பூர்வமாய்ப் பாவஜீவியஞ் செய்பவர் இவ்வவமானத்துக் காளாகிறூர்கள். யூதர்கள் இயேசுவின் பேரைச் சண்டாளன் முதலிய பொய் அவமான அல்லது தூஷிப்புச்சொல்லாக வழங்கிவந்தார்கள். தால்மூதென்கிற அவர்கள் பரம்பரை நூலில் சாபத்தோடும் நிந்தையோடுமே அவர் பேரை உபயோகிப்பார்கள். **உடன்படிக்கையின் இரத்தம்.** அதி. 13. 20 காண்க. **அசுத்தம். அசுத்தவஸ்து** எனத் திருத்துக. தேவதூஷணம் இதற்குச் சற்றேறக்குறைய நிகரானது; மரணத்துக்குரிய பாவம்—இதற்கு ஔஷதம் கிடையாது. மத். 12. 31; 1 யோ. 5. 16 காண்க. **கிருபையின் ஆவியை.** கடவுள் கிருபையை நமக்குப் பலிக்கச்செய்கிற ஆவியை— இங்கு திரித்துவ புருஷர் மூவரும் விவரிக்கப்பட்டிருக்கிறதைக் கவனிக்கவேண்டும். **நிந்திக்கிறவன்—நிந்திக்கிற** ஒருவன் என மாற்றினுல்தான் பொருள் சிறக்கும். **நிந்திக்கிற**—இதற்கு உறுதி போதாது. அவமதித்தலும் காற்கீழ் மிதித்தலுக்குத் தக்க பதமன்று. **தூஷிக்கிற ஒருவன்** எனலாம். **எவ்வளவு மி. அதிலும் எத்தனை அதிக கொடிதான தண்டனைக்கு ஆளாவான்** எனத் திருத்தலாம். இங்கு உபமானம் மோசேயின் சட்டத்தை மீறினவன் தண்டனைக்கும், தேவகுமாரனை அறத் தூஷிப்பவன் தண்டனைக்கும். **என்பதை மி. என்று நீங்கள் நினைக்கவில்லையா?** எனின் தமிழ்நடை சரிவரும். அல்லது, **என்று நீங்களே யோசியுங்கள்**—எனலாம். கடவுளை மனிதனைப்போல வன்மஞ்சாதித்து அகோரமாய்ச் சிஷ்டை செய்கிறவராகப் பாவிக்கலாகாது. பிரபஞ்சத்தில் அவர் ஸ்தாபித்திருக்கிற சட்டங்கள் எவ்வளவேனும் மாறுதவை, பிசகற்றவை. அவற்றின் பலாபலன்கள் வழுவின்றி லபித்தல் நிச்சயம். தேசத்துச் சட்டங்கள் அவ்வக்காலங்களில்

நடந்தேறி வருவனபோல், பிரபஞ்சத்துச் சட்டங்கள் சாஸ்வதமாய் நடைபெற்று வருகின்றன.

இந்தப் பாவத்துக்குப் படிகள் மூன்று: (i) குமாரனை அவமதித்தல்; (ii) பிதா அங்கீகரித்த உதிரத்தை அவமதித்தல்; (iii) கிருபையின் ஆவியைத் தூஷித்தல்.

30. பழிவாங்குதல். **பழிவாங்கல்**—என மாற்றுக. **பதிற்செய்வேன்** — இதைவிடப் **பதிலளிப்பேன்** — என்றால் நன்றாயிருக்கும். என்று **கர்த்தர் சொல்லுகிறார்**—இம்மூன்றும் மூலத்திலில்லை. **தம்முடைய தமது**—என்றும்; **ஜனங்களை**, ஜனத்தை என்றும் மாற்றுக. **சொன்னவர் இன்னாரென்று அறிவோம்**—இதை உரைத்தவரை நாம் அறிவோமே — எனத் திருத்துக. **நியாயந்தீர்ப்பார்**—(உபா. 32. 36). தங்கள் சத்துருக்களினின்றும் விடுவிப்பார் என்பது பொருள். சங். 135. 14 காண்க. அவரது கோணநீதி நமக்குத் தெரியாததல்லவே எ—று.

31. **ஜீவனுள்ள**. ஜீவித்திருக்கும் என மாற்றுக. அதி. 3. 12 காண்க. மனிதர் கற்பித்த நிர்க்குண வஸ்துவல்ல. **விழுகிறது பயங்கரமாயிருக்கும்**. **விழுதல் பயங்கரமானது**—1 நாளா. 21. 13; 2 சாமு. 24. 14; பிர. 2. 18 காண்க. யாருக்குப் பயங்கரமானது? தேவதூஷணஞ் செய்தவனுக்கு மாத்திரமல்ல, மனந்திரும்பும் பாவிக்கும். ஆயினுமொன்று: மனிதன் கையில் விழுவதைவிடக் கடவுள் கையில் விழுவது நன்று.

10. 32-39.

32 முந்தின நாட்களை நினைத்துக்கொள்ளுங்கள்; நீங்கள் பிரகாசமாக்கப்பட்டிருந்த அந்த நாட்களில், உபத்திரவங்களாகிய மிகுந்த போராட்டத்தைச் சகித்தீர்களே.—
33 நிந்தைகளாலும் உபத்திரவங்களாலும் நீங்கள் வேடிக்கையாக்கப்பட்டதுமல்லாமல், அப்படி நடத்தப்பட்டவர்க
34 ளுக்குப் பங்காளிகளுமானீர்கள். — நான் கட்டப்பட்டிருக்கையில் நீங்கள் என்னைக்குறித்துப் பரிதபித்ததுமன்றி, பரலோகத்தில் அதிக மேன்மையும் நிலையுள்ளதுமான சுதந்தரம் உங்களுக்கு உண்டென்று அறிந்து,

உங்கள் ஆஸ்திகளையும் சந்தோஷமாய்க் கொள்ளையிடக் கொடுத்தீர்கள்.

35 ஆகையால், மிகுந்த பலனுக்கேதுவான உங்கள்
36 தைரியத்தை விட்டுவிடாதிருங்கள்.—நீங்கள் தேவனுடைய சித்தத்தின்படி செய்து, வாக்குத்தத்தம் பண்ணப்பட்டதைப் பெறும்படிக்குப் பொறுமை உங்களுக்கு
37 வேண்டியதாயிருக்கிறது.—வருகிறவர் இன்னுங் கொஞ்
38 சக்காலத்தில் வருவார், தாமதம்பண்ணார்.—விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான், பின்வாங்கிப் போவானானால் அவன்மேல் என் ஆத்துமா பிரியமாயிராது
39 என்கிறார்.—நாமோ கெட்டுப்போகப் பின்வாங்குகிறவர்களாயிராமல், ஆத்துமா ஈடேற விசுவாசிக்கிறவர்களாயிருக்கிறோம்.

### புத்திமதியும் உற்சாக வார்த்தைகளும். (32–39)

**32.** வாக்கியத்தைப் பின்வருமாறு மாற்றவேண்டும்: **நீங்கள் பிரகாசிக்கப்பட்ட பின்பு, உபத்திரவங்களாகிய பெரும் போராட்டத்தைச் சகித்த முந்தின நாட்களை நினைத்துக்கொள்ளுங்கள். பிரகாசிக்கப்பட்ட பின்பு**—குணப்பட்டு ஞானஸ்நானம் பெற்றவர்கள் பிரகாசிக்கப்பட்டவர்கள். அவர்கள் இருதயம் முன்பு இருட்டாயிருந்தது; பின்பு பிரகாசமடைந்தது. யூதக் கிறிஸ்தவர்களின் ஆரம்ப நிலைமையைக் குறிக்கிறது. இந்த உருவகத்துக்கு 2 கொரி. 4. 6; 1 பேது. 2. 9 காண்க. ஒருபக்கம் யூதர்களும், ஒருபக்கம் புறமதஸ்தர்களும், புதுக்கிறிஸ்தவர்களை, இக்காலத்திற்போல, வெகுவாய்த் துன்பப்படுத்தினார்கள். **உபத்திரவங்களாகிய பெரும்போராட்டம்**— அவர்கள் உபத்திரவங்களோடு மல்யுத்தஞ் செய்ததுபோலிருந்தது. அவற்றுக்குத் தப்புகிறதும், மீண்டும் அவற்றுக் குட்படுகிறதுமாய் இடைவிடாத சங்கடப்பட்டு வந்தார்கள். அக்காலத்துப் பக்தியுடன் இக்காலத்து நிர்விசாரத்தை ஒத்துப்பாருங்கள். என்ன மேன்மையிலிருந்து என்ன தாழ்வுக்கு வந்திருக்கிறீர்கள். அப்பொழுது இருந்த அன்பும், ஆவலும், தீரமும், தைரியமும் இப்பொழுது எங்கே? 1 தெச. 2. 14–16; பிலி. 1. 29 காண்க.

33. **ஒருபட்சம், நிந்தைகளாலும் துன்பங்களாலும் காட்சிப் பொருள்களும், ஒருபட்சம் அவ்வாறு நடத்தப்பட்டவர்களுக்குப் பங்காளிகளுமானீர்கள்.** வாக்கியத்தை இப்படித் திருத்தவேண்டும். கிரேக்கு மூலத்திற்கிசைய, **விலாச மேடையில் வைக்கப்பட்டவர்களானீர்கள்**—பலவாறு துன்பப்பட்ட கிறிஸ்தவர்களை எல்லாரும் வேடிக்கையாகப் பார்த்தார்கள். தற்காலத்தில் அர்மீனியாவில் கிறிஸ்தவர்களுக்குச் சொல்லமுடியாத அகோரமான உபத்திரவங்கள் நேரிடுகிறது யாவருக்கும் தெரிந்தவிஷயம். அவர்கள் படும் பாடுகளையும், அவர்களுக்குச் செய்யப்படுகிற கோரணிகளையும், நிந்தைகளையும், அவலட்சணங்களையும் துருக்கர் பார்த்து, நகைத்துச் சந்தோஷங் கொண்டாடுகிறார்கள். **பங்காளிகளும்**—சில சமயங்களிலே லேசாய் அப்படிப் பாடுபடாவிட்டாலும் பாடுபடுகிறவர்கள் கூடவிருந்து அவர்கள் உபத்திரவங்களை ஏற்றுக்கொண்டீர்கள் எ—று.

34. **நான்—குறித்து**—இது பிசகான மொழிபெயர்ப்பு. இதனால் தான் பவுலப்போஸ்தலன் இந்நிருபத்தை எழுதினாரென்று அனேகர் நினைத்துக்கொண்டார்கள். புதிய இங்கிலிஷ் திருப்புதலில் பிரதிகளிலுள்ள சரியான வார்த்தைகள் மொழிபெயர்த்திருக்கின்றன. அதை இங்கு எழுதுகிறேன்: **கட்டுண்டவர்களைக் குறித்து**—அக்காலத்தில் அனேக கிறிஸ்தவர்களைச் சிறையிலடைத்தார்கள். இது சாதாரணமான ஓர் துன்பம். **நீங்கள் பரிதபித்ததுமன்றி**—இது பங்காளிகளானதற்கு ஓர் திருஷ்டாந்தம். அவ்வாறு சிறையிலிருந்தவர்களை நீங்கள் போய்ச் சந்தித்து அவர்களுக்கு உதவிபுரிந்தீர்கள். **பரலோகத்தில் அதிக**—இப்பதங்கள் நீங்கவேண்டும். **விசேஷித்ததும் நிலையுள்ளதுமான ஆஸ்தி உங்களுக் குண்டென்றறிந்து**—மோட்ச பாக்கியங்கள். கடவுள் சமூகம், குமாரன் தோழமை, நித்திய ஓய்வு, சமாதானம், துன்பம் துயரமில்லாமை முதலியன. உங்கள் ஆஸ்திகளைக் கொள்ளையிடுவோருக்கு உங்களைச் சந்தோஷமாய் ஒப்புவித்தார்கள். அர்மீனியரும் இவ்வாறே கொள்ளையிடப்படுகிறார்கள். ரோம சக்ரவர்த்திகள் அப்படிப்பட்ட ஆக்கியாபனை செய்தார்கள். லூக். 9. 25; 21. 19; அதி. 11. 26; மத். 6. 20; ரோ. 8. 18; 1 பேது. 1. 4–8 காண்க.

**35. மிகுந்த பலனுக்கேதுவான.** அல்லது பெரும்பலனுள்ள வெகுமதியளிக்கும் என மாற்றலாம். **விட்டுவிடாதிருங்கள்—எறிந்து விடாதேயுங்கள்**—எனத் திருத்தலாம். அதி. 3. 6; 4. 16 காண்க.

**36. கடவுள் சித்தத்தைச் செய்தபின்பு, வாக்குச் செய்ததைப் பெறும்படி உங்களுக்குப் பொறுமை அவசியம்.** உபத்திரவத்தில் பொறுமை அணிகலன். அதி. 6. 12; லூக். 21. 19; கொலோ. 1. 11; யாக். 1. 3, 4 காண்க.

**37. வருகிறவர்.** எம்பெருமான். இந்த இருவாக்கியங்களும் ஆபகூக் தீர்க்கதரிசனத்திலிருந்து (2. 3, 4) எடுத்துரைக்கப்படுகின்றன. வருகிறவர்—என்பது மேசியாவைக் குறித்த தொடர்மொழி. மத். 11. 3; லூக். 7. 9. எம்பெருமான் தாமே "இவைகள் எல்லாம் நிறைவேறும் வரைக்கும் இந்தத் தலைமுறை ஒழியாது" என்றார் (மத். 24. 34). வாக்கியத்தை: இன்னும் **வெகு கொஞ்சக்காலந்தான்; வருகிறவர் வருவார், தாமதம்பண்ணார்.** அக்காலத்துக் கிறிஸ்தவர்கள் கிறிஸ்துவை அப்பொழுதே வருவார் என்று எதிர்பார்த்தார்கள்.

**38. என் நீதிமானே விசுவாசத்தினாலே பிழைப்பான்.** இதைத்தான் பவுல் அப்போஸ்தலன் ரோமர் 4–ம் அதிகாரத்தில் விரித்துரைத்திருக்கிறார். பின்வரும் பேர்போன விசுவாச அதிகாரமும் அவ்வாறே. **அவன்மேல்—அவனிடத்தில். என்கிறார்**—இது மூலத்திலில்லை.

**39. நாமோ அழிவுக்குப் பின்வாங்குகிறவர்களையல்ல, ஆத்ம ரட்சிப்புக்கு விசுவாசிக்கிறவர்களையே சேர்ந்தவர்கள்.** எனத் திருத்துக. நிருபாசிரியர் தமது நேசரை இத்தனையாய்க் கண்டித்தும், உருக்கமான ஒரு வார்த்தை உரைக்கிறார். அவர்கள் தங்கள் விசுவாசத்தை விட்டு இன்னும் விலகவில்லை.



# 11. அதிகாரம்.

## அதிகார விஷயம்.

சுவிசேஷத்தின் மேன்மையையும் தேவகுமாரனின் மகத்துவத்தையும் ஸ்திரப்படுத்த எண்ணின நிருபாசிரியர் சென்ற பத்து அத்தியாயங்களில் தமது நோக்கத்தை மிகவும் சிறப்பாய் நிறைவேற்றி,

இப்பொழுது நிருபத்தைச் சில அமிர்தம்போன்ற உற்சாக விஷயங்க ளுடன் முடிக்கிறார். யூதக் கிறிஸ்தவர்களுக்கும் பூர்வ யூத பக்தர்க ளுக்கும், யாதொரு முக்கியமான பேதமில்லை என்று விளக்குகிறார். இருவருக்கு மிடையிலே ஒரு பெரும்பிளவு இருக்கிறதாகத் தோன்றி னாலும், இருவருடைய விசுவாசமும் ஒன்றே. முன்னோர்கள் வர விருந்த மேசியாவை விசுவாசித்துப் பிழைத்தார்கள்; அக்காலத்தவர்கள் வந்துபோன மேசியாவை விசுவாசித்துப் பிழைக்கவேண்டும். விசு வாச ஜீவியத்துக்கு இடையூறு கிடையாது. ஆபேல்முதல் கடைசிக் கிறிஸ்தவன்வரைக்கும் அந்த ஜீவியம் ஒன்றே. ஒரு பேதம் யாதெ னில், கிறிஸ்தவனின் ஜீவியம் பூர்த்தியும் மகிமையும்பெற்றது. அதே விசுவாசமானது பூர்வத்திலிருந்த பிதாக்கள், தீர்க்கதரிசிகள், சத்திய சாட்சிகள் முதலானவர்களைத் தாங்கி ஆதரித்தது. இப்பொழுது அந்த விசுவாசப்பற்றை நன்குவிளக்கப் புகிறார். விஷய சூசிகை: (i) விசு வாசத்தின் லட்சணங்கள் (1, 2); (ii) ஆதிச்சரிதையிற் காணும் விசு வாசம் (3–7); (iii) பிதாக்களின் விசுவாசம் (8–22). (iv) போராட் டமும் ஜெயமும் (23–31); (v) ஜனத்தின் விசுவாசம் (32–38); (vi) முடிவுரை (39. 40.)

11. 1-2.

1 **வி**சுவாசமானது நம்பப்படுகிறவைகளின் உறுதி யும், காணப்படாதவைகளின் நிச்சயமுமாயிருக்கிறது.
2 அதினாலே முன்னோர்கள் நற்சாட்சி பெற்றார்கள்.

1. மேலத்தியாயம் 38–இலே "விசுவாசத்தினாலே" நீதிமான் பிழைப்பானென்றும், 39–இலே "ஆத்துமா ஈடேற விசுவாசிக்கிறவர் களாயிருக்கிறோ" மென்றும் சொன்னவர், ஒருவேளை விசுவாசம் என் கிறதென்னவென்று சிலர் கேட்பார்களே. அதற்கு மறுமொழியாக சிறந்த உபந்நியாசத்தை எழுதுகிறார்.

## 1. விசுவாசத்தின் லட்சணங்கள்.

**விசுவாசமானது.** இதற்கு முன்பு, **இப்பொழுது** என்னும் இடைச்சொல்லை வருவிக்கவும். இம்முதல் வாக்கியத்தில் **விசுவாசத் துக்குப் பயன் கூறுகிறார்.** **வேதத்தில் இதற்கு எங்கும் பயன் கூறப்**

படவில்லை. சகலருக்கும் தெரிந்த காரியமாகப் பாவிக்கப்படுகிறது. இந்தப் பயனிலும் அதன் உள்ளான தத்துவமல்ல, அதன் பயன் மாத்திரம் காட்டியிருக்கிறது. திருவள்ளுவர் தமது குறளிலே ஓர் இடத்தில்,

பற்றுக பற்றற்ருன் பற்றினை: யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

என்று பாடியிருக்கிருர். இதிலே பற்று என்கிற பதம் இருபொருளில் உபயோகித்திருக்கிறது. ஒன்று ஐம்புலப் பற்று; மற்ருென்று கடவுட் பற்று. கடவுளை இங்குப் பற்றற்ருன் எனக் கூறியிருக்கிறது. இந்தப் பற்றுத்தான் விசுவாசம். வேருெரு பற்றுமுண்டு. அது கடவுள் தம்மைப் பற்றினவரிடம் வைக்கும் பற்று. நமது விசுவாசம் மர்க்கடப் பற்று என்றும், அவருடைய பற்று மார்ச்சாலப் பற்றென்றும் உவமித்துக் கூறுகிருர்கள். ஆதலால் இவ்வதிகாரத்தைப் **பற்றுவிளக்கம்** என்றழைக்கலாம்.

**நம்பப்படுகிறவைகளின்** மூ—கோரியவைகளின் நிச்சயம். நாம் கோருகிற காரியம் பலிக்குமோ பலிக்காதோ என்கிற சந்தேகம் சாதாரணம். இந்தச் சந்தேகம் நீங்கிய நிச்சயமுண்டானுல் அதுவே விசுவாசம் அல்லது பற்று. குட்டி தாய்க்குரங்கின் மடியைப் பிடித்துக் கொள்ளும்பொழுது கிஞ்சித்தும் திகிலாவது, சந்தேகமாவது கனவிலும் வாராது. தாய் எங்கெங்கு குதித்துத் தாண்டினுலும் அந்தப் பற்று அருது. ஆதலால் இந்த நிச்சயத்தில் (i) ஒரு உறுதி உண்டு. கோரியது கிட்டும், கிடைக்குமென்கிற உறுதி; (ii) ஒரு ஆதாரம் அல்லது தக்க ஒரு காரணம் உண்டு; (iii) ஒரு தைரியம் அல்லது நம்பிக்கையுண்டு. ஆகையால் கோரிக்கையாகிய அரும்பிலே இம் மூன்று முண்டானுல் அது விசுவாசமென்கிற மலராய் விளங்கும். 2 கொரி. 9. 4; 11. 17 காண்க. இதுநிற்க, மற்றப் பயனைச் சிந்திப்போம். **காணப்படாதவைகளின். காணுதவைகளின். நிச்சயம். திருஷ்டாந்தம்**—எனத் திருத்துக. ஒன்று காணுத வஸ்துவாயினும் அது உண்டென்று நம்புகிறதே விசுவாசம். காணுதவைகள் யாவை? முதலாவது கடவுள்தாமே; தேவகுமாரன்; பரிசுத்தஆவி; மோட்ச நரகங்கள்; அன்பு முதலிய ஆவியின் கனிகள். இவைகள் சடப்

பதார்த்தங்களைப்போலவே வாஸ்தவத்தில் உண்டென்பதற்குத் திருஷ்டாந்தமே விசுவாசம். ஊனக்கண் இதுகளைக் காணாவிடினும், உள்ளத்தின் பற்றுக்கண் கண்டு களிக்கின்றது. **விசுவாசமானது கோரியவைகளின் நிச்சயமும் காணாதவைகளின் திருஷ்டாந்தமுமாகும்.**

**அதினாலே இதிலேதான்**—எனத் திருத்துக. அதாவது, விசுவாசமாகிய இந்த ஞான உலகத்திலேதான். விசுவாச ஜீவியத்திலேதான் என்றாற்போல. **முன்னோர்கள்**—முற்காலத்து யூதசபைப் பிதாக்கள். **நற்சாட்சி பெற்றார்கள்**—மூலத்தில் நல் என்கிற பதமில்லை. **சாட்சி பகரப் பெற்றார்கள்**—யூதசபையின் சரித்திரத்தில் இது திருஷ்டாந்தமாகிறது. விசுவாசமானது சரித்திரத்தை உண்டுபண்ணுகிறது. விசுவாசத்தின் வெற்றி ஜயங்கள், போராட்டங்களை உலகமெங்கும் காணலாம்; ஆனால் அதன் ஞானஜெயங்களைத் திருச்சபைச் சரித்திரங்களில் விசேஷமாய் அறிந்துகொள்ளலாம்.

11. 3-12.

3 விசுவாசத்தினாலே நாம் உலகங்கள் தேவனுடைய வார்த்தையினால் உண்டாக்கப்பட்டதென்றும், இவ்விதமாய், காணப்படுகிறவைகள் தோன்றப்படுகிறவைகளால் உண்டாகவில்லையென்றும் அறிந்திருக்கிறோம்.

4 விசுவாசத்தினாலே ஆபேல் காயீனுடைய பலியிலும் மேன்மையான பலியை தேவனுக்குச் செலுத்தினான்; அதினாலே அவன் நீதிமானென்று சாட்சிபெற்றான்; அவனுடைய காணிக்கைகளைக் குறித்து தேவனே சாட்சி கொடுத்தார்; அவன் மரித்தும் இன்னும் பேசுகிறான்.

5 விசுவாசத்தினாலே ஏனோக்கு மரணத்தைக் காணாதபடிக்கு எடுத்துக்கொள்ளப்பட்டான்; தேவன் அவனை எடுத்துக்கொண்டபடியினாலே, அவன் காணப்படாமற்போனான்; அவன் தேவனுக்குப் பிரியமானவனென்று அவன் எடுத்துக்கொள்ளப்படுவதற்கு முன்னமே சாட்சி

6 பெற்றான்.—விசுவாசமில்லாமல் தேவனுக்குப் பிரியமாயிருப்பது கூடாதகாரியம்; ஏனென்றால், தேவனிடத்தில் சேருகிறவன் அவர் உண்டென்றும், அவர் தம்மைத் தேடுகிறவர்களுக்குப் பலன் அளிக்கிறவரென்றும் விசுவாசிக்கவேண்டும்.

7 விசுவாசத்திலே நோவா தற்காலத்திலே காணுதவை களைக் குறித்து தேவ எச்சரிப்புப்பெற்று, பயபக்தி யுள்ளவனுகி, தன் குடும்பத்தை இரட்சிப்பதற்குப் பேழையை உண்டுபண்ணினுன்; அதினுலே அவன் உலகம் ஆக்கினைக்குள்ளானதென்று தீர்த்து, விசுவாசத் தினுலுண்டாகும் நீதிக்குச் சுதந்தரவாளியானுன்.

8 விசுவாசத்தினுலே ஆபிரகாம் தான் சுதந்தரமாகப் பெறப்போகிற இடத்திற்குப் போகும்படி அழைக்கப் பட்டபோது, கீழ்ப்படிந்து, தான் போகும் இடம் இன்னதென்று அறியாமல் புறப்பட்டுப் போனுன். —

9 விசுவாசத்தினுலே அவன் வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட தேசத்திலே பரதேசியைப்போலச் சஞ்சரித்து, அந்த வாக்குத்தத்தத்திற்கு உடன் சுதந்தரராகிய ஈசாக்கோடும் யாக்கோபோடும் கூடாரங்களிலே குடியிருந்தான்;—

10 ஏனெனில், தேவன் தாமே கட்டி உண்டாக்கின அஸ்திபாரங்களுள்ள நகரத்துக்கு அவன் காத்திருந்தான்.

11 விசுவாசத்தினுலே சாராளும் வாக்குத்தத்தம் பண் ணினவர் உண்மையுள்ளவரென்றெண்ணி, கர்ப்பந்தரிக் கப் பெலனடைந்து, வயது சென்றவளாயிருந்தும்

12 பிள்ளைபெற்ருள்.—ஆனபடியால், சரீரஞ் செத்தவனெ ன்று எண்ணத்தகும் ஒருவனுலே, வானத்திலுள்ள பெருக்கமான நட்சத்திரங்களைப்போலவும் கடற்கரையி லுள்ள எண்ணிறந்த மணலைப்போலவும், மிகுந்த ஜனங் கள் பிறந்தார்கள்.

### (2) ஆதிச்சரிதையிற் காணும் விசுவாசம்.

3. **விசுவாசத்தினுலே** — விசுவாசத்தின் வெற்றியைப்பற்றிய தனித்தனியான பதினைந்து திருஷ்டாந்தங்கள் இவ்வத்தியாயத்திற் கூறியிருக்கின்றன். நம்முடைய பொதுவான விசுவாசத்தின் கிரியை ஆரம்பிக்கப்படுகிறது. **உலகங்கள்**—கால உலகங்களும், ஸ்தல உல கங்களும். **வார்த்தையினுலே உண்டாக்கப்பட்ட**ன—கடவுள் சொல்ல வானமும் பூமியும் உண்டாயின. சிலர் உலகங்களின் முதற்பொ ருள்களாகிய அணுக்கள் அநாதியாயிருந்தனவென்றும், அதுகளைக் கொண்டு கடவுள் அண்ட சராசரங்களை அமைத்தாரென்றும் எண்ணு கிருர்கள் உஷ்ணவாயு சகல உலகங்கட்கும் முதற்கருவி எனச்

சாஸ்திரிகள் நினைக்கிறார்கள். "பதி, பசு, பாசமெனப்பகர் இம்மூன்றில், பதியினைப்போல் பசு, பாசம் அனாதி" என்று ஹிந்துசாஸ்திரம் கூறுகின்றது. ஆகிலும் கடவுள் ஒருவர்மாத்திரம் அனாதிவஸ்து. மற்றவையெல்லாம் அவரால் உண்டாக்கப்பட்டவை. அதி. 13. 2; சங். 84. 16; யோ. 1. 1, 2; ஆதி. 1; சங் 33. 6. 9; 2 பேது. 3. 5 காண்க. **தோன்றப்படுகிறவைகளால்**—இது இலக்கண வழு—**தோன்றுகிறவைகளால்**—எனத் திருத்துக. பிரபஞ்சமனைத்தும் கடவுள் வாக்கினின்றும் உற்பத்தியானதால். இதனால் நாஸ்திகம், துவிதம், அத்துவிதம், பலதெய்வம் என்னுங் கொள்கைகள் கண்டனமாகின்றன. இங்கு துவிதம் என்பது கடவுள் வேறு, பிரபஞ்சம் வேறு என்கிறதன்று; நன்மைக்கொரு தெய்வம் தீமைக்கொரு தெய்வமென்கிற பார்சி மார்க்கம் முதலியவை. இந்தப் பெரும் ரகசியத்தை நாம் கடவுள் வாக்கை விசுவாசிப்பதினால் கிரகித்துக்கொள்ளுகிறோம்.

4. இப்பொழுது நிருபாசிரியர் சில உதாரணங்களெடுத்துக் கூறுகிறார். **ஆபேல்**—ஆதித்தாய் தந்தையரின் இளையகுமாரன். ஆதி. 4. 5 காண்க. காயீன் செலுத்தினது காய்கனிகள்; ஆபேல் செலுத்தினது ஆட்டுக்குட்டி, அதன் உதிரமாயிருக்கும். இதனால் பலிசெலுத்தல் அந்த ஆதிகாலத்திலேயே தொடங்கினதென்று எண்ணவேண்டும். ஆபேல் பாவ நிவாரணத்துக்காக இரத்தப்பலி செலுத்தியிருப்பான். காயீன் வெறும் ஸ்தோத்ரபலி செலுத்தினான். முக்கியமான வித்தியாசம் அவர்கள் குணத்திலும் மனதிலுமிருந்தது. காயீன் பின்பு செய்தது அவன் குணத்தைக் காண்பிக்கிறது. ஆபேலின் பலியை ஏற்றுக்கொண்ட கடவுள் அவன் பலியை ஏற்றுக்கொள்ளவில்லை, இதனாலே ஆபேல் நீதிமானெனச் சாட்சிபெற்றான். அவன் **மரித்தும் இன்னம் பேசுகிறான். அதன் மூலமாய்**—என்னும் பதங்களை முதலில் வைத்துக்கொள்க. மரித்தும் பேசுகிறானென்றால், மரித்தும் உயிரோடிருக்கிறான் என்பது பெறப்படுகிறது. விசுவாசிகளின் நித்திய ஜீவியம் இதனால் ஸ்தாபிக்கப்படுகிறது. நமது நற்செயல்களும் நாம் மரித்தபின்பு பேசுகிறதாகும். நம்முடைய நற்குணத்தை அவை அறிவிக்கும்.

5. **எடுத்துக்கொள்ளப் பட்டான்** — ஸ்தலமாறினன் எனின் பொருள் சிறக்கும். ஆதி. 5. 24. **பிரியமானவன்**—அவன் நடத்தை அவனை மரணத்துக்குத் தப்பச்செய்தது. கடவுளுக்கு அதிக பிரீதி யானதாயிருந்தது. எம்பெருமானைக் குறித்தும் இவ்விதமாய் அசரீரி வாக்குப் பிறந்தது. அவரும் மரித்தும் உயிர்த்தெழுந்தார். கடவுளுக் குப் பிரியமாய் நடக்கிறது, சமஸ்த பக்தருக்கும் கடமை. இவ்விஷ யத்தில் ஏனோக்கு இயேசுவுக்கு முன்குறிப்பானவர்.

6. இப்பொழுது இதிலிருந்து ஒரு பாடம் போதிக்கிறார். இந்தக் கடவுள் பிரீதிக்கு விசுவாசமே காரணம். 1 தீமோ. 4. 10 காண்க. கடவுளின் **உ**ண்மைக்கு மாத்திரமல்ல, அவருடைய ஆளுகைக்கும் விசுவாசம் நம்மைச் செலுத்துகின்றது. விசுவாசத்தின் முக்கியம் இதனால் விளங்குகின்றது. கடவுளிடம் சேர்தல், அவரைத் தேடுதல். முன்சொன்ன மர்க்கடப்பற்று இதற்கு நல்ல உதாரணம்.

7. நோவா—ஆதி. அதி. 6, 7, 8 காண்க. **தற்காலத்திலே. அது வரையும்**—என மாற்றுக. **காணாதவைகள்**—நூற்றிருபது வருஷத் துக்குப் பின்பு வரவிருந்த ஜலப்பிரளயமும், அது விளைவித்த ஆபத்து களும். **பயபக்தியுள்ளவனாகி. தேவபயத்தால் தூண்டப்பட்டு**— என மாற்றலாம். **குடும்பத்தை** மூ. **வீட்டாரின் ரட்சிப்புக்காக. அதினாலே. அதன் மூலமாய். உலகம்—தீர்த்து. உலகம் குற்றமுள்ள தெனத் தீர்த்து**—மத். 12. 41; லூ. 11. 31 காண்க. **உண்டாகும். விசுவாசத்திற்கேற்ற** எனத் திருத்தவும். எசே. 14. 14 காண்க. ஆதி. 6. 9 - இலே நோவா நீதிமானெனக் கூறியுள்ளது. இந்த அதிகாரமுழு வதிலும் விசுவாசமானது உண்டாக்கும் மனுஷநீதி விவரித்திருக்கிறது. கர்த்தர் அருளும் நீதி வேறு; அதாவது அவர் பார்வையில் எம்பெரு மானைப்போல நீதிமானாக எண்ணப்படுகிறது. இந்த விசுவாசம் பெற் றுக்கொள்ளுகிறது (அதி. 11. 33). 2 பேது. 2. 5–இலே நோவா, நீதியின் பிரசங்கி என்றழைக்கப்படுகிறான். நோவாவுக்குத்தான் இந்தப் பட்டம் வழைய ஏற்பாட்டிலே முதல் முதல் சூட்டப்படுகிறது.

இக்காலத்தில் எத்தனைக் கிரிஸ்தவர்கள் உலகத்தையும் அதன் சிற்றின்பங்களையும் வெறுத்து கடவுள் சொல்லை நம்பி, இனிவரும் அழிவுக்குத் தப்பக் கவலைப்படுகிறார்கள்!

8. இனி ஆபிரகாமின் விசுவாசம் உரைக்கப்படுகிறது. யூதப் பண்டிதர்கள் எல்லாரும் விசுவாசிகளுக்குத் தகப்பனாகிய ஆபிரகாமின் அற்புத விசுவாசத்தைக் குறித்துச் சம்பாஷிப்பது சகஜமாயிருந்தது. இது தன்னைத் தத்தம்பண்ணும் விசுவாசம். அவன் விசுவாசத்தின் பாகங்களாவன: (1) விக்ரகாராதனைக்காரனாயிருந்தும், கடவுள் வாக்கைக் கேட்டு நம்பினான்; (2) மறுவார்த்தை சொல்லாமல் அதற்குச் செவி கொடுத்தான்; (3) போகவேண்டிய ஸ்தலம் தெரியாதிருந்தும் ஆக்ஷேபிக்கவில்லை; (4) போகிறேனென்று ஆயத்தப்பட்டான்; (5) தாமதமும் சந்தேகமும் கிடையாது; (6) தானும் புறப்பட்டுப் போனான்; (7) தன் சொத்து, நிலம்பலங்கள் சமஸ்தத்தையும் விட்டுச் சென்றான்; (8) தான் செல்லவேண்டிய திசைக்குக் கடவுள் தரிசனமே கைகாட்டி மரமாயிருந்தது; (9) தான்மட்டுமென்று, தன் மனைவி, மருகன் முதலான யாவரையும் கூட்டிக்கொண்டு சென்றான். இவ்விஷயத்தில் நோவாவைப்போலத் தன் வீட்டாரின் இரட்சிப்பையும் தேடினான். ஆதி. அதி. 12 வாசிக்கவும். இந்த வாக்கியம் நேர்த்தியான மொழி பெயர்ப்பு.

9. **வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட.** வாக்குச்செய்த அந்த அந்நிய **நாட்டிலே**—எனத் திருத்தலாம். **பரதேசியைப்போல. பரதேசியாக**—என மாற்றவும். **வாக்குத்தத்தத்திற்கு** — அதே வாக்குக்கு ஆபிரகாமின் விசுவாசம், புறப்பட்டுச் சென்றதோடு முடியாமல், புத்திர பௌத்திரர் காலம்வரையும் குறையாமலும் மங்காமலும் விளங்கியிருந்தது. தன் மனைவியை அங்கே புதைத்தார். தன் ஆயுசுகாலமெல்லாம் கடவுள் வாக்கை உறுதியாய்க் கைப்பற்றி யிருந்தான். **கூடாரத்திற் குடியிருந்தல்**—வனவாசிகள் பரதேசிகள் என்பதற்கத்தாட்சி. ஆபிரகாமின் விசுவாசத்துக்கு மூன்று வாக்கியங்களும் அவர் மனையாள் சாராள் விசுவாசத்துக்கு இரண்டு வாக்கியங்களும் இன்னும் பொதுவாக ஏழு வாக்கியங்களும் ஆகப் பன்னிரண்டு வாக்கியங்களை நிருபாசிரியர் வரைகின்றார். இதனால் அவர் விசுவாசத்தின் மகிமை வெளிப்படுகிறது. ஆதி. 17. 8; 20. 1 காண்க. அவர் எதிர் பார்த்துக் காத்திருந்தது அந்தக் கானான் தேசம் மாத்திரமன்று. அடுத்த வாக்கியம் காண்க.

10. **ஏனெனில்**—ஆபிரகாமின் அற்புத விசுவாசத்தின் அந்தரங்க ஆதாரத்தை விளக்குகிறார். கூடாரத்துக்கு அஸ்திபாரம் கிடையாது; கயிறுகளும், முளைகளுந்தாம் அதன் அஸ்திபாரம்; இழுத்துப் பிடுங்கினால் விழுந்து ஒதுங்கிப்போகும். **தேவன்—உண்டாக்கின. கடவுள் தாமே கற்பித்துக்கட்டின**—எனத் திருத்தலாம். ஆபிரகாம் எதிர்பார்த்த நகரத்துக்குக் கடவுளே சிற்பியும் கொல்லருமானவர், அவர் போட்ட அஸ்திபாரம் பர்வதங்களைவிடப் பலமும் நிலைபெற்றதுமானது. "பரம எருசலேம்." அதி. 12. 22; 13. 14; கலா. 4. 26. வெளி. 21. 2, 14–இலே இந்த திவ்யநகரம் பலவாறு வர்ணித்திருக்கிறது ஒரு வார்த்தையிலே, இந்நகரம் மோட்சமே. கடவுளே பிரபஞ்சத்தின் சிற்பி. **நகரத்துக்குக் காத்திருந்தான். நகரத்தை அவன் எதிர்பார்த்திருந்தான்**—என மாற்றவேண்டும். 2 கொரி. 5. 1 காண்க.

இந்த உலகவாழ்க்கையிலிருந்து தவிக்கிற விசுவாசிகளுக்குப் பரம நகரம் ஒன்று ஏற்பட்டிருக்கிறது எத்தனை ஆறுதலுக்கும் ஆனந்தத்துக்கும் ஏதுவானது!

11. **சாராளும்**—இந்த உம்மை இறந்ததுதழீஇய எச்சவும்மை. ஆரம்பத்திலே விசுவாசக் குறைவினாலே நகைத்தவளான சாராள் தானும் எ-று. ரோ. 4. 9 காண்க. முன்போல **வாக்குச்செய்தவர். எண்ணி. எண்ணினபடியால்** — எனத் திருத்தவும். அதி. 10. 13 காண்க. **பிள்ளைபெற்றாள்**—இவ்வார்த்தைகள் மூலத்திலில்லை. **வயது கடந்திருந்தபொழுது கர்ப்பந்தரிக்கச் சக்திபெற்றாள்**—என முடிக்கவும். இதிலே அற்புதம் என்னவெனில், 50 வயது கடந்து நூறுவயதான காலத்தில் சாராள் கர்ப்பந்தரித்ததே. அதிக வயது சென்ற விருத்தாப்பியராலே ஒரு குடும்பம் ஸ்தாபிக்கப்பட்டது என்பதே இதன் முக்கிய கருத்து. ஆபிரகாம் தன் மனையாளையும் விசுவாசியாக்கினார்.

12. **ஆனபடியினாலே**—அல்லது இவ்வாறன்றி. ஆபிரகாமின் சந்ததிப்பெருக்கம் இங்குக் கூறப்படுகிறது. **பெருக்கமான. பெருக்கத்தில்**—என மாற்றவும். **நட்சத்திரங்களை**—மணலை. ஆதி. 22. 17; உபா. 1. 10 காண்க. **மிகுந்த ஜனங்கள். அனேகர் அல்லது திரளானவர்கள். ஒருவனாலே. ஒருவனிலிருந்து. பிறந்தார்கள். தோன்

**றினார்கள்.** அற்புதத்தில் ஆரம்பித்த இந்த அதிசயமான சந்ததிப்பெருக்கம் நாளதுவரையும் கிரிஸ்துமார்க்கத்துக்கு எதிர்க்கமுடியாத ஒரு திருஷ்டாந்தம். நாடு நகரம்; அரசு ஆட்சி ஒன்றுமில்லாத இந்த ஆபிரகாம் வமிசத்தார் இப்பொழுது 13 கோடியே 30 லட்சம்பேர் உலகமெங்கும் பரவி, தங்கள் பூர்வமதத்தையும் அதன் சில ஆசாரங்களையும் பயபக்தியாய் அனுஷ்டித்து வருகிறார்கள். அவர்கள் தொகையிலே ஆபிரகாமுக்குக் கடவுள்செய்த வாக்கு நிறைவேறியிருக்கிறது. ஜனத்தொகை கொஞ்சமேனும் குறையாமல் வருஷந்தோறும் அதிகரித்து வருகின்றது. ஆதிகாலத்து ஜனங்களெல்லாம் மாண்டு மடிந்தும் இந்த ஒரு ஜனமட்டும் அவர்கள்மீது துன்பங்கள் வெள்ளம்போல் புரண்டோடியும் மடியாமலும் மங்காமலும் இருக்கிறார்கள்.

11. [13-16.]

13 இவர்களெல்லாரும், வாக்குத்தத்தம் பண்ணப்பட்டவைகளை அடையாமல், தூரத்திலே அவைகளைக் கண்டு நம்பி, அணைத்துக்கொண்டு, பூமியின்மேல் தங்களை அந்நியரும் பரதேசிகளும் என்று அறிக்கையிட்டு, விசு-
14 வாசத்தோடே மரித்தார்கள்.—இப்படி அறிக்கையிடுகிறவர்கள் சுயதேசத்தை நாடிப்போகிறோம் என்று
15 தெரியப்படுத்துகிறார்கள்.—தாங்கள் விட்டுவந்த தேசத்தை நினைத்தார்களானால், அதற்குத் திரும்பிப்போவதற்கு அவர்களுக்குச் சமயங் கிடைத்திருக்குமே.—
16 அதையல்ல, அதிலும் மேன்மையான பரம தேசத்தையே விரும்பினார்கள்; ஆகையால் தேவன் அவர்களுடைய தேவனென்னப்பட வெட்கப்படுகிறதில்லை; அவர்களுக்கு ஒரு நகரத்தை ஆயத்தம்பண்ணினாரே.

## இடையில் ஓர் போதனை.

13. **இவர்களெல்லாரும்** அல்லது **இவர்களனைவரும். வாக்குத்தத்தம்** மூ. **வாக்குச் செய்யப்பட்டவைகளைப் பெறதிருந்தும்—நம்பி அணைத்துக்கொண்டு**—இது புதுத் திருப்புதலுக்குச் சரியானதன்று. **களித்து** அல்லது **களிப்புற்று** அல்லது **அங்கீகரித்து** என மாற்றலாம். **பூமியின்மேல். பூமியிலே. விசுவாசத்தோடே. விசுவாசத்திலே.** இந்த அரும்பத விளக்கத்தினால் வாக்கியத்தின் பொருளும்

விளங்கவேண்டும். வாக்குச்செய்த காரியங்கள் அனேகம். உதாரண மாக, கானான்தேசச் சுதந்தரம், சந்ததிப்பெருக்கம், சர்வஜன ஆசீர்வாதம்; எகிப்தில் அடிமைத்தனம், பரமநகரவாசம் முதலியன. முதல்வாக்கு நிறைவேற 450 வருஷஞ் சென்றது. ஆகிலும் முற்பிதாக்கள் தங்கள் விசுவாசப்பற்றை இழந்துவிடவில்லை. அது அவர்கள் ஞானஜீவியத்துக்கு ஆகாரமும் ஆதாரமுமாயிருந்தது. **நம்பி.** அனேக மூலப்பிரதிகளில் இல்லை. யோவா. 8 56—இலே "உங்கள் பிதாவாகிய ஆபிரகாம் என்னுடைய நாளைக் காண ஆசையாயிருந்தான்; கண்டு களிகூர்ந்தான்" என்று எம்பெருமான் யூதரைப்பார்த்து உரைத்தார். **அந்நியரும் பரதேசிகளும்.** ஆதி. 23. 4; 47. 9; 1 நாளா. 29. 15; சங். 39. 12. ஐ காண்க. தற்கால விசுவாசிகளுக்கு இதென்ன நன் மாதிரி! தாங்கள் விசுவாசித்து ஆசிக்கிற அனேக பாக்கியங்கள் அவர்களுக்குக் கிடைக்கிறதில்லை. விசேஷமாகப் பூரண மனஅமைதியும் சமாதானமும் இம்மையிலவர்களுக்கு அருமையாயிருக்கிறது.

**14. இப்படி அறிக்கையிடுகிறவர்கள்**—இது சரியான பொருளாயினும் சரியான மொழிபெயர்ப்பன்று. **இவ்வாறுரைப்பவர்.** எனத் திருத்துக. **சுயதேசத்தை**—**தங்கள் சொந்த தேசத்தை** எனின் தெளிவாயிருக்கும். இது மோட்சத்தைக் குறிக்கிறது. அடுத்த வசனம் இதை ஐயந்திரிபறக் காட்டுகின்றது.

**15. விட்டுவந்த தேசத்தை**—கல்தேயா அல்லது இப்பொழுது சண்டை நடக்கிற மெசொப்பொத்தாமியா நாடு. **கிடைத்திருக்குமே.** **வாய்த்திருக்குமே** என மாற்றலாம்.

**16. இப்பொழுதோ**—இதை ஆரம்பத்தில் வருவித்துக்கொள்க. **விரும்பினார்கள்.** **விரும்புகிறார்கள்** என நிகழ்காலமாக மாற்றுக; காலம் மாறுகிறது உறுதிக்காக. **தேவன்** இரண்டும் **கடவுள்** எனத் திருத்துக. சுத்த அந்நியரும் விக்கிரகத் தொழும்பருமாகிய ஆபிரகாம் முதலானவர்கள் கடவுள் குரலைக் கேட்டுக் கீழ்ப்படிந்ததினாலே, அவர் அவர்களைத் தமது சொந்த அடியாராக அங்கீகரித்துக்கொண்டார். கடவுள் தம்மை "ஆபிரகாமின் கடவுளும், ஈசாக்கின் கடவுளும், யாக்கோபின் கடவுளும்" என்றழைத்துக்கொள்ளுகிறார். ஆதி. 28. 13; யாத். 3 6-15. இந்தப் போதனையினாலே நிருபாசிரியர், முற்பிதாக்களின்

விசுவாசம் இம்மைக்குரிய பாக்கியங்களுமன்றி மேலான நித்திய மான மறுமைக்குரிய பாக்கியங்களின்மேலும் வைக்கப்பட்டதென் பதை உணர்த்துகிறார்.

**நகரத்தை**—1 பேது. 1. 4—இலே "அழியாததும் வாடாததும் மாசற்றதுமாகிய சுதந்தரத்திற் கேதுவாக" என்று இந்நகரத்தைக் குறித்துக் கூறியிருக்கிறது.

11. 17-19.

17 மேலும் விசுவாசத்தினாலே ஆபிரகாம் தான் சோதிக் கப்பட்டபோது ஈசாக்கைப் பலியாக ஒப்புக்கொடுத்
18 தான்.—ஈசாக்கினிடத்தில் உன் சந்ததி விளங்கும் என்று அவனோடே சொல்லப்பட்டிருந்ததே; இப்படிப்பட்ட வாக்குத்தத்தங்களைப் பெற்றவன், மரித்தோரிலிருந்து எழுப்ப தேவன் வல்லவரா யிருக்கிறாரென்றெ
19 ண்ணி,— தனக்கு ஒரே பேறானவனையே பலியாக ஒப்புக்கொடுத்தான்; மரித்தோரிலிருந்து அவனைப் பாவ னையாகத் திரும்பவும் பெற்றுக்கொண்டான்.

## ஆபிரகாமின் விசுவாசப்பலி.

17. ஆபிரகாம் விசுவாசத்தினாலே சுயதேசம் விட்டுப் பரதேசம் போனதைச் சிறப்பித்த நிருபாசிரியர், இப்பொழுது அதன் பூரண கனியைச் சிறப்பிக்கிறார். **சோதிக்கப்பட்டபோது**—கடவுள், உலக மறிய ஆபிரகாமின் விசுவாசத்தைச் சோதித்தார். தமக்கு அதன் வைராக்கியம் பூர்த்தியாய்த் தெரிந்ததானாலும், பிற்காலத்தோர் அதைக் கண்டுணர்ந்து பயனடையும்படி "விசுவாசிகளின் தகப்பனைச்" சோ தித்தார். **பலியாக ஒப்புக்கொடுத்தான்.** இதை: பலிசெலுத்தி விட்டான்—என மூலத்திற்கேற்கத் திருத்துக.

18. **அதாவது**:—இதை வருவித்துக்கொள்க. **வாக்குகளைச் சந் தோஷத்துடன் பெற்றவனும், ஈசாக்கிலே உன் சந்ததி விளங்கு மென்று வாக்குப்பெற்றவனும் கடவுள் மரித்தோரிலிருந்தும் எழுப்ப முடியுமென்று நிதானித்து, தன் ஒரே பேறன குமாரனைப் பலி செலுத்திவிட்டான்; அங்கிருந்து உவமையிலே மறுபடியும் அவனைப் பெற்றுக்கொண்டான்.**

**19. எழுப்ப முடியும்**—கடவுளின் சர்வ சக்தியிலே ஆபிரகாமுக்கிருந்த விசுவாசம் அவன் அருஞ்செயலுக் காதாரமாயிற்று. இட்டதைச் செய்வேன், மற்றதுக்கு ஆண்டவர் இருக்கிறார் என்கிற துணிவு. **உவமையாக**—ஈசாக்கு மெய்க்கு மெய்யாய்க் கத்திகொண்டு வெட்டப்படவில்லை. கத்தியை ஓங்கினதே பலிசெலுத்திவிட்டதாகக் கடவுளால் பாவிக்கப்பட்டது. பெரியபுராணத்தில் இதற்கு நிகரான ஒரு கதையுண்டு. ஒருகால் சிவன் குருவேஷமாகத் தமது தொண்டன் ஒருவனிடம் சென்று, பசியாயிருக்கிறது. உன் குமாரனைக் கொன்று சமைத்துக் கொடுவென, உடனே தம்பதிகள் அப்படியே செய்து அமுதுபடைத்தார்களாம் குரு உண்ண வுட்கார்ந்தவுடன் குமாரன் பாடசாலையிலிருந்து சுவடியுடன் வந்தானாம். வந்ததும் அக் குரு மறைந்தனராம். அரிச்சந்திரவிலாசத்திலும், மனையாளை வெட்டுங் கத்தி பூமாலையாக மாறிவிட்டது. நமது விசுவாசப்பற்று நன்றாய்ப் பரீக்ஷிக்கப்படவேண்டும்.

11. 20-22.

20 விசுவாசத்தினாலே ஈசாக்கு வருங்காரியங்களைக் குறித்து யாக்கோபையும் ஏசாவையும் ஆசீர்வதித்தான்.

21 விசுவாசத்தினாலே யாக்கோபு தன் மரணகாலத்தில் யோசேப்பினுடைய குமாரர் இருவரையும் ஆசீர்வதித்து, தன் கோலின் முனையிலே சாய்ந்து தொழுதுகொண்டான்.

22 விசுவாசத்தினாலே யோசேப்பு இஸ்ரவேல் புத்திரர் எகிப்து தேசத்தைவிட்டுப் புறப்படுவார்களென்பதைப் பற்றித் தன் அந்தியகாலத்தில் பேசி, தன் எலும்புகளைக்குறித்துக் கட்டளைகொடுத்தான்.

**முன்னோரின் விசுவாசம்.**

**20. வருங்காரியங்களைக் குறித்து** — உம்மை சேர்க்கவேண்டும். விசுவாசத்தினாலே பின்வருவதை முன்னுரைக்குஞ் சக்தி கிடைத்தது. ஆதி. 27. 39, 40. ஏசாவுக்கு யாக்கோபைப்போல ஆசீர்வாதங்கள் ஏராளமாய் உரைக்கப்படாவிட்டாலும், இம்மைக்குரிய சில பாக்கியங்கள் வாக்குச் செய்யப்பட்டன. ஏசா மாமிசத்துக் குரியவனாதலால் அவனுக்கு ஞான ஆசீர்வாதங்களை அனுபவிக்கும் குணம் கிடையாது.

மனதைப்போல மங்கிலியம் என்றாற்போல, நம்முடைய குணசீலத்துக்குத் தக்கபடியே நமக்கு ஆசீர்வாதங்கள் அருளப்படும்.

21. மரணகாலத்திலே. மரணவேளையிலே—எனத் திருத்துக. வேளை குறித்தகாலம். இருவரையும். ஒவ்வொருவரையும்— எனத் திருத்துக. கோலின் மி. ஊன்றுகோல் உச்சியிலே. யாக்கோபு படுக்கையிலிருந்தபடியே எப்பிராயீம், மனாசே என்ற யோசேப்பின் குமாரரை வெவ்வேறாகத் தலைமேல் கைவைத் தாசீர்வதித்தபின்பு, கஷ்டத்துடன் எழுந்து தன் ஊன்றுகோலைப் பிடித்து, தலைகவிழ்ந்து வணங்கினான் என்பது பொருள். தாவீது செய்ததுபோல. 1 இரா. 1. 47; ஆதி. 47. 29–31 காண்க. கோலைத் தொழுதுகொண்டான் என்றர்த்தம்பண்ணக் கிஞ்சித்தேனும் ஆதாரங்கிடையாது.

22. தன் அந்தியகாலத்தில் — தன் முடிவு சமீபித்தபோழுது எனத் திருத்துக. இஸ்ரவேல்—பேசி. இஸ்ரவேல் புத்திரர் வெளிப் பட்டுப்போகிறதைக் குறித்துச் சொல்லி எனத் திருத்துக. எகிப்து தேசத்தை விட்டு என்னும் வார்த்தைகள் மூலத்திலில்லை. ஆபிரகாமுக்குச் செய்த வாக்குப் பரம்பரையாய்த் தன் புத்திரன் பேரானகிய யோசேப்புக்கு நன்றாய்த் தெரிந்திருந்தாலும், விசுவாசத்தினாலே அதை உறுதியாய்ப் பற்றியிருந்தான். அந்த உறுதிக்கு, தன் எலும்புகளைக் கானான் நாட்டுக்குக் கொண்டுபோய்ப் புதைக்கவேண்டுமென்று கட்டளையிட்டான். இது லேசான விசுவாசமன்று. ஆதி. 50. 24–26; யாத். 13. 19; அப். 7. 16 காண்க.

11. 23-29.

23 மோசே பிறந்தபோது அவனுடைய தாய்தகப்பன்மார் அவனை அழகுள்ள பிள்ளையென்று கண்டு, விசுவாசத்தினாலே, ராஜாவினுடைய கட்டளைக்குப் பயப்படாமல் அவனை மூன்றுமாதம் ஒளித்துவைத்தார்கள்.—
24 விசுவாசத்தினாலே மோசே தான் பெரியவனானபோது பார்வோனுடைய குமாரத்தியின் மகன் என்னப்படு
25 வதை வெறுத்து,—அநித்தியமான பாவ சந்தோஷங்களை அநுபவிப்பதைப்பார்க்கிலும் தேவனுடைய ஜனங்களோடே துன்பத்தை அநுபவிப்பதையே தெரிந்து
26 கொண்டு,—இனிவரும் பலன்மேல் நோக்கமாயிருந்து,

எகிப்திலுள்ள பொக்கிஷங்களிலும் கிறிஸ்துவினிமித்தம் வரும் நிந்தையை அதிக பாக்கியமென்று எண்ணினான்.

27 விசுவாசத்தினாலே அவன் அதரிசியமானவரைத் தரிசிக்கிறதுபோல உறுதியாயிருந்து, ராஜாவின் கோபத்துக்குப் பயப்படாமல் எகிப்தைவிட்டுப் போனான்.

28 விசுவாசத்தினாலே, முதற்பேறானவைகளைச் சங்கரிக்கிறவன் இஸ்ரவேலரைத் தொடாதபடிக்கு, அவன் பஸ்காவையும் இரத்தம் பூசுதலாகிய நியமத்தையும் ஆசரித்தான்.

29 விசுவாசத்தினாலே அவர்கள் சிவந்த சமுத்திரத்தை உலர்ந்த தரையைக் கடந்துபோவதுபோலக் கடந்துபோனார்கள்; எகிப்தியர் அப்படிச் செய்யத் துணிந்து அமிழ்ந்துபோனார்கள்.

### மோசேயின் விசுவாசம்.

23. இந்த வாக்கியத்தில் மோசேயின் பெற்றோர் ஆம்ராம் யோக்கிபேத்து என்பவர்களின் விசுவாசம்தான் உரைத்திருக்கிறது. யாத். 2. 2–இலே தாயாரைப்பற்றிமாத்திரம் சொல்லியிருந்தாலும், தந்தையும் விசுவாசமுள்ளவனாய் அந்த ஒளிக்குந்தொழிலுக் குடன்பட்டிருக்கவேண்டும். **அழகுள்ள. லட்சணமான** என மாற்றலாம். அப். 2. 20 காண்க.

**அவனுடைய. அவன்; ராஜாவினுடைய. ராஜாவின்**—ஐக்கிய மொழிபெயர்ப்பிலே வேற்றுமையுருபுகள் அனாவசியமாய் விரித்திருக்கின்றன. இது தமிழ்நடைக்கு மாறானது. அன்றி, இரட்டை உருபுகள் அடுக்கியிருக்கிறது. **கட்டளை.** ஆண் குழந்தைகளையெல்லாம் ஆற்றிலே அமிழ்த்தவேண்டுமென்ற கட்டளை யாத். 1. 22; 2. 2.). விசுவாசத்தின் இரகசியம் மூன்று: (1) பாலகன் முகலட்சணத்தைப் பார்த்துப் பிறந்த வருங்காரிய நம்பிக்கை; (2) ராஜகட்டளைக்கு அஞ்சாமை (3) அவனை மறைத்துவைத்தல். அழகு நித்யானந்தம் என்றொரு இங்கிலிஷ்புலவர் உரைத்தார். அகத்தின் அழகு முகத்தில் தெரியுமென்பது தமிழ்ப் பழமொழி! மோசேயின் பெற்றோர் பிசகுசெய்யவில்லை. அவர்கள் விசுவாசத்தின்படி அவர்களுக்கு ஆசீர்வாதங் கிடைத்தது.



நீல் நதி.

24. தான்—இதை விட்டுவிடுகெ; இலக்கணவழு. பார்வோனு டைய குமாரத்தியின் மகன். பார்வோனின் குமாரிப் புத்திரன்

எனச் சுருக்கி மாற்றுக. அதாவது ராஜகுமாரன் என்றும் பெரிய அந்தஸ்தை. **வெறுத்து**—கடினமான பதம்; **மறுத்து** எனத் திருத்துக. இந்த வாக்கியத்துடன் 25–ம், 26–ம் சேர்ந்தன. மோசேயை எழுவாயாய்க்கொண்டு; மோசே—அதிக பாக்கியமென்றெண்ணி—தெரிந்துகொண்டு—மறுத்தான் என்று முடிக்கவேண்டும். மோசே மறுத்ததற்குக் காரணம் கிறிஸ்துவின் பற்றே. யாத். 2. 10; அப். 7. 22–25.

**25. அநித்தியமான பாவ சந்தோஷங்களை—பாவத்தின் இன்பங்களைச் சிறிதுகாலம்** எனத் திருத்துக. யோபு. 20. 5 காண்க. எகிப்தர்கள் அரண்மனையில் வசிப்பதே பாவமென்று மோசேக்குத் தோன்றினது. அங்கேயும் ஒருவேளை பரிசுத்த ஜீவியஞ் செய்யக்கூடும். ஆனால், தன் ஜனம் கொடிய துன்பமுறுகையில் தான்மட்டும் இன்பமாய் வாழ்தல் தகுதியன்றெனத் தெளிந்துகொண்டான். இது மோசே மகாத்மாவின் மேலான சிந்தை. இந்த ஞானம் அவருக்குதித்தது விசுவாசத்தினாலேயே. பிறர் வருத்தத்தாலும் வருந்துங் குணம் சிறந்தது; பரதுக்கம் சகியாதவர் சாதுக்கள். **தேவனுடைய—துன்பத்தை. கடவுள் ஜனத்துடன் துன்பம்** எனத் திருத்துக. **அநுபவிப்பதையே—சகிப்பதையே** சரியான மொழிபெயர்ப்பு.

**26. இனிவரும் — இருந்து. பதிற்பலனை எதிர்பார்த்து** என மாற்றலாம். **இனிவரும்** மி. பொழிப்புரையாகத் தோன்றுகிறது. **எகிப்திலுள்ள பொக்கிஷங்களிலும். எகிப்தின் பொக்கிஷங்களை விட—கிறிஸ்துவின் நிந்தையை. கிறிஸ்துவின் நிந்தையே. அதிக பாக்கியமென்று—சிறந்த செல்வமென்று** எனத் திருத்துக. **நிந்தை.** மேசியாவின்நிமித்தம் வருகிற நிந்தை. அதி. 13. 13; 2 கொரி. 1. 5; ரோ. 15. 3; பிலி. 3. 7–11; கொலோ. 1. 24 காண்க. இந்த வாக்கியங்களில் இந்த **நிந்தை** விரித்துரைத்திருக்கிறது. சங். 89. 50, 51–ம் வாக்கியங்களையும் வாசித்துப் பாருங்கள். கிறிஸ்து சகித்த நிந்தை அவர் அடியாருக்கும் வருகிறது. உலகம் அவர்களை எந்நாளும் நிந்திக்கிறது. குரு எவ்வாறோ, அவ்வாறே சிஷ்யரும். விசுவாசத்தினாலே மோசே மேசியாவின் நிந்தையை நோக்கியிருக்கவேண்டும்.

மோசே மகாத்மாவின் கையில் ஒரு துலாக்கோல் அல்லது திராசு இருக்கிறது. ஒரு தட்டிலே எகிப்தின் பொக்கிஷங்கள் வைத்திருக்கி

றது. மறுதட்டிலே கிரிஸ்துவின் நிந்தை வைத்திருக்கிறது. நிந்தையே அதிக பாரமுள்ளதென்று தட்டுகள் நிலையைப்பார்த்து நிதானிக்கிருர். எந்தப் பாலியனுக்கு இவ்வாறு தூக்கி, நோக்கி, நிறுக்கக் குணமுண்டோ அவனே பக்தன். கடவுளுக்கும் பிரீதியானவன். அவனுக்குத்தான் தக்க பதிற்பலன் இம்மையிலும் மறுமையிலும் கிடைக்கும்; இம்மையிலே சூத்ய ஆனந்தமும் மறுமையிலே நித்யானந்தமும் வாய்க்கும். "சின்னீர வின்பத்தின் பிற்பயக்கும் பீழை பெரி"தெனப் பெரும்பான்மையான பாலியர் உணராமல், சிற்றின் பத்தில் உழன்று மாளுகிருர்கள்.

27. மோசேயின் விசுவாச சக்தியை நிருபாசிரியர் பின்னும் மூன்று வாக்கியங்களிலே நன்கு விளக்குகிருர். **அதரிசியமானவரை—யிருந்து. காணப்படாதவரைக் காண்கிறவனுக உறுதியுற்று.** அதாவது மோசே ஒருவர்மாத்திரம் கடவுள் காட்சிபெற்றவர். மற்ற தீர்க்கதரிசிகளுக்குக் கிடைக்காத பாக்கியம் அவருக்குமாத்திரம் கிடைத்தது. யாத். 33; எண். 12. 7, 8 காண்க. மோசே கடவுளை முகமுகமாகக் கண்டார். இந்தத் தரிசனம் முந்திக்கூட அவருக்கு ஒருகால் லபித்திருக்கும். கடவுளைக் கண்ட உறுதியினுலே அவர் இன்னுஞ் சில அருஞ்செயல்கள்புரிய அருள் கிடைத்தது. **ராஜாவின்—பயப்படாமல். அரசன் சினத்துக்கஞ்சாமல்** எனின் தமிழ்நடை சிறக்கும். யாத். 2. 14, 15--இலே அஞ்சி ஓடினதாகச் சொல்லியிருக்கிறது. இது புறம்பான அச்சம். அஞ்சா நெஞ்சு படைத்தவராயினும் தமது ஜனத்தின் அவிசுவாசத்தின்நிமித்தம் சிறிதுகாலம் மீதியானிலே மறைவாயிருக்க நேரிட்டது. ஆகிலும், வாக்கியத்திலே எகிப்தை விட்டுப் போதல் கடைசிப் பிரயாணத்தைத்தான் குறித்தது. **எகிப்தை விட்டுப் போனுன்.** எகிப்தை விட்டுப் **போய்விட்டான்** எனத் திருத்துக. இதினுலே கடைசிப்பிரயாணம் குறிக்கப்படுகிறதைத் தெளிவுற உணரலாம். **காணப்படாதவரை.** 1 தீமோ. 6. 15, 16 காண்க காணப்படாதவரைக் கண்ட தைரியத்தினுலே காணப்படுகிற அரசனுக்கஞ்சாமல் எகிப்தைவிட்டுப் போய்விட்டான் என்றவாறு.

28. **முதற் பேறனவைகளை—தலைச்சன் பிள்ளைகளை** என மாற்றலாம். யாத். 12. 21–23. இது பத்தாம் வாதை. **இஸ்ரவேலரை.**

மூலத்தில் அவர்களை என்றுமாத்திரம் இருக்கிறது பூசுதலாகிய நியமத்தையும். இது பொழிப்புரை. சரியான மொழிபெயர்ப்பு: தெளித்தலையும். மோசேயின் விசுவாசம் இந்த இரண்டு சம்பவங்களை ஏற்படுத்தினதிலிருந்தது. பஸ்காவும் உதிரந் தெளித்தலும் வரவிருந்த தேவ ஆட்டுக்குட்டியான மேசியாவுக்கும் அவர் இரத்தஞ் சிந்துதலுக்கும் அறிகுறிகளாயிருந்ததை மோசேமுனிவர் விசுவாசக் கண்களால் கண்டறிந்தார். ரோ 3. 25 காண்க. சங்கரிக்கிறவன். எபிரேய மூலத்தில் சங்காரிப்பு. 1 நாளா. 21. 15; 2 நாளா. 32. 21; 1 கொரி. 10. 10, காண்க. ஆசரித்தான். அல்லது, ஏற்படுத்தினன். ஆட்டுக்குட்டிப் பலியும் உதிரந் தெளித்தலும் எகிப்தியர் வீண்பக்திக்கு நேர் விரோதமாயிருந்தன.

29. அவர்கள். மோசேயும் இஸ்ரவேலரும். இந்த வாக்கியத்தில் ஜனத்தின் விசுவாசம் எடுத்துரைக்கப்படுகிறது. மோசே தமது விசுவாசத்தை ஜனத்துக்கு ஊட்டினார்போலும். சிவந்த சமுத்திரத்தை. செங்கடலை என மாற்றவும். உலர்ந்த—போல. உலர்ந்த தரையைப்போல எனத் திருத்துக. கடந்து சென்றார்கள். அப்படி அதை; அதைக் கடந்து செல்கையை. அமிழ்ந்துபோனார்கள். மூலத்திலே விழுங்கப்பட்டார்கள் என்றிருக்கிறது. சமுத்திரம் அவர்களை விழுங்கிவிட்டது. யாத். 14. 15–28; சங். 106. 9–12 காண்க. விசுவாசத்தினாலே இயற்கையான கஷ்டங்களை மேற்கொண்டார்கள்.

11. 30-31.

30 விசுவாசத்தினாலே எரிகோபட்டணத்தின் மதில்கள் ஏழுநாள் சுற்றிவரப்பட்டு விழுந்தது.

31 விசுவாசத்தினாலே ராகாப் என்னும் வேசி வேவுகாரரைச் சமாதானத்தோடே ஏற்றுக்கொண்டு, கீழ்ப்படியாதவர்களோடேகூடச் சேதமாகாதிருந்தாள்.

### இரண்டு விசேஷ உதாரணங்கள்.

30. வாக்கியத்தை: ஏறக்குறைய ஏழுநாள் சுற்றிவந்த எரிகோவின் மதில்கள் விசுவாசத்தினாலே விழுந்தன. எனத் திருத்தலாம். யோசு. 6. 12–20. இது யோசுவாவின் விசுவாசம். அந்த மதில்கள்

எவ்வாறு விழ நேரிட்டதென நமக்குத் தெரியாது. தெய்வச்செயலால் ஒருவேளை பூமி அதிர்ச்சி உண்டாயிருக்கும். விசுவாசம் பெரிது. கடுகத்தனை விசுவாசம் மலையையும் புரட்டி உருட்டிவிடுமே.

31. **வேவுகாரரை. வேவாட்களை.** இந்த வரலாற்றை யோசு. 2. 9–11–இலே காண்க. விசுவாசித்த வேசிக்குக்கூட இரட்சிப்புக் கிடைத்தது. "உங்கள் தெய்வமாகிய கர்த்தனே கடவுள்" என்றாள். வேதவாக்கியங்கள் மனிதர் குணங்களை மறைக்கிறதில்லை. தர்கும் என்னும் யூதநூல், ராகாப்பைச் சத்திரக்காரியென்று மரியாதைப் பொய் உரைக்காது. அவ்வாறே பிறநூல்களும். **சேதமாகாதிருந்தாள்.** அழிந்து போகவில்லை எனத் திருத்துக. **கீழ்ப்படியாதவர்களோடு.** எம்பெருமான் ஒருமுறை யூதர்களைப் பார்த்து, ஆயக்காரரும் பாவிகளும் உங்களுக்கு முன்னே பரலோகம் போகிறார்கள் என்றார். யாக். 2. 25 காண்க. விசுவாசத்தின் கடைசி வெற்றி ஒரு அந்நிய வேசியானவள் அடைந்தது. இதனால் சுவிசேஷம் உலகத்திலுள்ள யாவருக்கும் பொதுவானதென்றறிக. **சமாதானத்தோடு.** சமாதானமாய்—அன்புடன்.

11. 32-38.

32 பின்னும் நான் என்ன சொல்லுவேன்? கிதியோன், பாராக், சிம்சோன், யெப்தா, தாவீது, சாமுவேல் என்பவர்களையும், தீர்க்கதரிசிகளையுங்குறித்து நான் விவ-
33 ரஞ் சொல்லவேண்டுமானால் காலம் போதாது.—விசுவாசத்தினாலே அவர்கள் ராஜ்யங்களை ஜெயித்தார்கள், நீதியை நடப்பித்தார்கள், வாக்குத்தத்தங்களைப் பெற்றார்கள், சிங்கங்களின் வாய்களை அடைத்தார்கள்,—
34 அக்கினியின் உக்கிரத்தை அவித்தார்கள், பட்டயக் கருக்குக்குத் தப்பினார்கள், பலவீனத்தில் பலன்கொண்டார்கள்; யுத்தத்தில் வல்லவர்களானார்கள், அந்நிய-
35 ருடைய சேனைகளை முறியடித்தார்கள்.— ஸ்திரீகள் சாகக்கொடுத்த தங்களுடையவர்களை உயிரோடெழுந்திருக்கப் பெற்றார்கள்; வேறு சிலர் மேன்மையான உயிர்த்தெழுதலை அடையும்படிக்கு, விடுதலைபெறச்
36 சம்மதியாமல், வாதிக்கப்பட்டார்கள்;—வேறு சிலர் நிந்தைகளையும் அடிகளையும் கட்டுகளையும் காவலையும்

37 *அநுபவித்தார்கள்; — கல்லெறியுண்டார்கள், வாளால் அறுப்புண்டார்கள், பரீட்சை பார்க்கப்பட்டார்கள், பட்டயத்தினாலே வெட்டப்பட்டு மரித்தார்கள், செம்மறியாட்டுத் தோல்களையும் வெள்ளாட்டுத் தோல்களையும் போர்த்துக்கொண்டு திரிந்து, குறைவையும் உபத்திர*
38 *வத்தையும் துன்பத்தையும் அநுபவித்தார்கள்;—உலகம் அவர்களுக்குப் பாத்திரமாயிருக்கவில்லை; அவர்கள் வனாந்தரங்களிலேயும் மலைகளிலேயும் குகைகளிலேயும் பூமியின் வெடிப்புகளிலேயும் சிதறுண்டு அலைந்தார்கள்.*

### சில பொது உதாரணங்கள்.

32. **பின்னும் நான் என்ன சொல்லுவேன்? சொல்வேன்** *எனச் சுருக்குக. இவ்வாக்கியத்திற் சொல்லப்படுகிறவர்கள் மூன்று வகுப்பான ஜனத்தலைவர்:* (1) *நீதிபதிகள்,* (2) *அரசர்கள்,* (3) *தீர்க்கதரிசிகள். பழைய ஏற்பாட்டின் சரித்திரபாகத்திலிருந்தும், தீர்க்கதரிசன ஆகமங்களிலிருந்தும் சில உதாரணங்கள்மட்டும் எடுத்துரைக்கிறார்.* **விவரஞ்சொல்ல வேண்டுமானால். சொல்வேனானால்.** *மூலத்தில் விவரம் என்கிற வார்த்தையில்லை.* 32–34–*இலே ஓங்கும் விசுவாசமும்,* 35-38-*இலே தாங்கும் விசுவாசமும் விவரிக்கப்படுகிறது. அதாவது, வெல்லுகிற விசுவாசமும் சகிக்கிற விசுவாசமும். நிருபாசிரியர் மனக்கண்ணுக்கு நெடுங்கணக்கான விசுவாச வீரர்கள் தோன்றுகிறார்கள். இவர் யூதசரித்திரத்தை நன்றாக வாசித்துக் கிரகித்தவர். அதில் மறைவாகக் கிரியை செய்து வெற்றியடைந்த விசுவாசத்தை உறுதியாய்ப் பிடித்துக்கொண்டவர். இப்பொழுது அவர் விவரிக்கும் உதாரணங்களைக் கவனிப்போம்.*

33. **ராஜ்யங்களை ஜெயித்தார்கள்**—*கானான் தேசத்தை ஜெயித்துக் கைப்பற்றிக்கொண்ட வரலாறு இதில் விசேஷமாய் அடங்கியிருக்கிறது. யோசுவாப் புஸ்தகத்தை வாசித்துப்பாருங்கள். ஜெயிக்கப்பட்ட அரசர் முப்பத்திரண்டுபேர். தாவீதரசன் ஜெயங்களும் அவர் மனதிலிருந்தன* (2 *சாமு.* 5. 17-25; 21. 15 *மு*). **நீதியை நடப்பித்தார்கள்.** *நீதிபதிகளையும் ராஜாக்களையும்பற்றிய பொதுக் குறிப்பு; உதாரணத்துக்கு* 1 *சாமு.* 12. 3, 4; 2 *சாமு.* 8. 15; 1 *நாளா.* 18. 14, *மு காண்க. எசே.* 45. 9–*இலே இஸ்ரவேலரசரின்*

பிரதான கடமை நீதியையும் நியாயத்தையும் நடப்பிக்கவேண்டிய தெனக் கூறியிருக்கிறது. **வாக்குத்தத்தங்களைப் பெற்றார்கள்**—**வாக்குகள் நிறைவேறப் பெற்றார்கள்** என மாற்றவும். விசேஷமாக, இம் மைக்குரிய பாக்கியங்கள் (யோசு. 21. 43–45); ஆவிக்குரியவைகளும் கொஞ்சநஞ்சம் அடைந்தார்கள். **சிங்கங்கள் வாய்களை அடைத்தார்கள்.** இதற் குதாரணமானவர்கள்: சிம்சோன் (நியா. 14. 5, 6), தாவீது (1 சாமு. 17. 34, 35), தானியேல் (தானி. 6. 22), பெனாயா (2 சாமு. 23. 20) காண்க.

**34. அக்கினியின் அகோரத்தை அவித்தார்கள்**—**தீயின் சக்தியை.** எனத் திருத்துக. தானி. 3. 25. 1 மக்கபியர் 2. 59 (இந்த இரண்டாம் புஸ்தகம் தள்ளுபடி ஆகமங்களில் ஒன்று. **பட்டயக்கருக்குத் தப்பினார்கள்**—**கத்திமுனைக்குத் தப்பினார்கள்** என மாற்றலாம். தாவீது (1 சாமு. 18. 11; 19. 10. மு), எலியா (1 இரா. 19. 2), எலிஷா (2 இரா. 6. 12–17; எரே. 26. 24. மு). **பலவீனத்தில்**–**பலவீனத்திலிருந்து** எசேக்கியா (2 இரா. 20. 5), சிம்சோன் (நியா. 15. 15; 16. 28–30), தாவீது (1 சாமு. 17. 42, 51 மு). **அந்நியருடைய சேனைகளை முறியடித்தார்கள். அந்நியர்ச்சேனைகளை ஓட்டம் பிடிக்கப் பண்ணினார்கள்** எனத் திருத்தவேண்டும்.

வெஸ்ட்கட் வியாக்கியானி இவ்வொன்பது வெற்றிகளையும் வகுப்புக்கு மூன்றாக மூன்று வகுப்பாகக் கூறுகிறார். முதல் மூன்று, விசுவாசிகள் அடைந்த பொதுப்பலன்: சாமானிய ஜெயம், அரசதர்மம், ஞானபாக்கியம்; இடை மூன்று, சரீர விடுவிப்பு: காட்டு மிருகங்கள், பஞ்சபூத பராக்கிரமம், மானிடர்க்கொடுமை; கடைமூன்று, தனித்தனி வரங்கள்: சக்தி, சக்திமுயற்சி, சக்திவெற்றி.

**35.** இனி விசுவாசத்தின் மூலமாக நற்சாட்சி பெற்றவர்களை எடுத்துரைக்கிறார். **ஸ்திரீகள் பெற்றார்கள்**—**ஸ்திரீகள் தங்கள் மரித்தோரை மீண்டும் உயிர்வரப் பெற்றார்கள்** எனத் திருத்துக. உதாரணங்கள்: சரெப்தா ஸ்திரீ (1 இரா. 17. 22); சூனேமியஸ்திரீ (2 இரா. 4. 32. 36.). **வேறு சிலர். மற்றவர்கள்தான்** சரியான பதம். **மேன்மையான**—**அதிலும் மேன்மையான**—**வாதிக்கப்பட்டார்கள்.** அல்லது, **சாகடிக்கப்பட்டார்கள்** (இன்னொரு மொழிபெயர்ப்பு)

சக்கரத்தில் உடையுண்டார்கள். இது 2 மக்கபீயரிற் சொல்லிய எலியேசர், ஏழு சகோதரர் வரலாறுகள் (2 மக்க. 6. 20, 21; 7. 24). மேற்படி பெண்களுக்குங் கிடைத்தது இம்மைக் குயிர்த்தெழுதல்; இவை நித்ய மறுமைக்கு உயிர்த்தெழுதல் ஆனதுபற்றி அதிக மேன்மையானவை.

36. **வேறு சிலர்.** முதல் இரண்டு உதாரணங்களும் மக்கபீயர் புஸ்தகங்களிலிருந்து எடுத்துரைக்கப்படுகின்றன. **ஏளனங்கள், சவுக்கடிகளாலும், இன்னும் கட்டு காவல்களாலும் சோதிக்கப்பட்டார்கள்** எனத் திருத்தவும். 1 மக். 9. 26; 2 மக்க. 7. 1, 7, 10, 13, ழி காண்க. **கட்டு காவல்களுக்கு** உதாரணங்கள்: மிகாயா, 1 இரா. 22–26, 27; எரேமியா (எரே. 20. 2; 37. 15), ஹானனி (2 நாளா. 16. 10.) காண்க. மரணத்திலிருந்து தப்புவதைவிட மரணத்தை ஜெயிப்பதே சிறந்தது.

37. **கல்லெறியுண்டார்கள்.** சகரியா (2 நாளா. 24. 20, 21). எரேமியா தீர்க்கதரிசி கல்லெறியுண்டாரென்பது யூதர்ப் பரம்பரை. மத். 23. 35–37; லூக். 15. 51 காண்க. **வாளால் அறுப்புண்டார்கள்.** ஏசாயா தீர்க்கதரிசி இவ்வாறு உயிர்கொடுத்தாரென்பதும் யூதர்ப் பரம்பரை. மத். 24. 51 காண்க. இது பூர்வத்தில் சாமானிய தண்டனை (2 சாமு. 12. 31). **பரீட்சிக்கப்பட்டார்கள்.** பார்வைக்கு இது சிறிதேனும் கொடிதாகத் தோன்ருவிடினும் பரீட்சிக்கும் முறைகள் மகாக் கொடியவை. அப். 26. 11 காண்க. யோபு பரீட்சிக்கப்பட்டது யாவருக்கும் தெரிந்தவிஷயம். பக்தர்களின் விசுவாச உறுதியைத் தளர்ப்பித்துப் பின்னப்படுத்தும்படி எதிரிகள் பிரயோகித்த சாதனங்கள் மனத்தால் கிரகிக்க முடியாதவை. 1 இரா 13. 7, 19–26 காண்க. **கத்தியாற் கொல்லுண்டார்கள்** (1 இரா. 19. 10). யெயொக்கீம் ஊரியாவைக் கத்தியினுலே கொன்ருன் (எரே. 26. 23). அந்தியோகுவோடு நடந்த யுத்தத்திலே யூதர் ஓய்வுநாளிலே ஏகமாய்க் கொல்லுண்டார்கள் (1 மக்க. 2. 38; 2 மக்க. 5. 26). **திரிந்து. திரிந்தார்கள்** என மாற்றுக. உதாரணம், எலியா (1 இரா. 19. 13; 2 இரா. 1. 8); தீர்க்கதரிசிகள் மயிராடை அணிந்து திரிந்தது சாதாரணம். கிலெமெந்து தமது ரோமர் நிருபத்திலே எலிஷாவும் எசேக்கி

யேலும் அவ்வாடை யணிந்தவரென்று சொல்லுகிறார். குறைவை யும்—அநுபவித்தார்கள். விசுவாசிகளுக்கு நேரிட்ட பொதுவான கஷ்டநஷ்டங்கள்: குறைவு, துன்பம், தீங்கு: முதலாவது பசி, தாகம், நிர்வாணம், ழி; இரண்டாவது; எதிரிகள் செய்த உபத்திரவங்கள்; மூன்றாவது, ஜீவியத்தில் நேரிடும் அபாயங்கள்.

38. உலகம்—இல்லை. உலகம் அவர்களுக்கு அபாத்திரமா யிருந்தது எனத் திருத்துக. தரித்திரராயினும், அவர்கள் உலகத்தை விட அதிக விலையேறப்பெற்றவர்கள் என்றும் பொருள் உரைக்கலாம். எத்தனை ஏழைப் பக்தருக்கு உலகம் அபாத்திரமானது? உலகம் அவர் களை ஒருபொருட்டாக மதிக்காவிட்டாலும், கடவுள் அவர்கள் பேர்களை பரமபுஸ்தகத்தில் எழுதியிருக்கிறார். வனாந்தரங்களிலும் அல்லது, பாலை வனங்களிலும். குகைகளிலும் வெடிப்புகளிலும். உதார ணங்கள்: இஸ்ரவேலர் (நியா. 6. 2); தீர்க்கதரிசிகள் (1 இரா. 18. 4, 13); எலியா (1 இரா. 19. 9); மத்தத்தியாவும் அவன் குமார ரும் (1 மக்க. 2. 28; 29); யூதாமக்கபியன் (2 மக்க. 5. 27). குகை களில் (2 மக்க. 6. 11). மிருகங்கள்போல (2 மக்க. 10. 6). சிதறுண்டு அலைந்தார்கள். இது பொழிப்புரை. திரிந்துகொண்டிருந் தார்கள் எனத் திருத்துக.

11. 39-40.

39 இவர்களெல்லாரும் விசுவாசத்தினாலே நற்சாட்சி பெற்றும், வாக்குத்தத்தம் பண்ணப்பட்டதை அடை
40 யாமற்போனார்கள்.—அவர்கள் நம்மையல்லாமல் பூரண ராகாதபடிக்கு விசேஷித்த நன்மையானதொன்றை தேவன் நமக்கென்று முன்னதாக நியமித்திருந்தார்.

முடிவுரை.

39. விசுவாசத்தினாலே. தங்கள் விசுவாசத்தின் மூலமாய். இங்கே நிருபாசிரியர் தமது நடையை மாற்றுகிறார். வாக்கு— போனார்கள். வாக்குச்செய்ததைப் பெறவில்லை. வாக். 17. 33; 6. 15; 9. 15 காண்க. முக்கியமான வாக்கு நிறைவேறக் காணவில்லை.

40. ஆபிரகாம் முதலாய் கிறிஸ்துவைக் காணவில்லை; அவர் இயற்றிய இரட்சிப்பைப் பூர்த்தியாய் அநுபவிக்கவில்லை. "அனேக

ராஜாக்களும் தீர்க்கதரிசிகளும் நீங்கள் காண்கிறதைக் காண விரும்பியும் காணுமலும், நீங்கள் கேட்கிறதைக் கேட்க விரும்பியும் கேளாமலும் போனுர்கள்" (மத். 13. 17). என்று எம்பெருமானே உரைத்தருளினர். பூர்வ விசுவாசிகளின் நோக்கமெல்லாம் இயேசுவின் மகிமையை நாடியிருந்தது (1 பேது. 1. 10, 11). **விசேஷித்த—ஒன்றை.** விசேஷித்தவொன்றை. **நமக்கென்று—இருந்தார். கடவுள் நமக்காக ஆயத்தம்பண்ணி யிருந்தார்.** அவர்காலத்தில் "காலம் நிறைவேறவில்லை;" கிரிஸ்து பிறக்கவில்லை; மரித்து உயிர்த்தெழவில்லை. அவர்கள்காலத்தில் பூத்தது, நமதுகாலத்தில் பழுத்தது. அப்பொழுது குறைவு; இப்பொழுது நிறைவு. அப்பொழுது முதற்பிறை, இப்பொழுது பூரணசந்திரன். ஆகிலும், மறுமையிலே அவர்களும் நாமும்—அதாவது பூர்வ விசுவாசிகளும் தற்கால விசுவாசிகளும்—ஒரே பூரண நிலைமையிலிருந்து கடவுள் சமுகத்தில் நித்திய பேரின்பம் அநுபவிப்போம்.



# 12. அதிகாரம்.

## அதிகார விஷயம்.

**வி**சுவாச வைராக்கியத்துக்குப் போதனை (1-3); நமது ஆரம்பப்பாடுகள் கடவுளின் அன்பான சிட்சைகள் (4-13); இடைவிடாத விழிப்பு அவசியம் (14-17); புதிய ஏற்பாட்டின் மகத்துவம் (18-24); விலகியிருத்தலின் பாதகமும் பேராபத்தும் (24-29)

### 12. 1-3.

1 ஆகையால், மேகம்போன்ற இத்தனை திரளான சாட்சிகள் நம்மைச் சூழ்ந்துகொண்டிருக்க, பாரமான யாவற்றையும், நம்மைச் சுற்றி நெருங்கிநிற்கிற பாவத்தையும் தள்ளிவிட்டு, விசுவாசத்தைத் துவக்குகிறவரும் முடிக்கிறவருமாயிருக்கிற இயேசுவை நோக்கி, நமக்கு நியமித்திருக்கிற ஓட்டத்தில் பொறுமையோடே ஓடக்
2 கடவோம்;—அவர் தமக்குமுன் வைத்திருந்த சந்தோஷத்தின்பொருட்டு, அவமானத்தை எண்ணுமல், சிலுவையைச் சகித்து, தேவனுடைய சிங்காசனத்தின் வல

3 துபாரிசத்தில் வீற்றிருக்கிறூர். — ஆகையால் நீங்கள் இளைப்புள்ளவர்களாய் உங்கள் ஆத்துமாக்களில் சோர்ந்துபோகாதபடிக்கு, தமக்கு விரோதமாய்ப் பாவிகளால் செய்யப்பட்ட இவ்விதமான விபரீதங்களைச் சகித்த அவரையே நினைத்துக்கொள்ளுங்கள்.

### விசுவாசத்தின் வைராக்கியம்.

1. **ஆகையால்.** கிரேக்கிலே இது வெகு உறுதியான பதம். **ஆனதுபற்றி** என மாற்றலாம். மேகம்போன்ற-பெருத்த கூட்டத்துக்கு இப்பதம் கிரேக்கு, லத்தீன், எபிரேயு பாஷைகளில் உபயோகிக்கப்படுகிற உவமைச்சொல். ஹோர் புலவர், "மேகம்போன்ற படைவீரர்" என்கிறூர். ஏசாயா 40. 8—இலே "மேகங்கள்போலப் பறக்கிற இவர்கள் யார்?" என்று சொல்லியிருக்கிறது. இதை: **பெருத்த மேகம்போன்ற சாட்சிகள்** என்று மாற்றவேண்டும். **நம்மைச் சூழ்ந்துகொண்டிருக்கிறபடியால்** எனத் திருத்தலாம். பந்தய ஓட்டத்திலே ஓடுகிற நம்மை மேற்சொல்லிய வீர தீரர்கள் பார்த்துக்கொண்டிருக்கிறூர்கள். தாங்கள் ஓடி, உபத்திரவப்பட்டு ஜெயித்ததுபோல அதிகமான நன்மைகள் பெற்ற இப்புதிய உடன்படிக்கையாளர்களும் ஓடுகிறூர்களா என்று நம்மைக் கவனிக்கிறூர்கள். பந்தயத்திலே கெலிப்புத் தோற்புப் பார்க்கும்படி திரளான ஜனங்கள் பந்தய மேடையிலே கூடியிருந்து ஓடுகிறவர்களை உற்றுக் கவனித்தல் எங்கும் சகஜம். **சாட்சிகள்.** நம்முடைய விசுவாசத்தின் உண்மைக்கும் உறுதிக்கும் சாட்சிகளாயிருக்க விரும்புவோர். சர்க்கஸ், விலாசம் முதலிய ஆட்டங்களிலும், பூர்வ ரோம ஆட்டச்சண்டைகளிலும், வேடிக்கை பார்ப்பவர் சுற்றிலும் உட்கார்ந்துகொண்டிருப்பார்கள் (1 கொரி. 4. 9). ஓடுவோர் உறங்கி விழாமலிருக்க, இவர்கள் அவர்களை வெகுவாய் உற்சாகப்படுத்துகிறவர்கள். விசுவாசத்தில் நமக்கு முற்பிதாக்களானவர்களும் அவ்வாறே.

**பாரமான யாவற்றையும்.** **ஒவ்வொரு பாரத்தையும்** எனத் திருத்துக. ஓடுகிறவர்களுக்குப் பாரமிருந்தால் அது பெருந்தடையாயிருக்கும். ஆடைப் பாரமாயின், அது கைகால்களில் சிக்கிக்கொள்ளும். உடல் தடித்த பாரமாயின் அது ஓட்டத்தின் விரைவுக்குப் பின்னஞ்



ரோமிலிருந்த ஆட்டஸ்தலம்.

செய்யும். அதனால், பந்தய பாலியர் வெகுநாள் பயிற்சி செய்வார்கள். உண்டிச்சுருங்குதல், கசரத்துச்செய்தல், தினந்தோறும் ஓடிப்பழகல் முதலியவற்றால் தேகம் சமநிலையிலிருந்து, சக்தியுற்று, லேசாயும் விரைவாயும் ஓட வரும். விசுவாசிகளின் பாரங்களாவன: சிற்றின்பம், பெருந்தீனி, மதுபானப்பழக்கம், சோம்பல், பொருளாசை, சுய மேன்மை, சுயநேசம் முதலியன. **தள்ளிவிட்டு.** அப்பால் எடுத்து வைத்து: சொல்லர்த்தம். அப்பால் தள்ளிவிட்டு என்றால் பொருள் நன்கு விளங்கும். இப்பாரங்கள் இருக்கவேபடா; அன்றி, ஓட்டந் தாமதப்படும்; வெற்றி வராது. இது முதல் தடங்கல். இதை இரண்டாவது: **நம்மை—பாவத்தையும்.** பவர் சாஸ்திரியார் இதைப் பொழிப்புரையாக்கிவிட்டார். **நம்மை அத்தனை லேசாய்ச் சுற்றிக்கொண்டிருக்கிற.** இத்தனை வார்த்தைகளுக்கும் கிரேக்கு மூலத்தில் ஒரே பதமுண்டு; அதாவது, யூப்பெரிஸ்ற்றற்றான்—இதன் பொருள் "நன்றாய்ச் சுற்றி நிற்கிற"—இங்கிலீஷ் புதுத் திருப்புதலில், (நம்மை) ஒட்டிப் பற்றிக் கொண்டிருக்கிறதாம் என்றிருக்கிறது. இதன் பொருள் யாதெனில்,

ஒவ்வொரு விசுவாசிக்கும் ஏதோ இரகசியமான ஒரு பாவமுண்டு. அது அவனை, காலைப்பற்றின பாம்பைப்போல, உறுதியாய்ச் சுற்றிக் கொண்டிருக்கிறதாம். அதை அவனுக்கு உதறி யெறிந்துவிடச் சக்தி யில்லை. சதையிலே அழுந்திய முள்ளைப்போல அவனை ஓயாமல் குத்திக் கொண்டிருக்கிறது. அதனுடன் அவனுக்கு அநுதினம் போராட்டம் நடக்கவேண்டும். இல்லாவிட்டால், ஓட்டம் நடவாது; தடைபட்டு நிற்கும். இதையும், நாம் **அப்பாலே தள்ளிவிட** வேண்டும் என்கிறார் நிருபாசிரியர். எபே. 4. 22; கொலோ. 3. 9 காண்க. ஒன்றைத் தள்ளி, ஒன்றைப் பற்று என்றாற்போல நமது முக்கிய கடமையைக் கூறத் தொடங்குகிறார். இப்பொழுது மற்றதையெல்லாம் 2-ம் வாக் கியமாக வைத்துக்கொள்வோம்.

2. **விசுவாசத்தை.** 11-ம் அதிகாரத்தில் நேர்த்தியாய் உதகரித் திருக்கிற விசுவாசத்தை **துவக்குகிறவரும் முடிக்கிறவரும்.** நாம் பாரத் தையும் பற்றித்தொடரும் பாவத்தையும் தவிர்த்துவிட்டு **இயேசுவை நோக்கவேண்டும்.** அந்த இயேசுவுக்கு லட்சணங்கள் இரண்டு: இங்கு முதல் லட்சணம் கூறப்படுகிறது. அது, நமது விசுவாசத்தைத் துவக் குகிறதும் முடிக்கிறதுமே. **கர்த்தாவும் பூர்த்திசெய்கிறவரும்** எனத் திருத்தலாம் அதி. 2. 10 காண்க. அப். 3. 15-இலும், 5. 31-இலும் இதே கிரேக்குப்பதம் "பிரபு" என்று திருப்பியிருக்கிறது. விசுவாசநெறியிலே இயேசு நமக்குத் தலைவரானவர். நமது விசுவாசத் தின் பொருளும் லக்குவுமானவர். அதை முடிவுமட்டும் பூரணப்படுத்து கிறவருமானவர் (1 பேது. 1. 9). ஒரே வார்த்தையிலே, இயேசு விசுவாசத்தை ஆரம்பித்து, நடத்தி, முடிக்கிறவர். இனி இரண்டாம் லட்சணம்: **தமக்குமுன்—வீற்றிருக்கிறவர். தம்மெதிரில் வைத்திருந்த சந்தோஷத்துக்காக அவமானத்தை எண்ணாமல் சிலுவையைச் சகித்து, கடவுள் சிங்காசனத்தின் வலதுகையில் வீற்றிருக்கிறவருமாகிய.** அதி. 1. 3; 8. 1; 10. 12 காண்க. கடவுள் சமுகத்தில் வீற்றிருத்தல் ஓர் "சந்தோஷம்"; விசுவாசிகளை உண்டாக்கல் ஓர் சந்தோஷம்; அவ் விசுவாசத்தைக் காத்து, நடத்தி, பூர்த்திசெய்தல் ஓர் சந்தோஷம். **இயேசுவை நோக்கி.** பாரத்தையும் பாவத்தையும் நீக்கி லக்குப்பொரு ளாகிய இயேசுவை நோக்கி எ—று. அங்குமிங்கும் அலையாமல் அவர்

மேல் கண்ணும் கருத்தும் வைத்து ஜீவித்து. **நமக்கு—ஓடக்கடவோம். நியமித்திருக்கிற ஓட்டம்.** பவுலப்போஸ்தலன் தமது நிருபங்களிலே இந்த உவமையை அடிக்கடி உபயோகித்திருக்கிறார் (பிலி. 3. 12–14; 1 கொரி. 9. 24, 25; 2 திமோ. 4. 7, 8 காண்க). இந்த ஜீவியம் ஓர் பந்தய ஓட்டம். பரதேசியின் பிரயாணம். லக்கு ஒன்றின்மேலே மாத்திரம் கண்ணைச் செலுத்தி ஓடுகிற ஓட்டம். அனேக கிறிஸ்தவர்கள் இவ்வாறு ஓட மருந்துண்டு உறங்கி விழுகிறார்கள். ஆரம்பத்தில் முயல்போலத் துரிதமாய் ஓடி நடுவழியில் நின்று நித்திரை போகிறார்கள். ஆனால் ஆமைபோல் விடாமுயற்சியாய் தினதினம் நகர்ந்து செல்லுகிறவர்களே பந்தயப்பொருளைத் தீண்டிப் பற்றிக்கொள்ளுகிறார்கள்.

3. **ஏனெனில்.** ஆகையால் திருத்தமன்று. **நீங்கள்—படிக்கு. உங்கள் ஆத்துமாக்களில் சோர்வுற்றுக் களைத்துப் போகாதபடிக்கு** எனத் திருத்தவேண்டும். இதில் முன்னது பின்னதாக மாற்றியிருக்கிறது. ஆத்மசோர்வு முதற்படி; களைத்துப்போதல் இரண்டாம்படி. சகிப்பினால் சோர்வுண்டாகும். சோர்வினால் களைப்பு நேரிடும். கலா. 6. 9 காண்க. **நமக்கு. தங்களுக்கு** எனத் திருத்துக. பாவிகள் தங்களுக்கு **விரோதமாக**—ஆகாயத்தைப் பார்த்து உமிழ்கிற நீர் அவர் மேலேயே விழுகிறதுபோல, துன்மார்க்கக் கிருத்தியங்கள் கடைசியிலே தங்கள் மேலேயே வந்து சுமரும். இது பிரசித்தமான உண்மை. **பாவிகளால் ம், பாவிகள் தங்களுக்கு விரோதமாகச் செய்த** அவ்வித **வாக்குவாதத்தைச் சகித்தவரை நிதானியுங்கள்.** முன்மாதிரியாக வைத்துச் சிந்தியுங்கள். லூக். 2. 34. "இயேசு விரோதமாகப் பேசப்படும் அடையாளமாயிருந்தார்."

## 12. 4-13.

4 பாவத்திற்கு விரோதமாய்ப் போராடுகிறதில் இரத்தஞ் சிந்தப்படத்தக்கதாக நீங்கள் இன்னும் எதிர்த்து நிற்க
5 வில்லையே.—அன்றியும்: என் மகனே கர்த்தருடைய சிட்சையை அற்பமாக எண்ணாதே, அவரால் கடிந்து
6 கொள்ளப்படும்போது சோர்ந்துபோகாதே.—கர்த்தர் எவனிடத்தில் அன்புகூருகிறாரோ அவனை அவர் சிட்சித்து,

*தாம் சேர்த்துக்கொள்ளுகிற எந்த மகனையும் தண்டிக்கிறார் என்று பிள்ளைகளுக்குச் சொல்லுகிறதுபோல உங்களுக்குச் சொல்லியிருக்கிற புத்திமதியை மறந்தீர்*
7 *கள்.—நீங்கள் சிட்சையைச் சகிக்கிறவர்களாயிருந்தால் தேவன் உங்களைப் புத்திரராக எண்ணி நடத்துகிறார்;*
8 *தகப்பன் சிட்சியாத புத்திரனுண்டோ?—எல்லாருக்கும் கிடைக்கும் சிட்சை உங்களுக்குக் கிடையாதிருந்தால் நீங்கள் புத்திரராயிராமல் வேசிப்பிள்ளைகளாயிருப்பீர்களே.*
9 *அன்றியும், நம்முடைய சரீரத்தின் தகப்பன்மார்கள் நம்மைச் சிட்சிக்கும்போது, அவர்களுக்கு நாம் அஞ்சி நடந்திருக்க, நாம் பிழைக்கத்தக்கதாக ஆவிகளின் பிதாவுக்கு வெகு அதிகமாய் அடங்கி நடக்கவேண்டுமல்ல*
10 *வா?—அவர்கள் தங்களுக்கு நலமென்று தோன்றினபடி கொஞ்சக்காலம் சிட்சித்தார்கள்; இவரோ தம்முடைய பரிசுத்தத்துக்கு நாம் பங்குள்ளவர்களாகும்பொருட்டு நம்முடைய பிரயோஜனத்துக்காகவே நம்மைச் சிட்*
11 *சிக்கிறார்.—எந்தச் சிட்சையும் தற்காலத்தில் சந்தோஷமாய்க் காணாமல் துக்கமாய்க் காணும்; ஆகிலும் பிற்காலத்தில் அதில் பழகினவர்களுக்கு அது நீதியாகிய சமாதான பலனைத் தரும்.*
12 *ஆகையினால், நெகிழ்ந்த கைகளையும் தளர்ந்த முழங்*
13 *கால்களையும் நீங்கள் திரும்ப நிமிர்த்தி,—முடமாயிருக்கிறது பிசகிப்போகாமல் சொஸ்தமாகும்படிக்கு, உங்கள் பாதங்களுக்கு வழிகளைச் செவ்வை படுத்துங்கள்.*

**தகப்பன் சிஷ்டையைக் கனிவுடன் சகிக்கவேண்டும். 4–13.**

4. **நீங்கள் பாவத்தோடு போராடி, இரத்தம்வரைக்கும் இன்னும் எதிர்த்து நிற்கவில்லையே.** *நிருபவாசிகள் பாவத்தைப் பகைத்துத் தள்ளினவர்களாயினும், அதுவரைக்கும் மரணசாட்சிகளாய் விளங்கவில்லை என்பது கருத்து. சத்தியத்துக்காகத் தங்கள் உயிரைக் கொடுக்கவில்லை.* **இரத்தம்.** *மரணம். இரண்டு மல்லயுத்தர் சண்டைசெய்து ஒருவரை ஒருவர் கத்தியால் குத்தி இரத்தம் வாங்குவார்கள். மரணத்துக்கேதுவான உதிரப்பாய்ச்சலுண்டானவன் தோற்றவன். அவன் ஒரு நொடிக்குள் உயிர் விடுவான். அப்படிப்பட்ட இரத்தச்சாட்சிகள் இந்தச் சபையில் அதுவரையும் எழும்பவில்லை என்பது நிருபாசிரி*

யரின் துணிபு. இதனால் இந்நிருபம் எழுதின காலவரையறை தெரிய வருகிறது. ரோமசபையிலே திரளான இரத்தச்சாட்சிகள் உண்டாயிருந்தார்கள் (வெளி. 7. 9); யூதச்சபையிலே சிலர் ஸ்தேவான், யாக்கோபுக்குப் பின்பு கொலையுண்டார்கள் (அப். 8. 1)—இந்தச் சம்பவங்களுக்கு முன்பு இந்நிருபம் எழுதப்பட்டது நிச்சயமாகிறது.

5. இந்த வாக்கியம் நீதி. 3. 11, 12 எடுத்துரைக்கப்பட்டது. யோபு. 5–17 இதற்கு ஒருவாறு ஒத்தது. **கர்த்தருடைய—கர்த்தர்** எனவும்; **அவரால்—போது அவர் கடிந்துகொள்கையில்** எனவும் சுருக்கிக்கொள்க. கடவுளால் உபத்திரவங்கள் நேரிடும்பொழுது பக்தர் மனந்தளரக் கூடாதெனல்.

6. **ஏனெனில்**—வருவித்துக்கொள்க. "கர்த்தர் தாம் நேசிக்கிற எவனையும் சிட்சித்து, ஏற்றுக்கொள்கிற ஒவ்வொரு மகனையும் வாராலடிக்கிறார்" என மாற்றலாம். இந்த வாக்கியம் மேல்வாக்கியத்துக்கு நியாயம். அடிக்குங்கை யதுவே, அணைக்குங்கை யதுவே—என்றாற்போல—கடவுள் சிட்சைக்குக் காரணம் அவர் அன்பு. வாக்கியத்தின் கடைசியில், **"என்று புத்திரரைப்போல உங்களோடு நியாயம் பேசும் போதனையை மறந்திருக்கிறீர்கள்"** என்னும் வாக்கியத்தைச் சேர்த்துக்கொள்ளுங்கள். **நியாயம் பேசும்** அல்லது, தர்க்கிக்கும், அல்லது வழக்காடும். அனேக தகப்பன்மார் தங்கள் பிள்ளைகளை இளமைதொட்டுக் கண்டிப்பாய் நடத்துகிறதில்லை. அடிக்க அஞ்சுகிறார்கள். ஒரு சுதேச குரு தம்து புத்திரனைத் தண்டிக்காமலே விட்டுவிட்டார். அவன் அவர் சொல் கேட்கிறதேயில்லை. இஷ்டப்படி ஆடி, ஓடி, நாச மோசங்கள் செய்வான். அவனை அடித்து ஒழுங்குப்படுத்தக் கூடாதா என்றதற்கு, அவன் எனக்கு ஒரே மகன். அடிக்க மனம் வரவில்லை என்றார். ஒரு ஜர்மன் பாதிரியின் ஒரு வருஷத்துக் குழந்தை ஜலத்துக்கு அழுதுகொண்டிருந்தது. கொஞ்சம் ஜலம் கொடுக்கக் கூடாதா என்றதற்கு, அவர், முடியாது, அதன் சித்தத்தைத் திருப்புகிறேனென்றார். இருவருக்குமிருந்த பேதம் இதனால் தெரியவரும்.

ஆகிலும், ஆணை அடித்துவளர், பெண்ணைப் போற்றிவளர் என்கிற பழமொழி அனாவசிப் பிசகு. சங். 94. 12; வெளி. 3. 19; சங். 119. 75; யாக். 1. 12 காண்க.

7. இந்த வாக்கியத்தைப் பின்வருமாறு திருத்தவேண்டும்: **நீங்கள் சகிக்கிறது தேர்ச்சிக்காக; கடவுள் உங்களைப் புத்திரர்போல நடத்துகிறார்; தகப்பன் சிட்சியாத புத்திரனுண்டோ?** விசுவாசிகள் இந்த ஜீவியத்தில் நிஷ்காரணமாய்—அதாவது தங்கள் சொந்தப் பாவங்களினாலும் பலவீனங்களினாலுமன்றி—சகிக்க நேரிடுகிற துன்ப துக்கங்கள், இன்னல் இடைஞ்சல்கள் அனைத்தும் தங்கள் ஞானத் தேர்ச்சிக்கென்று அவர்கள் உணரவேண்டும். அவர்கள் விசுவாசத்தை உறுதி செய்யவும், பொறுமையை அதிகரிக்கவும், தற்பொழிவைத் தவிர்க்கவும், சுயநேசத்தைக் குறைக்கவும், "பாரத்தைத் தள்ளிவிடவும்," மோட்சத்தை நாடி, எம்பெருமானை நோக்கவுமே என்று எண்ணிக் கொள்ளவேண்டும். கடைசி வினாவினால், தகப்பன்மார், அதாவது பெற்றோர் தம்மக்களைச் சிட்சித்து வளர்க்கவேண்டுமென்பது சர்வ சம்மதமான சட்டமெனத் திருஷ்டாந்தமாகிறது. அனேக கிரிஸ்தவக் குடும்பத்தின் மக்கள் இந்த ஆரம்ப சிட்சையில்லாமல் சீர்கெட்டுப் போகிறதை நாம் கண்டிருக்கிறோமல்லவா? உபா. 8. 5; 1 சாமு. 7. 14; நீதி. 13. 24 காண்க.

8. **எல்லாருக்கும் கிடைக்கிற**—இது நல்ல உரைதான், ஆனால் சரியான மொழிபெயர்ப்பன்று. **எல்லாரும் பங்குபெறுகிற தேர்ச்சி உங்களுக்கில்லாமற்போனால்** நீங்கள் புத்திரரல்ல, **வேசிப் பிள்ளைகளே** எனத் திருத்தவேண்டும். கடவுள் சிட்சை நமக்குத் தேர்ச்சியானமையால், நிருபாசிரியர் அதை ஒரு வரப்பிரசாதமாகக் கூறுகின்றார். வேசிப்பிள்ளைகளுக்குச் சிட்சை என்கிறதே கிடையாது. அவர்களுக்குத் தகப்பனைத் தாய்வீட்டில் காணக்கூடாது. அவர்கள் இஷ்டப்படி ஆடியோடி வளர்ந்து, யாதொரு தேர்ச்சியுமின்றித் தூர்த்தராய்விடுகிறார்கள்.

9. **சரீரத்தின்—மாமிசத்தின்** என மாற்றுக. **அஞ்சி நடந்திருக்க—சங்கித்திருக்க** சரியான மொழிபெயர்ப்பு. **வேறு—இன்னும். ஆவிகளின்—நம்முடைய ஆவிகளின்** என மாற்றலாம். கடவுள் நம்முடைய சரீரங்களுக்கும் ஆத்துமாக்களுக்கும் மாத்திரமல்ல, நம்முடைய ஆவிகளுக்கும் தகப்பனானவர்—நமதாவியினாலேதான் நாம் பரமதகப்பனுடன் சம்பந்தப்பட்டிருக்கிறோம். ஆவி வேறு, ஆத்துமா வேறு. மிருக

ஜீவன்களுக்கு ஆத்துமா உண்டு; ஆவி கிடையாது. சில வேதசாஸ்திரிகள் பூர்வத்திலே சமஸ்த மனிதரும் தங்கள் ஆத்தும சரீரங்களைமாத்திரம் ஆதாமிடமிருந்து பரம்பரையாய்ப் பெற்றதாகவும், ஆவிகளைக் கடவுளிடமிருந்து நேராகப் பெற்றதாகவும் உத்தேசித்தார்கள். பிறக்கிற ஒவ்வொருவனுக்கும் கடவுள் புதிதான ஒரு ஆவி சிருஷ்டிக்கிறதில்லை. அனைத்தும்—ஆவி, ஆத்துமா, சரீரம்—ஆதாமிலிருந்து அவன் சந்ததியார் அனைவருக்கும் வந்திருக்கின்றன. **பிழைக்கத்தக்கதாக—பிழைக்கும்படி** எனச் சுருக்குக. இம்மையிலும் மறுமையிலும் பிழைக்கும்படி எ—று.

10. **தோன்றினபடி—தோன்றியவாறு. கொஞ்சக்காலம்—வாஸ்தவத்தில் சிலநாள்** எனத் திருத்துக. **இவரோ—கடவுளோ. தம்முடைய—தமது. பொருட்டு. படி. நலமாக.** எத்தனைத் தகப்பன்மார்கள் தங்கள் மக்களைப் புத்தியீனமாய்த் தண்டித்து, அதி குரூரமாய் நடத்துகிறார்கள். சிலர் அறியாமையினாலே அவ்வாறு பிசகு பண்ணுகிறார்கள். சிலர் துன்மார்க்கத்தினாலே அவ்வாறு அக்கிரமஞ் செய்கிறார்கள். அதுவும் கொஞ்சநாள்தான். வெகு சீக்கிரத்தில் மக்கள் வளர்ந்து வீட்டை விட்டு வெளியேபோய்த் தங்கள் சொந்த ஜீவனத்தைப் பார்த்துக் கொள்ளுகிறார்கள். அதோடு தகப்பன்மாரின் சிட்சை நின்றுவிடுகிறது. கடவுள் அவ்வாறன்று. அவரது சிட்சை அன்பினால் ஏவப்பட்டது. சிறிதுகால மாத்திரமல்ல, நாம் மரிக்குமளவும் சிட்சை செய்துகொண்டே வருகிறார். அந்தப் பரிசுத்த சிட்சையினாலே நாம் பயனும் பரிசுத்தமுமடைந்து ஆவியிலே முடிவில்லாத் தேர்ச்சி யடைகிறோம்.

11. இந்த வாக்கியத்திலே நிருபாசிரியர் தமது தர்க்கத்தின் முடிவுரை கூறுகிறார். **என்ற—எல்லா. சகல** என மாற்றவும். **சந்தோஷமாகவல்ல, துக்கமாகவே தோற்றுகிறது** எனத் திருத்தலாம். **ஆகிலும் பிற்காலத்தில்—பிற்காலத்திலோ. பழகினவர்களுக்கு—தேறினவர்களுக்கு.** இதிலே பெற்றோர்ச் சிட்சை பொதுவாகவும், பரம தகப்பன் சிட்சை விசேஷமாகவும் விளக்கியிருக்கிறது. ரோ. 5. 2-5 காண்க. இந்தத் தேர்ச்சியின் பலன் சுய ஆட்சியும், நீதிச் சக்தியுமே. இதுகள் கற்கிற பாடசாலை கடவுள் சிட்சை யென்றறிக. இந்தப் பலனைப் பெற்றவனுக்கு எந்நாளும் மன அமைதி யுண்டு.

12. நெகிழ்ந்த—தொங்கும் எனவும், தளர்ந்த—திமிர்கொண்ட எனவும் நிமிர்த்தி—நீட்டி எனவும் திருத்துக.

13. வழிகளை மு. நேர்வழி செய்துகொள்ளுங்கள். இது கிரேக்கு மூலத்திலே கிரீக்கர்ச் செய்யுள் போன்றது. லூக்கா வைத்தியரிடத்தில் இப்பேர்ப்பட்ட சொற்களை நிருபாசிரியர் கற்றிருக்கவேண்டும். சபையிலும் குடும்பத்திலும் ஒழுங்கீனமானவர்கள் இராதபடிக்குச் சகலருக்கும் நன்மாதிரி காட்டி நடக்கத் தூண்டுகிறார். ஏசா. 57. 17–19.

12. 14-17.

14 யாவரோடும் சமாதானமாயிருக்கவும், பரிசுத்தமுள்ளவர்களாயிருக்கவும் நாடுங்கள்; பரிசுத்தமில்லாமல்
15 ஒருவனும் கர்த்தரைத் தரிசிப்பதில்லையே.—ஒருவனும் தேவனுடைய கிருபையை இழந்துபோகாதபடிக்கும் யாதொரு கசப்பான வேர் முளைத்தெழும்பிக் கலக்கமுண்டாக்குகிறதினால் அநேகர் தீட்டுப்படாதபடிக்கும்,-
16 ஒருவனும் வேசிக்கள்ளனாகவும், ஒருவேளைப் போஜனத்துக்காகத் தன் ஜேஷ்டபுத்திர பாகத்தை விற்றுப்போட்ட ஏசாவைப்போலச் சீர்கெட்டவனாகவும் இராதபடிக்கும்
17 எச்சரிக்கையாயிருங்கள்.—ஏனென்றால், பிற்பாடு அவன் ஆசீர்வாதத்தைச் சுதந்தரித்துக்கொள்ள விரும்பியும் ஆகாதவனென்று தள்ளப்பட்டதை அறிவீர்கள்; அவன் கண்ணீர்விட்டு, கவலையோடே தேடியும் மனம் மாறுதலைக் காணாமற்போனான்.

விழிப்பு அவசியம்.

14. யாவரோடும் சமாதானமாயிருக்கவும். இது அக்காலத்திற்போலவே இக்காலத்திலும் மிக்க அவசியமான புத்திமதி. எங்கே பகையும், பொறாமையும், பின் புரணியுமுண்டோ அங்கே சமாதானம் கிடையாது. சண்டைசச்சரவுகள் அதிகமாயிருக்கும். எம்பெருமான் பெயரே சமாதானப்பிரபு, "அவர் அடியாரும் சமாதான சகோதரரா" யிருத்தல்வேண்டும். யூதச்சபையிலே அப்பொழுதே குழப்பங்களும், கலக்கங்களு முண்டாயின. அதுபோலவே ஏனைய சபைகளிலும். ரோ. 14. 19; 2 தீமோ. 2. 22 காண்க. பரிசுத்த முள்ளவர்களா யிருக்க

வும். அதி. 9. 13; 10. 10, 29; 13. 12 காண்க. இது விர்த்திப் பரிசுத்தமன்று; முன் சொல்லியபடி கடவுளருளும் பாவவிமோசனப் பரிசுத்தம் கர்த்தரை. இயேசு வரும்போது அவரை. கலியாண வஸ்திரமில்லாதவன் புறம்பே தள்ளுண்டதுபோல, கடவுள் அருளும் நீதி என்னும் ஆடை அணிந்தவன்மாத்திரம் அவரால் அங்கீகரிக்கப்படுவான்.

15. **ஒருவனும் கடவுளின்—படிக்கும்.** திரு அருளை இழந்து சத்தியத்தைவிட்டு விலகிவிடுகிறதைக் குறித்து நிருபாசிரியர் முன்னமே எச்சரித்திருக்கிறார். அதி. 6. 4. மு. காண்க. இரண்டொரு விஷயங்கள் அவர் காதுக் கெட்டியிருந்தாற்போல் தோன்றுகிறது. **யாதொரு. ஏதாயினும் ஓர். கசப்பான வேர்.** தீயகாரணம். நல்ல செடிகள் பயிராகிற பாத்தியில் ஓர் விஷப்பூண்டு முளைத்தால், அனைத்தும் கசப்படுக்கிறதுபோல, ஒரு சபையிலே துஷ்டன் ஒருவன் நுழைந்தால், அதிற் கலகத்தையும், சச்சரவையும் உண்டுபண்ணுவான்; பலரையும் கெடுத்துவிடுவான். தற்காலச் சபைகளிலே இந்தச் சம்பவங்களை அடிக்கடிக் காண்கிறோம். **தீட்டுப்படாதபடிக்கும்.** 1 கொரி. 5–6; 1 கொரி. 15. 33; கலா. 5–9 காண்க.

16. **வேசிக்கள்ளனாகவும்.** சிலர் இது ஏசாவைக் குறிக்கிறதாக எண்ணுகிறார்கள். அக்காலத்தில் சாதாரணமாயிருந்த வேசித்தனத்தைக் கண்டிக்கிறார். இவ்விஷயமாக ஏசாவைக்குறித்து வேதாகமத்தில் ஒன்றுஞ் சொல்லியிராவிட்டாலும், வேறு ஆகமங்களில் அவனைச் சிற்றின்பப் பிரியனாகவே வர்ணித்திருக்கிறதினாலே, அவ்வாறு எண்ணுகிறார்கள். அது மெய்யானால், இவ்வார்த்தைகளை "ஏசாவைப் போல" என்பதற்கும் "சீர்கெட்டவனாகவும்" என்பதற்கும் இடையில் வைக்கவேண்டும். ஏசாவின் பெருங்குற்றமாவது—சிற்றின்பந்தான். **ஒருவேளை அன்னத்துக்காகத் தன் சேஷ்டபுத்திர சுதந்தரத்தை விற்றுப்போட்டான்.** மூத்தவனானமையால் அதிக சொத்துக்குப் பாத்தியஸ்தன். **சீர்கேட்டவன்.** இந்து சாஸ்திரத்தில் மனிதருக்குத் திரிகுணங்களுண்டெனக் கூறியிருக்கிறது: (1) சத்துவம்; (2) ராஜஸம்; (3) தாமசம்—ஏசா தாமசகுணஸ்தன். மேலான ஆவிக்குரிய லட்சணங்கள் அவனுக்கில்லை. மருள விழுதலில் மூன்று படிகளுண்டு: முதல், கிருபை இழத்தல்; இரண்டாவது, கசப்புவேர் முளைத்தல்; மூன்று

வது, துன்மார்க்க ஜீவியம். ஆதி. 25. 29–34 காண்க. இப் படிகளிலே இடறுவண்ணம் ஜாக்கிரதைப்படுங்கள்—எ—று.

**17. ஆகாதவனென்று:** இது மூலத்திலில்லே. தள்ளப்பட்டதை—தள்ளுண்டதை எனத் திருத்துக. **விரும்பி, கண்ணீர்விட்டு, அதைக் கருத்தாய்த் தேடியும், தள்ளுண்டதை அறிவீர்கள்; மனந்திரும்ப அவனுக்கிடமில்லாமற் போயிற்றே**—என மாற்றுக. ஏசா தன் வயிற்றால் கெட்டதுமன்றித் தன் நாவாலும் கெட்டான். ஈசாக்கின் வாயிலிருந்து வாக்குப் பிறந்துவிட்டது. ஏசாவும் சிற்றின்பச் சக்தியினாலே தன் சுதந்தரத்தை யாக்கோபுக்கு விற்றுப்போட்டானும். ஆகிலும், இவ்விடத்தில் ஏசாவின் மறுமை ஸ்திதியைப்பற்றி ஒன்றும் சொல்லப்படவில்லை. பிற்காலத்தில் ஒருவேளை குணப்பட்டிருப்பான். தற்காலம் அவன் இழந்தது உலகபாக்கியம் மட்டுமே. இந்த வாக்கியத்தினாலே, ஒருதரம் மருள விழுந்தவர்கள் மறுபடியும் மனந்திரும்ப முடியாதெனத் துணிய யாதொரு ஆதாரமும், நியாயமும் கிடையாது.

**12.** 18-29.

18 அன்றியும், தொடக்கூடியதும், அக்கினிபற்றி யெரிகிறதுமான மலையினிடத்திற்கும், மந்தாரம் இருள் பெரு
19 ங்காற்று ஆகிய இவைகளினிடத்திற்கும்,— எக்காள முழக்கத்தினிடத்திற்கும், வார்த்தைகளுடைய சத்தத்தினிடத்திற்கும், நீங்கள் வந்து சேரவில்லை; அந்தச் சத்தத்தைக் கேட்டவர்கள் பின்னும் தங்களுக்கு வார்த்தை சொல்லப்படாதபடிக்கு வேண்டிக்கொண்டார்கள்.—
20 ஏனெனில் ஒரு மிருகமாகிலும் மலையைத் தொட்டால், அது கல்லெறியுண்டு, அல்லது அம்பினால் எய்யுண்டு சாகவேண்டுமென்று சொல்லப்பட்ட கட்டளையைச்
21 சகிக்கமாட்டாதிருந்தார்கள்.—மோசேயும்: நான் மிகவும் பயந்து நடுங்குகிறேன் என்று சொல்லத்தக்கதாக அந்தக் காட்சி அவ்வளவு பயங்கரமாயிருந்தது.
22 நீங்களோ சீயோன் மலையினிடத்திற்கும், ஜீவனுள்ள தேவனுடைய நகரமாகிய பரம எருசலேமினிடத்திற்கும், ஆயிரம் பதினாயிரமான தேவதூதர்களி
23 னிடத்திற்கும்,— பரலோகத்தில் பேரெழுதியிருக்கிற முதற்பேறானவர்களின் சர்வசங்கமாகிய சபையினிடத்

திற்கும், யாவருக்கும் நியாயாதிபதியாகிய தேவனிடத்
திற்கும், பூரணராக்கப்பட்ட நீதிமான்களுடைய ஆவி
24 களினிடத்திற்கும்,—புது உடன்படிக்கையின் மத்தி
யஸ்தராகிய இயேசுவினிடத்திற்கும், ஆபேலினுடைய
இரத்தம் பேசினதைப்பார்க்கிலும் நன்மையானவை
களைப் பேசுகிற இரத்தமாகிய தெளிக்கப்படும் இரத்தத்
தினிடத்திற்கும் வந்து சேர்ந்தீர்கள்.

25 பேசுகிறவருக்கு நீங்கள் செவிகொடுக்கமாட்டோ
மென்று விலகாதபடி எச்சரிக்கையாயிருங்கள்; ஏனெ
னில், பூமியிலே பேசினவருக்குச் செவிகொடுக்கமாட்
டோமென்று விலகினவர்கள் தப்பிப்போகாமலிருக்க,
பரலோகத்திலிருந்து பேசுகிறவரை நாம் விட்டு விலகி
26 னால் எப்படித் தப்பிப்போவோம்?—அவருடைய சத்
தம் அப்பொழுது பூமியை அசையப்பண்ணிற்று; இன்
னும் ஒருதரம் நான் பூமியைமாத்திரமல்ல, வானத்தை
யும் அசையப்பண்ணுவேன் என்று இப்பொழுது வாக்
27 குத்தத்தம் செய்திருக்கிறார்.—இன்னும் ஒருதரம் என்
கிற சொல்லானது அசையாதவைகள் நிலைத்திருக்கத்
தக்கதாக, அசைவுள்ளவைகள் உண்டாக்கப்பட்டவை
கள்போல மாறிப்போம் என்பதைக் குறிக்கிறது.—
28 ஆதலால், அசைவில்லாத ராஜ்யத்தைப் பெறுகிறவர்க
ளாகிய நாம் பயத்தோடும் பக்தியோடும் தேவனுக்குப்
பிரியமாய் ஆராதனைசெய்யும்படி கிருபையைப் பற்றிக்
29 கொள்ளக்கடவோம்.—நம்முடைய தேவன் பட்சிக்கிற
அக்கினியாயிருக்கிறாரே.

இரண்டுடன்படிக்கைகளும் (18–29).

18. **அன்றியும்.** இவ்விடைச்சொல் தேவையில்லை. **அக்கினி—எரிகிறதுமான:** நெருப்புப்பற்றி யெரிந்ததுமான எனத் திருத்தவும். அல்லது தொடக்கூடியதும் பற்றியெரிகிறதுமான அக்கினியினிடத்திற்கும்: இன்னொரு மொழிபெயர்ப்பு.

19. **முழக்கம்—சத்தம்.** அல்லது தொனி என மாற்றலாம். முழக்கம், அதிக பெருஞ்சத்தம். **வார்த்தைகளுடைய ஓ—வார்த்தைகளின்** தூரலோசையிடத்திற்கு மல்லவே நீங்கள் வந்திருக்கிறது என்று வாக்கியங்களை முடிக்கவேண்டும். இங்குக் கூறிய சம்பவங்களை யாத்.

19. 16–19; 20. 18–இலும், உபா. 4. 11, 12; 5. 22–இலும் காண்க. நிருபாசிரியர் புதிய உடன்படிக்கையின் மேன்மையையும் மகத்துவத்தை மிக்கச் சாதுரியமாய் இவ்வாக்கியங்களில் விவரிக்கிறார். உபா. 5. 22–27; 18. 16; யாத். 20. 19 காண்க. எபிரேயருக்கு அச்சமயம் பெருந்திகிற்பிடித்தது. அங்கு நடந்தவை பஞ்சபூதங்களும் ஏகமா யெழும்பி முழங்கியதுபோலிருந்தன. இதற்கு மூகாந்தரம் எடுத்த வாக்கியங்களிற் காட்டியிருக்கிறது.



20. மலையை—அம்மலையை எனின் பொருள் நன்கு விளங்கும். அது கல்லெறியுண்டு சாகவேண்டுமென்ற சட்டளையை அவர்களுக்குச் சகிக்க முடியவில்லை என மாற்றுக. யாத். 19. 12, 13 காண்க. இத்தனைப் பயங்கரமான சந்தர்ப்பங்களிலே பழைய உடன்படிக்கை ஸ்தாபகமாயிற்று. யூதப் பரம்பரையிலே ஒவ்வொரு கட்டளையும் கூறப்பட்டவுடனே ஜனங்கள் பன்னிரண்டு மைல்தூரம் பயந்து ஓடிப்போனதாகவும், தேவதூதர்கள் அவர்களைத் தைரியப்படுத்தி இட்டுக்

கொண்டுவந்ததாகவும் சொல்லியிருக்கிறது. பவுலப்போஸ்தலன் இவ்விரு உடன்படிக்கைகளையும் இன்னொருவிதமாய்க் காண்பிக்கிறார்: சீனாய்மலை அடிமைத்தனத்துக் குட்படுத்துகிறதென்றும், எருசலேம் நகரம் நமது ஸ்வாதீன தாயென்றும் கூறுகிறார் (கலா. 4. 24–26).

21. **மோசேதானும் – நான் வெருவும் அஞ்சி நடுங்குகிறேன்** எனின் இன்னுங் கொஞ்சம் உறுதியாயிருக்கும். தற்கால கிறிஸ்தவர்கள் இத்தன்மையான சந்தர்ப்பங்களை ஆராதனைக் காலங்களிற் காணாமையால், ஆலயத்தில் நிர்விகாரமாயும், கேளிக்கையாயும் நடந்துகொள்ள நேரிடுகிறது. ஒருவரோடொருவர் பேசுகிறதும், நகைக்கிறதும், ஆடை அணிகளைக் கவனிக்கிறதும் ஆராதனைக் கழகல்ல; பக்திக்கும் அநுகூலமன்று. இஸ்ரவேலரின் அதிபதியாகிய மோசேதானும் அஞ்சி நடுங்கினாரே! ஆகிலும் இது பரம்பரை–வேதத்திற் சொல்லியிருக்கவில்லை. எதற்கும் உபா. 9. 19; அப். 7. 32 காண்க.

22. நிருபாசிரியர் இப்பொழுது புதிய உடன்படிக்கையின் லட்சணங்களை எடுத்துரைக்கிறார். **நீங்களோ.** கிறிஸ்துவின் அடியாரும் புது உடன்படிக்கையாளருமாகிய நீங்களோ எ–று. மேலே பழைய உடன்படிக்கையாளர் அணுகியவற்றைச் சொன்னவர், இப்பொழுது



கிரிஸ்தவர்கள் அணுகியிருப்பவைகளை எடுத்துரைக்கிறார். எட்டுக் காரியங்களினிடம் வந்திருக்கிறதாக உணர்த்துகிறார். (1) **சீயோன் மலையினிடத்திற்கும்**. சகல வாக்குத்தங்கட்கும் சீயோனே நடுமையமாகக் கூறியிருக்கிறது. சங். 2. 6; 48. 2; 78. 68, 69; 125. 1; யோவே. 2–32; மீகா. 4. 7 காண்க. எருசலேம் நகரம் நான்கு மலைகள்மேல் கட்டியிருந்தது. அவற்றில் சீயோன் ஒன்று. அதன்மேல்தான் தேவாலயம் கட்டப்பட்டது. அதனால் சீயோன் என்றாலும் எருசலே மென்றாலும் ஒன்றே. சீனாயும் சீயோனும் ஆறு விஷயத்தில் ஒன்றுக் கொன்று பூரணப்படுகிறது. (2) **ஜீவித்திருக்கும் கடவுள் நகரமாகிய பரம எருசலேமினிடத்திற்கும்**—சீயோனும் எருசலேமும் மோட்சத்துக் கடையாளங்கள்—வெளி. அதி. 21. 22 காண்க. அன்றி, கலா. 4. 26 காண்க. இதனால் விசுவாசிகள் இப்பொழுதே மோட்சத்தில் சஞ்சரிக்கிறார்கள் என்பது திண்ணமாகிறது. (3) **எண்ணிறந்த தூதர்ச் சேனைகளினிடத்திற்கும்**. உபா. 33. 2; சங். 68. 17; தானி. 7. 10 காண்க. பழைய உடன்படிக்கையிலே தூதர்கள் பெரும்பாலும் பயங்கரமானவர்கள்—புதியதிலோ நமக்கு உதவிபுரியும் அழகுற்ற கேந்திரவாளர் (அதி. 1. 14; வெளி. 5. 11, 12).

23. (4) **பரலோகத்திற் பேரெழுதியிருக்கிற முதற்பேறனவர்களின் சர்வசங்கமாகிய சபையினிடத்திற்கும்**. தற்காலம் உலகத்திலுள்ள விசுவாசிகள்—இவர்கள் பேர்கள் பரம டாப்புகளிலே பதிவு செய்திருக்கின்றன (லூ. 10. 20; ரோ. 8. 16, 29; யாக். 1. 1-). **முதற்பேறனவர்கள்**. உருவகத்தாலே. பரம தகப்பன் ஞானசொத்தைச் சுதந்தரிப்பவர்கள். ஏசாவைப்போல் சொந்தப் பிறப்புப் பாத்தியத்தை இழந்த யூதர்களுக்குப் பதிலாக, திருச்சபையிற் சேர்ந்த உத்தம அடியார் அனைவரும். கடவுளின் சிருஷ்டிப்பிலே முதற் கனி போன்றவர்கள். திருச்சபையின் மகிமையும் மாட்சிமையும் இதிற் கூறியிருக்கிறது. (5) **யாவருக்கும் நீதிபதியாகிய கடவுளிடத்திற்கும்**. 2 தீமோ. 4. 8. சொல்லியிருக்கிறபிரகாரம். ஒவ்வொருவனுக்கும் தன்தன் கிரியைக்குத்தக்க பலனளிக்கும் கோனாதை நீதியுள்ளவர். மனிதன் அப்படிப்பட்டவனல்ல. சில இந்திய ஜட்ஜுகள் முதலானவர்கள் ஒருகையிலே மாத்திரமன்றி, இரண்டுகையிலும் லஞ்சம்

வாங்குகிறவர்கள். வாதி, பிரதிவாதி இருவரிடத்திலும் பரிதானத்தை ஏலம்போடுகிறவர்கள். கடவுள் நமக்கு யாதொரு பட்சபாதமும் செய்ய மாட்டார். ஆதலால் அவருக்கஞ்சி நடப்போமாக. (6) **பூரணராக்கப் பட்ட நீதிமான்களின் ஆவிகளிடத்திற்தும்.** ஓட்டம் முடிந்து ஓய்ந்திருக் கும் பரமவாசிகள், இம்மைக்குரிய குறை கறை யாவும் நீங்கப்பெற்ற பரிபூரணர்கள். வெளி. **7. 14–17** காண்க. இயேசுவின் திரு உதிரத் தால் தெளித்து நீதிமான்களாக்கப்பட்டவர்கள். நீங்கள் வந்திருக்கிறது கார்மேகத்துக்கும், காரிருளுக்கும் கடுந்தொனிக்குமன்று, பூமியிலும் பரலோகத்திலுமுள்ள பரிசுத்தவான்களின் ஐக்கிய சபைக்கே. பரம சபை எத்தனைத் தூய்மையும், திவ்யமும், பூர்த்தியுமானது! ஒவ்வொரு வரும் அதிலே ஒரு அவயவமாயிருப்பதே சிரேஷ்டம். இதுவே வாஸ் தவமான மகோற்சவம்.

24. (7) **புது உடன்படிக்கையின் மத்தியஸ்தராகிய இயேசுவி னிடத்திற்தும்.** நடுங்கிப் பின்வாங்கின மோசேயினிடத்திற்கன்று; கட வுளுக்கும் மனிதருக்கும் மத்தியஸ்தரான இரட்சகனிடம் வந்திருக்கி ரும். அவர் நேற்றும், இன்றும், என்றும் சாஸ்வதமானவர். மத். **26. 27–29**; எபி. **9. 15; 10. 22** காண்க. (8) **ஆபேலின் இரத்தத்தை விட நன்றாய்ப் பேசுகிற தெளிரத்தத்தினிடத்திற்தும்.** இது கிறிஸ்தவர்க ளின் கடைசிப்பாக்கியம். இது விவரித்திருக்கிற அதி. **9. 13; 10. 22; 11. 4; 13. 12** காண்க. ஆபேலின் இரத்தம் பழிக்குக் கத்தினது; கிறிஸ்துவின் இரத்தம் மன்னிப்புக்குக் குரலிடுகிறதென்று இராஸ் மஸ் கூறுகிறார். **தெளிரத்தம்.** கிறிஸ்துவின் உதிரம் தெளிக்கப்படா மல் சிந்தப்பட்டதாயினும், பழைய உடன்படிக்கையின் மாதிரிப்படி உருவகப்படுத்துகிறார் (1 பேது. 1. 2). திருச்சபையானது இவ்வெட் டினிடத்திற்கும் வந்திருக்கிறது அதன் சிலாக்கியம். இதனால் அதற்கு வானுலகமும் பூவுலகமும், இம்மையும் மறுமையும், பழைய தும் புதியதும், அன்னியோன்யமாய் இணைக்கப்படுகின்றன. நாம் உலகத்திலிருக்கும்பொழுதே பரலோகத்திலு மிருப்போமாக.

25. **பேசுகிறவரைத் தள்ளிவிடாதிருக்கப் பாருங்கள்.** பேசுகிற வர். கடவுள். இரண்டு உடன்படிக்கைகளின் கர்த்தா ஒருவரே. இரண் டிலும் பேசுகிறவர் அவரே. அவரே மலையிலிருந்தும் மோட்சத்தி

விருந்தும் பேசுகிறார். சீனாயிற் பேசினவர் மேசியாவே. இதுவும் யூதர்கள் நம்பிக்கை. இடபேதமும், ஜனபேதமும், சந்தர்ப்பபேதமுமே அல்லாமல், குரல்பேதம் கிடையாது. காலத்துக்கும் சமயத்துக்கும் தக்கதாய் திரு அவதாரமூர்த்தி விளம்பலுற்றார். பூமியிலே எச்சரித்தவரைத் தள்ளினவர்கள் தப்பவில்லையானால் பரத்திலிருந்து எச்சரிப்பவரை விட்டு விலகுகிற நாம் தப்புவது அவ்வளவும் அரிது. தப்பவில்லையானால் அதி. 2. 2, 3; 3. 17; 10. 28, 29 காண்க. இந்த நியாயத்துக்கு அதி. 1. 4; 3. 3; 7. 20; 8. 6 காண்க.

26. சத்தம் அல்லது ஓசை. யாத். 19. 18; நியா. 5. 4; சங். 114. 7 காண்க. இப்பொழுதோ, மூ. அசைய. நடுங்க எனத் திருத்துக. வாக்குச்செய்திருக்கிறார். ஆகா. 2. 6, 7 இங்கு எடுத்துரைத்திருக்கிறது. லூக். 21. 26—இலே "வானத்தின் சத்துவங்கள் அசைக்கப்படும்" என்று கர்த்தர் உரைக்கிறார்.

27. வாக்கியத்தை: இன்னும் ஒருதரம் என்கிற சொல்லானது, அசையாதவை இருக்கத்தக்கதாக, அசைவுற்றவை உண்டாக்கப்பட்டவைபோல எடுபட்டுப்போவதைக் குறிக்கிறது எனத் திருத்தியெழுதுக. அசையாதவை கடவுளின் பரம பட்டணமும், நித்திய ராஜ்யமுமே. (தானி. 2. 44; வெளி. 21. 1, மூ. பிரபஞ்சமும் அதனோடு சம்பந்தப்பட்ட சமஸ்தமும் மாயமும், பொய்யும், ஒழிந்துபோகும் தன்மையுமுள்ளவை (சங். 102. 25, 26; 2 பேது. 3. 10; வெளி. 20. 11). காணாதவைகள்தாம் என்றும் நிலைப்பவை. காட்சியினாலல்ல, விசுவாசத்தினாலே ஜீவிக்கிற கிறிஸ்தவனுக்கு காணாத உலகந்தான் நிச்சயமானது. பூமியதிர்ச்சியாகிலும், புரண்டு பாயும் வெள்ளமாகிலும் அதைத் தீண்டாது

28. மேற்கூறிய நியாயத்தின் முடிவுரையாக பயங்கரமான ஒரு புத்திமதி சொல்லுகிறார். அசைவில்லாத—அசைக்கமுடியாத—பெறுகிறவர்களாகிய—பெறுகிற. பயத்தோடும் பக்தியோடும்—வணக்கத்தோடும் திகிலோடும் கடவுளைப் பிரீதியாய்ச் சேவிக்க கிருபை பெறுவோமாக—பிரீதியாய்: அவருக்கு இன்பமுண்டாகும்படி.

29. நம்முடைய கடவுள் பட்சிக்கிற ஓர் அக்கினியாயிருக்கிறார். உபா. 24—இலே இந்த லட்சணம் கூறியிருக்கிறது. கடவுள் அவிசு

வாசத்தையும் சத்தியத்தைவிட்டு விலகிப்போதலையும் வெறுக்கிற வெறுப்பை இங்கு உருவகமாகக் கூறியிருக்கிறது. இது ஒருக்காலும், கடவுளின் தத்துவ லட்சணமன்று. முந்தின வாக்கியத்திலடங்கிய "திகிலுக்கும் வணக்கத்துக்கும்" இதுவே காரணம்.



# 13. அதிகாரம்.

## அதிகார விஷயம்.

இந்தக் கடைசி அத்தியாயம் நிருபத்துக்கு ஓர் அநுபந்தம்போன்றது. பன்னிரண்டாம் அத்தியாயத்தோடு நிருபத்தின் முக்கிய விஷயம் விளக்கி விவரித்து முடிவுபெற்றது. இந்த அநுபந்த வாக்கியங்களிலே நிருபாசிரியர் தமது நடையைக் கொஞ்சம் மாற்றி தர்ம நெறிக்குரிய சில பொதுவான நற்போதனைகள் கூறுகின்றார். இதுகளை மூன்று பாகமாக வகுக்கலாம். (i) பிறருக்குரிய கடமைகள்; (ii) மார்க்கக் கடமைகள்; (iii) தமக்குரிய சில காரியங்கள். வாக்கியம் வாக்கியமாய்ப் பார்த்தால் அதிகாரத்தை இன்னும் நுட்பமாகப் பகுக்கலாம்: அன்பும் (1), விருந்தோம்பலும் (2), துன்புற்றோர்க்குப் பட்சமும் (3), தூயஜீவியமும் (4), மனரம்மியமும் (5), நம்புங் குணமும் (6), போதிக்கப்படுகின்றது; போதக அதிகாரத்துக்கடங்கல் (7, 8.), உறுதிஞானம் (9), பலிபீடம், பலி, கிறிஸ்தவனுடைய பலிகள் (10–16); அதிகாரத்துக்கடங்கல் மீண்டும் தூண்டியது (17), முடிவான விளம்பரங்களும் ஆசீர்வாதங்களும் (18–25).

13. 1-6.

1, 2 சகோதர சிநேகம் நிலைத்திருக்கக்கடவது.—அந்நியனை உபசரிக்க மறவாதிருங்கள்; அதினாலே சிலர் அறியாமல் தேவதூதரையும் உபசரித்ததுண்டு.

3 கட்டப்பட்டிருக்கிறவர்களோடே நீங்களும் கட்டப்பட்டவர்கள்போல அவர்களை நினைத்துக்கொள்ளுங்கள்; நீங்களும் சரீரத்தோடிருக்கிறவர்களென்று அறிந்து, தீங்கநுபவிக்கிறவர்களை நினைத்துக்கொள்ளுங்கள்.

4 விவாகம் யாவருக்குள்ளும் கனமுள்ளதாயும், விவாக மஞ்சம் அசுசிப்படாததாயுமிருப்பதாக; வேசிக்கள்ளரையும் விபசாரக்காரரையும் தேவன் நியாயந்தீர்ப்பார்.

5 நீங்கள் பணஆசை யில்லாதவர்களாய் நடந்து, உங்களுக்கு இருக்கிறவைகள் போதுமென்று எண்ணுங்கள்; நான் உன்னைவிட்டு விலகுவதுமில்லை, உன்னைக் கைவிடுவதுமில்லை என்று அவர் சொல்லியிருக்கிறாரே.-

6 அதினாலே நாம் தைரியங்கொண்டு: கர்த்தர் எனக்குச் சகாயர், நான் பயப்படேன், மனுஷன் எனக்கு என்ன செய்வான் என்று சொல்லலாமே.

### பிறருக்குரிய கடமைகள் (1—6).

1. **சகோதரரின் நேசம் நீடித்திருப்பதாக.** இது மிக்க அவசியமான போதனை—யூதர்கள் ஏனைய ஜனங்கள் எல்லாரையும் தாழ்ந்தவராக எண்ணி, அவமதித்துவந்தவர்கள். கிறிஸ்தவர்களானவர்களும் இந்த ஜாதி வேற்றுமையை விடுவது அரிதாயிருந்தது. நமது தென் இந்திய திருச்சபையாரைப்போலப் பிறப்புத்தீட்டை முக்கியமாகப் பாராட்டிவந்தார்கள். யூதன், அந்நியன்; உயர்குலத்தான், தாழ்குலத்தான்; சுவாதீனன், அடிமை என்றிவ்வாறு பேதங்கள் அநுசரித்துப் பகையும் தற்பொழிவும் சாதித்துவந்தார்கள். ஆனதுபற்றியே இந்தப் பிரதமக் கட்டளை கூற நேரிட்டது. அவ்வாறே அப்போஸ்தலன்மாரும் இதை வற்புறுத்திவந்தார்கள். உதாரணமாக ரோம. 12. 10; 1 தெச 4. 9; 1 பேது. 1. 22; 1 யோ. 3. 14—18. முதலியன காண்க. எம்பெருமான் போதித்தவாறு (யோ. 13. 35) இந்த அன்பின் லட்சணத்தினாலே உலகம் தமதடியார் கிறிஸ்தவர்களென்று அறிந்துகொள்ளும். அக்காலத்தும் எதிரிகளும் கிறிஸ்தவர்களின் சகோதர சிநேகத்தைப் பார்த்துப் பரியாசம் பண்ணினார்கள். எபிரேய கிறிஸ்தவர்களிற் சிலர் சில போதனைகளின்பொருட்டுச் சபையிலே வாக்குவாதமும், அதனால் அன்புக்குப் பதில் பகையும் கலகமும் உண்டுபண்ணினார்கள் ஆகிலும், இந்தச் சபையிலே பரஸ்பர சிநேகம் ஒழியவில்லை; அதனால் தான் நிருபாசிரியர் அது நிலைத்திருப்பதாக என்று போதிக்கிறார். சுதேசக் கிறிஸ்தவர்கள் ஒருவரைப்பற்றியொருவர் இழிவாய்ப் பேசி,

பகைசாதித்துப் பொறுமைசொல்லி வருகிறதைக் குறைப்பதும், நிறுத்துவதும் இந்தச் சகோதரரின் நேசமே.

2. **அந்நியரை உபசரிக்க மறவாதிருங்கள்**—உபசரிக்க—அந்நியருக்கு அன்புப் பாராட்ட எனத் திருத்துங்கள். அக்காலத்தில் விருந்தோம்பல் வெகு சாதாரணமாயிருந்தது. துன்பப்படுத்தப்பட்ட விசுவாசிகள் ஊர்விட்டு ஊருக்கோடித் திரிவார்கள். திடீரென ஒரு சகோதரன் வீட்டிலிறங்கி இராத்தங்குவார்கள். அக்காலத்தில் ஹோட்டல்கள், அன்னசத்திரங்கள் கிடையா. சகோதரர் தாம் மனஞ்சலியாது உபசரிக்கவேண்டும். அன்புடன் அன்னம் படைக்கவேண்டும்.

> மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
> நோக்கக் குழையும் விருந்து.

1 பேது. 4. 9–ஓடு ரோ. 12. 13; தீத். 1. 8; 1 தீமோ. 3. 2 ஒத்துக்காண்க. **அதனாலே சிலர் அறியாமல் தூதரையும் உபசரித்ததுண்டு**. இவ்வாறு நடந்ததற் குதாரணங்கள்: ஆபிரகாம் (ஆதி. 18. 2–22); லோத்து (ஆதி. 19. 1, 2); மனோவா (நியா. 13. 2–14). கிதேயோன் (நியா. 6. 11–20). தூதர்களுக் கரசனை எம்பெருமானையே ஒரு வேளை உபசரிப்போமென்று அவரே உரைத்திருக்கிறார்: அந்நியனா யிருந்தேன், என்னைச் சேர்த்துக்கொண்டீர்கள் என்கிறார் (மத். 25–35). தமிழ்க் கிரிஸ்தவர்கள் **அந்நியரை**, (இனத்தார், நண்பினரைமட்டுமன்று) உபசரிக்க முயலவேண்டும்.

3. **கட்டப்பட்டவர்கள்** – சிறையிலிருப்பவர்கள். அக்காலத்தில் இது சாமானிய சம்பவம். குணப்படுமுன்பு பவுலப்போஸ்தலன் முதலாய்க் கிரிஸ்தவர்களைச் சிறைகொண்டுபோனார். கொலோ. 4, 18 காண்க. **கட்டப்பட்டவர்கள்போல**. அவர்கள் கட்டுகளை நமது கட்டுகளாகப் பாவிக்கவேண்டும் (1 கொரி. 12–26). சமஸ்த கிரிஸ்தவர்களும் எம்பெருமானுக்குக் கட்டுண்ட அடிமைகள் (1 கொரி. 7. 22; 2 கொரி. 2. 14). **நினைத்துக்கொள்ளுங்கள்**. இந்த எண்ணம் மனதில்மட்டும் இருந்துவிடாமல், அன்பான செயல்களிலேயும் வெளிப்படவேண்டும். **சரீரத்திலிருப்பது**—இந்த ஜீவியத்திலிருந்து துன்பத்துக்கும் துயரத்துக்கும் ஆளாதல். அழுகிறவரோடு அழவேண்டும்

(ரோ. 12. 15). **தீங்கனுபவிக்கிறவர்களை—தீங்குற்றவர்களை** எனத் திருத்தலாம். பொது ஆராதனைகளில் சிறையிலிருப்பவருக்காக வேண்டிக்கொள்ளுதல் அக்காலமுதல் நடந்தேறிவருகிறது.

4. **யாவருக்குள்ளும்** மு. **கனம்பெற்றதாயும்,** இங்கு விவாகநிலைமையைச் சிறப்பிக்கிறார். வேதவாக்கியங்கள் விவாகத்தை அவமதித்து, விவாகமின்மையை அல்லது சந்நியாசத்துவத்தைச் சிறப்பிக்கிறதுமில்லை. இரண்டையும் ஒருசீராய் மதிக்கிறது. எம்பெருமான் தாமே விவாக நிலைமையிற் பிரவேசிக்காவிடினும் (தெய்வபுருஷருக்கு அது சிறக்காது), விவாகத்துக்குப் போய் அதைக் கௌரவப்படுத்தினார். அவரைப் பின்பற்றல் உலக வாழ்க்கையை அலட்சியம் பண்ண வேண்டுமென்றல்ல. **யாவருக்குள்ளும்**—குருமார் சபையாராகிய சகலருக்குள்ளும். அப்போஸ்தலன்மார் முதலியவர்கள் விவாகத்தை மறுத்ததில்லை (1 தீமோ. 4. 1–3). பழைய உடன்படிக்கையிலும் புதிய உடன்படிக்கையிலும் கலியாணஞ்செய்தல் தெளிவுற உபதேசித்திருக்கிறது (ஆதி. 2. 18, 24); மத். 19. 4–6; யோ. 2. 1, 2; 1 கொரி. 7. 2 காண்க. வாக்கியத்திற் கண்டிருக்கிற எச்சரிப்பு கற்பின்மையைக் கண்டித்தது. ஒருவேளை அப்பொல்லோவின் சபையாரிற் சிலர் எஸ்ஸீன் கட்சியாரைப் பின்பற்றிச் சந்நியாசத்துவத்தை மெச்சியிருப்பார்கள் (1 தீமோ. 4. 3). விவாகம் கௌரவத்துக்குரியது; துரிச்சைகளே அகௌரவமானவை. **விவாகமஞ்சம்.** இது நேர்த்தியான மொழிபெயர்ப்பு. ஆகிலும் **படுக்கை** எனத் திருத்தலாம். சகலவிதமான காமவிகாரங்களும், மிதமிஞ்சிய சிற்றின்பங்களும், அவலட்சணங்களும், அசுசியான செயல்களும் இதனாற் கண்டிக்கப்படுகிறது.

**வேசிக்கள்ளர்**—கலியாணம் பண்ணாதவர்களின் கற்பின்மை. **விபசாரம்**—கலியாணம் பண்ணினவர்களின் கற்பின்மை. இக்காலத்திற்போலவே அக்காலத்திலும் இவ்விருவிதக் கற்பின்மைகளும் இரகசியத்தில் நடத்தப்பட்டாலும், மிக்க சாதாரணமாயிருந்தன. அப்போஸ்தலன்மார் இதுகளைத் திருச்சபையினின்றும் நிர்மூலப்படுத்த முயன்றார்கள். கலா. 5–19, 21; 1 கொரி. 6. 9, 10; எபே. 5. 5; கொலோ. 3. 5. 6; வெளி. 22–15 காண்க. ஹிந்துச் சாஸ்திரங்களிலே இந்த

அக்கிரமத்தைக் கடவுளுக்கு விரோதமான பாவமாகவல்ல, பல தீமைகளை உண்டுபண்ணுகிற கெடுதிகளாகமாத்திரம் கண்டித்திருக்கிறது. அக்காலத்திலும் ரோமராஜ்யத்தில் இது ஒரு பாவமாக மதிக்கப்படவில்லை. வேசித்தனம் உலகமெங்கும், விசேஷமாய், நாகரீகமடைந்திருக்கும் நாடுகளிலே—சாதாரணமாக நடந்துவருகிறது. ஆகிலும்—**கடவுள் நியாயந் தீர்ப்பார்**—இம்மையிலே நூற்றிலே தொண்ணூறு பேர் பல பயங்கரமான நோய்களினாலே தண்டிக்கப்படுகிறார்கள். மறுமையிலே ஒருவரும் தப்பார். விபசாரம் பண்ணாதே என்பது பத்துக்கட்டளையில் ஏழாவது. எட்டாம் ஹென்ரி அரசனின் ஜனன உற்சவம் நடந்தபொழுது மரியாதை செய்யவந்த பிரபுக்களோடு சென்ற பிஷப்வாத்திமார் இந்த வாக்கியத்திற் குறிப்பிட்ட ஒரு வேதாகமத்தை அவருக்களித்தாராம்.

5. வாக்கியத்தைப் பின்வருமாறு திருத்தி யெழுதுக: **நீங்கள் பண ஆசைக்கு விலகி, உங்களுக்கிருப்பவை போதுமென்றிருங்கள்.** இந்த வாக்கியங்களின் நடையைப் பார்த்தால், நிருபாசிரியர் பவுலப்போஸ்தலன் எழுதின ரோமர் நிருபத்தை வாசித்தவராகத் தோன்றுகிறது. நடை ஒன்றுக்கொன்று பெரும்பாலும் ஒத்திருக்கின்றது. புதிய ஏற்பாட்டிலே பொருளாசையும் அசுத்தமும் அனேகமாய் இணைத்துக் கூறியிருக்கிறது (1 கொரி. 5. 10; 6. 9; எபே. 5. 3, 5; கொலோ. 3. 5). **எவ்விதமாயினும்** என்பதை முன்வைத்து, **நான் உன்னை நெகிழ விடுவதுமில்லை, கைவிடுவதுமில்லை என்று** (அவர்) **தாமே சொல்லியிருக்கிறாரே** எனத் திருத்துக. உபா. 31. 6, 8; 1 நாளா. 28–20; ஆதி. 28. 15; யோசு. 1. 5; ஏசா. 41. 17 படர்க்கையிலும் தன்மையிலும் காண்க.

6. இது சிறந்த மொழிபெயர்ப்பு. சங். 118. 6 காண்க. அதையே இங்கு எடுத்துரைத்திருக்கிறது. மனத்திருப்திக்கு இது ஆதாரமான வாக்கு. கிறிஸ்தவர்கள் பெரும்பாலும் தரித்திரரா யிருக்கிறபடியால், மனரம்மியம் அவர்களுக்கு இன்றியமையாதது. அது இல்லாமையினால்தான் கடனும், சங்கடமும், சமாதானக்கேடும் அனேக குடும்பங்களில் குடிகொண்டிருக்கின்றன. **தைரியங்கொண்டு. அதிக தைரியமாய்** எனத் திருத்துக.

13. 7, 8.

7 தேவவசனத்தை உங்களுக்குப் போதித்து உங்களை நடத்தினவர்களை நீங்கள் நினைத்து, அவர்களுடைய நடக்கையின் முடிவை நன்றாய்ச் சிந்தித்து, அவர்களுடைய விசுவாசத்தைப் பின்பற்றுங்கள்.

8 இயேசுகிறிஸ்து நேற்றும் இன்றும் என்றும் மாறாதவராயிருக்கிறார்.

அதிகாரத்துக்கடங்கல்.

7. உங்கள்மேல் அதிகாரஞ்செலுத்தி, உங்களுக்குக் கடவுள் வார்த்தையைப் பேசினவர்களை நினைத்துக்கொள்ளுங்கள்; அவர்கள் ஜீவிய ஒழுக்கத்தின் பயனைச் சிந்தித்து, அவர்கள் விசுவாசத்தைப் பின்பற்றுங்கள். இவ்வாறு வாக்கியத்தை மொழிபெயர்த்தால், பொருள் நன்கு விளங்கும். **அதிகாரஞ் செலுத்தினவர்கள்.** அப். 15. 22; 1 தெச. 5. 12 காண்க. போதகர் அல்லது குருமார். அக்காலத்தில் அவர்கள் **பிஷப்** என்றும் **பிரெஸ்பிற்றர்** என்றும் அழைக்கப்பட்டார்கள். இவ்விரண்டு பதங்களும் ஒரே உத்தியோகத்தைக் குறித்தன. பிற்காலத்தில், அதாவது முந்நூறு வருஷத்துக்கப்பால் வித்தியாசம் உண்டாயிற்று. சபைப்போதகரின் முக்கிய தொழில் கடவுள் வார்த்தையை உரைத்தல். காலக்கிரமத்தில் இது பிரசங்கமாயிற்று. ஆரம்பத்தில் பழைய ஏற்பாட்டையும், அக்காலத்தில் நடமாடிய சில சுவிசேஷங்களையும், நிருபங்களையும் அவர்கள் சபைகூடுகையில் எடுத்து வாசித்தல். சில குறிப்புகள் சொல்வார்கள்; அல்லது சம்பாஷிப்பார்கள். கருகலான சில வாக்கியங்கட்கு உரைசொல்வார்கள். அதிகாரஞ் செலுத்தலும் இன்னொருகடமை. சபையில் உண்டான வழக்குகளைத் தீர்த்து, வாலிபருக்குப் புத்திசொல்லி, சண்டைபோட்டவர்களைச் சமாதானப்படுத்தி, ஆபத்தில் காத்து, ஏழைகளுக்கு இவ்வாறு பலவிதமாய் அவர்களை நடத்த நேரிட்டது. அதிகாரம் உற்பத்தியானவகை இது. அன்புக்காளுந் தன்மை தானேவரும். ஆகிலும், நாளாவட்டத்தில் இந்தப் போதகரிலிருந்து படிப்படியாய்ப் போப்பு உற்பத்தியானார். உலகமெங்குமுள்ள கிரிஸ்தவர்களை ஆண்டு நடத்தி, ஒரு ராஜ்யத்தையும் அரசுபுரிந்தார். அவர்களுக்கு உரைகல் இரண்டு: ஒன்று அவர்கள்

**ஜீவிய ஒழுங்கின் பலன்**; மற்றொன்று, அவர்கள் **விசுவாசம்**. இவ்விரண்டையும் கவனிப்பது சபையார்க்கடமை. முதற்குறித்த இரு கடமைகளுக்கும், இவ்விரண்டு லட்சணங்களுக்கும் பொருத்தமிருக்க வேண்டும். இதுகாரணத்தால், போதகன்மார் அதிக விழிப்புள்ளவர்களா யிருக்கவேண்டும்—சபையாரின் கண்கள் மாத்திரமல்ல, இரட்சகரின் கண்களும் அவர்களை நோக்கியிருக்கின்றன.

**8. இயேசுகிறிஸ்து நேற்றும், இன்றும்,—(அன்றி) என்றும் ஒரே விதமானவர்.** மல். 3. 6; யாக். 1. 17 காண்க. இரட்சகருக்குக் கடவுள் லட்சணம் சூட்டப்படுகிறது. என்றும் மாறாத சாஸ்வதமானவர். இன்னொரு மொழிபெயர்ப்பிலே, "இயேசுகிறிஸ்து நேற்றிருந்ததுபோலும், இனி என்றைக்கும் இருப்பதுபோலும், இன்றைக்கும் ஒரேவிதமானவர்" என்றிருக்கிறது. இந்தச் சத்தியம் பக்தருக்கு மிகவும் ஆறுதலானது. அவர் உலகத்தில் சுமார் ஈராயிரவருஷங்கட்கு முன்பு நடமாடின காலத்திற் காட்டிய அன்பும், இரக்கமும், கிருபையும் கண்டிப்பும், சர்வசக்தியும், சர்வ அறிவும், சர்வவியாபகமும், பூரண சுய ஒறுப்பும் பரோபகார சிந்தையும், இன்றும் வெளிப்படுத்தி வருகிறார். அரசர் மோந்துகொள்வதுபோல் கடிப்பார்கள். நொடிக்கு நொடி குணம் மாறுபவர்கள். மனிதரும் அப்படியே; பக்தரும் மாறிவிடுவார்கள். இயேசுவோ எந்நாளும் ஒரே குணசீலமுடையவர். இது பின்வரும் எச்சரிப்புக்கு ஓர் முக்கிய நியாயம்.

## 13. 9-19.

9 பலவிதமான அந்நிய போதனைகளால் அலைப்புண்டு திரியாதிருங்கள். போஜன பதார்த்தங்களினாலல்ல, கிருபையினாலே இருதயம் ஸ்திரப்படுகிறது நல்லது; போஜன பதார்த்தங்களில் முயற்சிசெய்கிறவர்கள் பலனடையவில்லையே.

10 நமக்கு ஒரு பலிபீடமுண்டு, அதற்குரியவைகளைப் புசிக்கிறதற்குக் கூடாரத்தில் ஆராதனை செய்கிறவர்
11 களுக்கு அதிகாரமில்லை.—ஏனென்றால், எந்த மிருகங்களுடைய இரத்தம் பாவங்களினிமித்தமாகப் பரிசுத்த ஸ்தலத்துக்குள் பிரதான ஆசாரியனாலே கொண்டுவரப்

படுகிறதோ, அந்த மிருகங்களின் உடல்கள் பாளயத்
12 துக்குப் புறம்பே சுட்டெரிக்கப்படும்.—அந்தப்படியே,
இயேசுவும் தம்முடைய சொந்த இரத்தத்தினாலே ஜனத்
தைப் பரிசுத்தஞ்செய்யும்படியாக நகரவாசலுக்குப் புறம்
13 பே பாடுபட்டார்.—ஆகையால், நாம் அவருடைய நிந்
தையைச் சுமந்து, பாளயத்துக்குப் புறம்பே அவரிடத்
14 திற்குப் புறப்பட்டுப் போகக்கடவோம். — நிலையான
நகரம் நமக்கு இங்கே இல்லை; வரப்போகிறதையே நா
15 டித் தேடுகிறோம்.—ஆகையால், அவருடைய நாமத்தைத்
துதிக்கும் உதடுகளின் கனியாகிய ஸ்தோத்திரபலியை
அவர் மூலமாய் எப்போதும் தேவனுக்குச் செலுத்தக்
16 கடவோம்.—அன்றியும் நன்மை செய்யவும், தானதர்மம்
பண்ணவும் மறவாதிருங்கள்; இப்படிப்பட்ட பலிகளின்
மேல் தேவன் பிரியமாயிருக்கிறார்.

17 உங்களை நடத்துகிறவர்கள், உங்கள் ஆத்துமாக்களு
க்காக உத்தரவாதம் பண்ணுகிறவர்களாய் விழித்திருக்
கிறவர்களானபடியால், அவர்கள் துக்கத்தோடே அல்ல,
சந்தோஷத்தோடே அதைச் செய்யும்படி, அவர்களுக்
குக் கீழ்ப்படிந்து அடங்குங்கள்; அவர்கள் துக்கத்தோ
டே அப்படிச் செய்தால் அது உங்களுக்குப் பிரயோஜ
னமா யிருக்கமாட்டாதே.

18 எங்களுக்காக வேண்டிக்கொள்ளுங்கள்; நாங்கள்
நன்மனச்சாட்சியுள்ளவர்களாய் எல்லாவற்றிலும் யோக்
கியமாய் நடக்க விரும்புகிறோமென்று நிச்சயித்திருக்கி
19 றோம்.—நான் அதிசீக்கிரமாய் உங்களிடத்தில் வரும்
படிக்கு நீங்கள் இப்படி வேண்டிக்கொள்ளும்படி அதி
கமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன்.

## ஒரு முக்கிய போதனை.

9. **திரியாதிருங்கள்**—போகாதேயுங்கள். திரிகிறதற்கேற்ற பதம் மூலத்திலில்லை. புதுப்போதனைகள் அக்காலத்தில் விசுவாசிகளைக் கடலலைபோல் வாரிக்கொண்டு போகிறதாயிருந்தது. அப்போஸ்தலராகிய பவுலும், யோவானும் கண்டிக்கிற **நோஸ்திர்** என்ற உபதேசங்களல்ல (எபே. 4. 14; கொலோ. 2. 8; 1 யோ 4. 1). சட்டத்தைக் குறித்து யூதசாஸ்திரிகள் பெருக்கிப் போதித்த எண்ணிறந்த நுட்ப

மான பிரமாணங்களை இங்குக் கண்டிக்கிறூர். தல்முதிலே இவை ஏராளமானவை; ஆகிலும், மோசேயின் சட்டத்துக்கு எவ்வளவேனும் சம்பந்தப்பட்டவையன்று. இதுகளைத்தான் இரட்சகர் மலைப்பிரசங்கத்திலே பலமுறை நிர்மூலப்படுத்துகிறூர். **போஜன—அல்ல.** உணவுகளினலல்ல எனத் திருத்துக. ஸ்திரப்படுகிறதே. **போஜன—முயற்சி செய்கிறவர்கள்.'** அவற்றை அனுசரித்தவர்கள். அதி. 7. 18, 19 காண்க. உணவுச் சட்டங்களைக்குறித்த ஒரே உதாரணம் எடுத்துக் காட்டுகிறூர்.

நம்முடைய தேசத்திலும் உணவுகளைக்குறித்து அனேகமான வழக்கங்களும் சட்டங்களுமுண்டு. திருச்சபையிலும் அவ்வாறே. இதுகளனைத்தும் சுத்த அனுவசியம். கடவுளருளே சிரேஷ்டம்; அதுவே நமக்குச் சட்டம்.

10. **நமக்கோரு பலிபீடமுண்டு.** இதுமுதல் ஏழு வாக்கியங்களிலும் நிருபாசிரியர் கிறிஸ்தவனின் ஒரே பலியைக்குறித்தும், அவன் செலுத்தவேண்டிய பல பலிகளைக்குறித்தும் உபதேசிக்கிறூர். பலியிட்ட பதார்த்தங்களைப் பரிசுத்த பிரசாதமாக யூதர்கள் சாப்பிடுவார்கள். அதனாலே அதிக புண்ணியம் கிடைக்குமென்று வியர்த்தமாய் நம்பினூர்கள். கிறிஸ்தவ யூதர்களுக்கும் அந்த எண்ணமும் ஆசையும் இன்னுமிருந்தும், யூதர்கள் அவர்களுக்கு அந்தப் பிரசாதங்களை மறுத்ததுமன்றி, அவர்களை நிந்தித்தும் வந்தார்கள். ஆனதுபற்றி, நிருபாசிரியர், நமக்கு வேறொரு பலிபீடமுண்டு; அங்குச்சேர்ந்து சாப்பிட கிறிஸ்தவர்களாகாமல், இன்னும் கூடாரத்திற் சேவிப்பவர்களுக்கு யாதொரு உரிமையுங்கிடையாது எனக் கூறுகிறூர். கிறிஸ்துவே அந்தப் பலிபீடம். அதிலிருந்துண்கிறது அவருடைய பாடுகளிலே பங்கு பெறுதல். அதனால் நம்முடைய பலன்கள் எத்தனையோ சிறந்தவை. **அதற்குரிய—இல்லை.** இதை: ஆகிலும், **கூடாரத்தைச் சேவிக்கிறவர்கள் அதிலிருந்துண்ண உரிமையற்றவர்கள்** எனத் திருத்துக. **அதிலிருந்து.** அப்பீடத்திலிருந்து. அனைத்தும் உருவகம். கிறிஸ்தவ குரு ஆசாரியனல்ல. நற்கருணையும் இங்குக் குறிக்கப்படவில்லை.

குருவும் சபையாரும் செலுத்துகிற பலிகள் ஆவிக்குரியவை. ஸ்தூல பலிகள் நிருபாசிரியர் எண்ணத்தில் எவ்வளவேனுமில்லை.

இருதயத்தாலும் உதடுகளாலுமே அவர்கள் பலிசெலுத்துகிறார்கள். நமக்கும் ஒரே ஒரு பலியுண்டு. அதை நாம் உண்டு பிழைக்கிறோம். யோ. 6. 51–56 காண்க: இயேசுவைத் தள்ளுவோர் அவனைப் புசியார்கள். கூடாரத்தைச் சேவிக்கிறதெனல் கூடாரத்தில் சேவிக்கிறதிலும் இழிவானது. பொருளைவிட்டு நிழலுக்கு நழுகிவிடுகிறதற்கறிகுறி. அதி. 8. 5 காண்க.

11. இந்த வாக்கியத்தை பின்வருமாறு மொழிபெயர்க்கவேண்டும்: **பாவத்தின் காணிக்கையாகப் பிரதான ஆசாரியன் பரிசுத்த ஸ்தலத்துக்குள் கொண்டுவருகிற இரத்தம் (சிந்தின) மிருகங்களின் உடல்கள் பாளையத்துக்குப் புறம்பே எரிக்கப்படுகின்றன.** இதிலே **சிந்தின** என்கிற பதம்போன்ற ஒரு சொல் தமிழ்நடைக் கவசியம். முழு உடலையும் ஆசாரியர்கள் தின்ன முடியாமையால், மிச்சத்தைப் பாளையத்துக்கு வெளியே கொண்டுபோய் எரித்துப்போடுவார்கள். லேவி. 6. 30; 16. 27.

12. **நகரவாசலுக்கு.** (நகர) **வாசலுக்கு** என எழுதுக. **இரத்தத்தினாலே.** அல்லது இரத்தத்தின் மூலமாய் (தீத். 2. 14) அவர் நம்மைச் சகல அக்கிரமங்களினின்று மீட்டுக்கொண்டு, தமக்குரிய சொந்த ஜனங்களாகவும், நற்கிரியைகளைச் செய்ய பக்தி வைராக்கியமுள்ளவர்களாகவும் நம்மைச் சுத்திகரிக்கும்படி, நமக்காகத் தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்தார். **ஜனத்தை.** அவர் அடியாரை. **புறம்பே.** அதி. 9. 26; மத். 27. 32; யோ. 19. 17, 18 காண்க.

13. **சுமந்து. சுமந்துகொண்டு. அவரிடத்திற்கு.** அவரண்டை. **போகக்கடவோம். போவோமாக.** இது முழுவதும் உவமையலங்காரம். யூதமார்க்கானுசாரமாகிய நகரத்தையும் பாளையத்தையும் விட்டு (வெளி. 11. 8) நாம், இப்பொழுது அவர் இருக்கிற (அதி. 12. 2) உண்மையும் நித்தியமுமான (யாத். 33. 7, 8) கூடாரத்தண்டை செல்வோமாக. இந்த வார்த்தைகளினாலே யூதக் கிறிஸ்தவர்கள் எருசலேமை விட்டு ஓடிப்போகவேண்டுமென்கிறதாகச் சிலர் நினைக்கிறார்கள். அப்படிக்கொன்றும் இல்லை. கிறிஸ்தவர்கள் எந்நாளும் சிலுவையின் நிந்தையைச் சுமப்பார்கள். ஆதிச்சபையில் அவ்வாறே யிருந்தது. சிலுவை ரோமருக்கு நிந்தையா யிருந்தது மாத்திரமல்ல, யூதருக்கு

அது அகோரமான நிந்தையாயிருந்தது. சிலுவையி லறையுண்டவன் கடவுளால் சபிக்கப்பட்டவனென்ருர்கள். ரோம சாஸ்திரிகள், மந்திரிபிரதானிகள் அம்மரணத்தை மிக்க மானபங்கமான மரணமென மதித்தார்கள். ஒருவன் கிரிஸ்துவைக் "கழுவேற்றப்பட்ட சாஸ்திரி" எனத் தூஷித்தான்—நாமும் மீட்பரின் நிந்தையைச் சுமந்தவராய் ஜீவிப்போமாக. அதற்கஞ்சவும், விலகவும், வெட்கவும் ஒண்ணுது. அது நம்மைத் தற்பொழிவற்றவர்களும், தாழ்மையுற்றவர்களுமாகவும் ஒழுகிநடக்கத் தூண்டும்.

**14. நிலையான நகரம் இங்கு நமக்கில்லை.** அதி. 11. 10, 16 காண்க. இந்த நகரம் ஒருவேளை அழிக்கப்படும், அல்லது எதிரிகளால் பிடிக்கப்படும். ஒருவேளை நாம் இதை விட்டு இன்னெரு நகரம் போய்விட நேரிடும். நாம் இந்த உலக வாழ்வை நமது நிலையான நகரமென ஒருபோதும் எண்ணலாகாது. நம்முடைய குடியிருப்புப் பரலோகம் (பிலி. 3. 20). இங்கு நாம் பரதேசிகளும், பிரயாணிகளுமாயிருக்கிருேம்.

**15. அவருடைய—துதிக்கும்** மூ. **அவர் நாமத்தை அறிக்கையிடும் உதடுகளின் கனியை, அதாவது, ஸ்தோத்திரபலியை அவர் மூலமாய் நாம் கடவுளுக்கு இடைவிடாமற் செலுத்துவோமாக.** இங்கே மிருகபலி அன்று; இதழ்களிடுகிற ஸ்தோத்திரபலி கற்பித்திருக்கிறது. ரபிமார் முதலாய் இந்தப் பலியைத்தான் புகழ்ந்திருக்கிருர்கள். எரே. 17. 26; லேவி. 7. 12). இது கர்த்தருக்குக் கொம்புகளும் குளம்புகளுமுள்ள எருதின் பலியைவிட அதிகப் பிரீதியானது (சங். 69. 31) காண்க. **உதடுகளின் கனி.** எசா. 57. 19. அவ்வாறு ஓசியா 14. 2-இலும் நமது உதடுகளாகிய கன்றுகளைத் தருவோம் என்றுரைத்திருக்கிறது. துதியும் ஸ்தோத்திரமுமாகிய தேவாரங்கள் உதட்டினின்றும் ஒலித்தாலும், இருதயமே அவற்றுக்கு உற்பத்தி என்றறிக. பின் வரும் வாக்கியத்தில் பின்னுமோர் பலியைக் கூறுகிருர்.

**16. தானதர்மம் பண்ணவும்.** மூலத்தின் பிரகாரம், பகிர்ந்து கொடுக்க என்றிருக்கவேண்டும். இப்படி மூ. **இவ்விதப் பலிகளே கடவுளுக்கு மிக்க பிரியமானவை** எனத் திருத்துக. இவைகள்

ஸ்தோத்திர பலிகளிலுஞ் சிறந்தவை. ஹிந்துக்கள் கிரிஸ்தவர்களானால், இந்தப் போதனை அவர்களுக்கு அனுவசியம். தானதர்மஞ் செய்வது அவர்களுக் கியல்பு. மிஷன் தருமங்களினால் தற்காலக் கிரிஸ்தவர்கள் கொஞ்சம் கையழுத்தமாயிருக்கிறார்கள். மிஷன் தருமம் தொலைந்தால், சபையார்த் தருமம் செழிக்கும்.

17. **நடத்துகிறவர்கள்**—**ஆண்டு நடத்துகிறவர்கள்** என்று திருத்தினால்தான் மூலபதத்திற்குச் சரிவரும். வாக்கிய முழுவதையும்: **உங்களுக்குப் பிரயோசனப்படாத துக்கத்தோடல்ல, சந்தோஷத்தோடே கணக்கொப்புவிக்கும்படி உங்கள் ஆத்துமாக்களின் நிமித்தம் விழித்திருக்கிற உங்கள் அதிகாரிகள் சொற்கேட்டு அவர்களுக்கு அடங்குங்கள்** எனத் திருத்தலாம். **துக்கத்தோடே.** பெருமூச்சோடு இன்னொரு மொழிபெயர்ப்பு. இதை மேல் 7-ம் வாக்கியத்திற் சுருக்கமாய்க் கூறியிருக்கிறார். போதகன்மார் அதிகாரம் சபைகளுக்கு அத்தியாவசியமா யிருந்தபடியால் இதை இரண்டுதரம் ஸ்திரப்படுத்துகிறார் 1 தெச. 5. 12, 13; 1 தீமோ. 5. 17 காண்க. தற்காலம் ரோமான் சபை ஒன்றுதவிர, மற்ற சீர்திருத்தமடைந்த புரோட்டெஸ்டாண்ட் சபைகளிலே குரு அதிகாரம் குறைந்தேயிருக்கிறது. சபை விஷயங்களுக்காக குருமாரைக் கச்சேரியில் பிரியாதுசெய்யும் சபையாருமுண்டு. குரு அதிகாரம் குறைந்த சபையிலே சற்குரு வாசமும் குறைந்துவிடும். குரு பெருமூச்சுவிடத்தக்கதாய், சபையார் நடக்கலாகாது. **கணக்கொப்புவிக்கும்படி.** அப். 20. 26, 28. **சந்தோஷத்தோடே.** 1 தெச 2. 19, 20 காண்க. **பிரயோஜனமற்றது**—அதாவது, **பிரதிகூலமானது.** இது சபை ஆளுகை வாக்கியம்.

18. **எங்களுக்காக.** எனக்காகவும் என்னோடிருப்பவருக்காகவும். 1 தெச. 5. 25; 2 தெச. 3. 1; ரோ. 15. 30; எபே. 6. 18; கொலோ. 4. 3 காண்க. இது இயல்பும் சாதாரணமுமான வேண்டுகோள். கிரிஸ்தவர்கள் தங்கள் இனஜன பந்துக்களுக்காக மாத்திரமல்ல, தங்கள் குருக்கள்மாருக்காகவும் வேண்டிக்கொள்ளவேண்டும். பேரைச் சொல்லிப் பிரார்த்திப்பது பிரயோஜனப்படும் ஜெபமாலை. **யோக்கியமாய்.** இது பொதுவான சொல். **யதார்த்தமாய்** என மாற்றவேண்டும்.

19. **வேண்டிக்கொள்ளும்படி. செய்யவேண்டுமென்று. கேட்டுக்கொள்ளுகிறேன். எச்சரிக்கிறேன். வரும்படி—மீண்டும் வரும்படி** *என விரிக்கவும்.*

13. 20, 21.

20 *நித்திய உடன்படிக்கையின் இரத்தத்தினாலே ஆடுகளுடைய பெரிய மேய்ப்பரான நம்முடைய கர்த்தரா கிய இயேசுவை மரித்தோரிலிருந்து ஏறிவரப்பண்ணின*
21 *சமாதானத்தின் தேவன்,—இயேசுகிறிஸ்துவைக்கொண்டு தமக்கு முன்பாகப் பிரியமானதை உங்களில் நடப்பித்து, நீங்கள் தம்முடைய சித்தத்தின்படி செய்ய உங்களைச் சகலவித நற்கிரியையிலும் சீர்பொருந்தினவர்களாக்குவாராக; அவருக்கு என்றென்றைக்கும் மகிமை உண்டாவதாக. ஆமென்.*

**20, 21.** *இவ்விரண்டும் ஒரே வாக்கியம்.* **கடவுள்** *எழுவாய்;* **ஆக்குவாராக.** *பயனிலை.* **இரத்தத்தினாலே. இரத்தத்தோடே. ஆடுகளுடைய. ஆடுகளின்;** *அதாவது, சபையாரின், அடியாரின்.* **பெரிய—சிறந்த, பிரதான. ஏறிவரப்பண்ணின—மீண்டுங்கொண்டுவந்த** *எனத் திருத்தவும்.* (21). **இயேசுகிறிஸ்துவைக்கொண்டு.**—*மூலமாய்.* **நீங்கள்—ஆக்குவாராக. தமது பார்வையிற்பிரீதியானதை உங்களுக்குள் நடப்பித்து, தமது சித்தத்தைச் செய்யும்படி ஒவ்வொரு நற்காரியத்திலும் உங்களைப் பூரணப்படுத்துவாராக** *என மாற்றுக. அனைத்தும் ஓர் ஆசீர்வாதமாகிய ஜெபம். எம்பெருமான் உயிர்த்தெழுதலுக்கு இந்த வாக்கியமொன்றே இந்நிருபத்திற் சாட்சி.* **சமாதானத்தின் கடவுள்.** *உதாரணத்துக்கு:* 1 *தெச.* 5-23; 2 *தெச.* 3. 16; *ரோ.* 15-33; 16. 20; *பிலி.* 4. 9 *காண்க.* **நித்திய உடன்படிக்கையின் இரத்தம்.** *இதன் விளக்கத்துக்கு அதி.* 9. 15-18 *வாசித்துப்பாருங்கள். தாம் செலுத்தின பலியினாலே எம்பெருமான் பிரதான மேய்ப்பரானார். அவ்வாறே அப்.* 20. 28—*இலே "தமது சொந்த இரத்தத்தினாலே தமக்காகக்கொண்ட கடவுள் சபையை மேய்க்கும்படி" என்றுரைத்திருக்கிறது. சக.* 9. 11 *காண்க.* **அவருக் கென்றென்றைக்கும் மகிமை.** *இது சாதாரணமான திருச்சபை ஸ்துதி. கலா.* 1. 5;

2 தீமோ. 4, 18 காண்க. பேதுரு கிறிஸ்துவுக்கும் இதே தேவாரம் கூறுகிறார். 2 பேது. 3. 18.

13. 22, 23.

22 சகோதரரே, நான் சுருக்கமாய் உங்களுக்கு எழுதின இந்தப் புத்திமதியான வார்த்தைகளை நீங்கள் பொறுமையாய் ஏற்றுக்கொள்ளும்படி வேண்டிக்கொள்ளுகிறேன்.

23 சகோதரனாகிய தீமோத்தேயு விடுதலையாக்கப்பட்டானென்று அறிவீர்களாக; அவன் சீக்கிரமாய் வந்தால், அவனுடனேகூட நான் வந்து, உங்களைக் காண்பேன்.

22. **புத்திமதியான வார்த்தைகளை-புத்திமதியை** என்றாலுமே போதும். **சுருக்கமாய். கொஞ்சமான வார்த்தைகளிலே** எனத் திருத்துக. **நீங்கள்—கொள்ளுகிறேன். பொறுத்துக்கொள்ளும்படி உங்களை எச்சரிக்கிறேன்.** அப். 13. 15. நிருபத்தின் பல விடங்களில் நிருபாசிரியர் கண்டித் தெழுதினதற்கு மன்னிப்புக் கேட்டாற்போல. ஒரேமணி நேரத்திற்குள் வாசிக்கத்தக்க இந்த நிருபத்திலே ஈராயிர ஆண்டுகளாய்ப் பலனளிக்கத்தக்க பெரும்பொருளை அடக்கியது, திருவள்ளுவர் குறளிலும் சிறந்த குறளெனத்தகும்.

23. **சகோதரனாகிய.** நிருபாசிரியருக்கு நண்பனாயிருக்கவேண்டும். சிலகாலம் தீமோத்தேயு சிறையிற் கிடந்ததாகத் தோன்றுகிறது. பவுலை ரோமையிற் காணப்போன இவன் நீரோ ராயனால் சிறையில் வைக்கப்பட்டிருப்பான். ஆகிலும், அவன் வாலிபனும், நற்குணசாலியும், யாதொரு விசேஷமான குற்றமில்லாதவனுமாகையால், அவனை விடுதலை செய்திருப்பார்கள் என்றெண்ணவேண்டும். **அவனுடனேகூட நான் வந்து—நான் அவனோடு கூடவந்து** என மாற்றுக

13. 24, 25.

24 உங்களை நடத்துகிறவர்களையும், பரிசுத்தவான்கள் யாவரையும் வாழ்த்துங்கள். இத்தாலியா தேசத்தார் யாவரும் உங்களுக்கு வாழ்த்துதல் சொல்லுகிறார்கள்.

25 கிருபையானது உங்களனைவரோடுங்கூட இருப்பதாக. ஆமென்.

## முடிவான வாழ்த்தலும் ஆசீர்வாதமும்.

**24. உங்களை** *ம்.* **உங்கள் அதிகாரிகள் யாவரையும். பரிசுத்தவான்கள் யாவரையும்.** *இது குருமாருக்கும் சபையாருக்கும் அனுப்புகிற* **வந்தனம். யாவரும்.** *மூலத்திலில்லை.* **உங்களை வாழ்த்துகிறார்கள்** *எனத் திருத்துக. நிருபாசிரியர் இருந்த ஊரிலே சில இத்தாலியர் இருந்ததாக இதனால் பெறப்படுகிறது. அவர்கள் வந்தனத்தை விசேஷமாக அனுப்புகிறதினால், நிருபமெழுதப் பெற்றவர்கள் இத்தாலிய யூதரா யிருக்கவேண்டுமென்றும் எண்ணப்படுகிறது. தீமோத்தேயுவின் விடுதலையைப்பற்றி அறிவிக்கிறபடியால், நிருபாசிரியர் ரோமையிலிருந்து இந்நிருபத்தை எழுதி யனுப்பியிருக்க வேண்டுமென்றும் நினைக்க ஏதுவுண்டு.*

**25.** *இவ்வாக்கியம் சுருக்கமான ஆசீர்வாதம். கொலோ.* 4. 18; 1 *தீமோ.* 6. 21; 2 *தீமோ.* 4. 22; *தீத்து* 3. 15 *காண்க.* **கிருபையானது.** *எம்பெருமானின் அருட்பிரசாதம்.* **ஆமேன்.** *அப்படியே ஆகட்டும் என்ற பொருளுள்ள எபிரேய வார்த்தை. அதற்குச் சரியான வடமொழிப்பதம்: ததாஸ்து.*

**விருத்தியுரை முற்றிற்று.**



PRINTED AT THE S. P. C. K. PRESS, VEPERY, MADRAS—1917.